# கொலை மறுத்தல்
# வைராக்கிய சதகம்
# வைராக்கிய தீபம்
# அவிரோத உந்தியார்







ஆசிரியர்
தவத்திரு. சாந்தலிங்க அடிகளார்
உரையாசிரியர்
திருப்போரூர் தவத்திரு. சிதம்பர சுவாமிகள்

# அவிரோத உந்தியார்

ஆசிரியர்

**தவத்திரு. சாந்தலிங்க அடிகளார்**

உரையாசிரியர்

**திருப்போரூர் சிதம்பர சுவாமிகள்**




திருக்கயிலாய மரபு மெய்கண்டார் வழி வழி திருப்பேரூராதீனம் ஆதி குருமுதல்வர்

அருள்மிகு சாந்தலிங்கப் பெருமான், அருள்மிகு அம்பலவாணர் திருக்கோயில்களின்

திருநெறிய தெய்வத்தமிழ்த் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா

நினைவு வெளியீடு

05.03.2009

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | தவத்திரு சாந்தலிங்க அடிகளார் |
| உரையாசிரியர் | : | திருப்போரூர் தவத்திரு சிதம்பர சுவாமிகள் |
| **விலை** | **:** | **ரூ. 150** |
| மொழி | : | தமிழ் |
| தாள் | : | 70 ஜி.எஸ்.எம். மேப்லித்தோ |
| நூல் அளவு | : | டெம்மி 1 x 8 |
| எழுத்து | : | 10.5 பாயிண்ட் |
| கட்டமைப்பு | : | பெர்பக்ட் பைண்டிங் |
| பதிப்பாசிரியர் | : | தவத்திரு. மருதாசல அடிகளார் |
| வெளியீடு | : | சாந்தலிங்க அடிகளார் சத்வித்யா சன்மார்க்க சங்க அறக்கட்டளை, பேரூராதீனம், பேரூர், கோவை - 641 010 தொலைபேசி : 0422-2607995 |
| அச்சிட்டோர் | : | சௌமி பிரிண்டர்ஸ், 69டி, சிறுவாணி பிரதான சாலை பேரூர், கோவை - 10 அலைபேசி : 98422 52779 |

தவத்திரு

# சாந்தலிங்க அடிகளார்

வரலாறு

நமது தமிழ்நாட்டில் தலைசிறந்து விளங்கிய அருளாளர் பலர். அவருள் தவத்திரு சாந்தலிங்க சுவாமிகளும் ஒருவர். இவர் தொண்டை நாட்டில் தோன்றியவர் எனப் பெரியோர் கருதுகின்றனர். காலம் 17ஆம் நூற்றாண்டென்பர். வீரசைவ நெறியை மேற்கொண்டொழுகியவர்.

இவர் திருக்கயிலாய பரம்பரை, திருவாவடுதுறை ஆதீனத்தவரான துறையூர்ச் சிவப்பிரகாச தேசிகரிடம் உபதேசம் பெற்றவர்.

துறையூர்ச் சிவப்பிரகாச சுவாமிகள் நம் சாந்தலிங்க சுவாமிகளுக்குக் குரு என்பதை இவர் தம் நூலுள், தாளையே தரம் அறிகிலாது எமக்கு எளிதரு சிவப்பிரகாசர்க்கு ஆளியாம் எனத்திரிந்து அவர் பணிபுரிந்து அரிய வீட்டைகிலாய் (சதகம் 2) சிவப்பிரகாசவென் கண்மணிதனையுன்னாது (சதகம் 41), தில்லைப்பதிமேய சிவப்பிரகாசனேயோ (சதகம் தோத்திரம் 22) என் உளம்புக்க சிவப்பிரகாசன் என்கோ (சதகம் தோத்திரம் 49) சிவப்பிரகாச நாமம் கொண்டோங் குருவோடிவணுற்றெனையாண்ட கோவே (சதகம் தோத்திரம் 35) எனப் பல இடங்களில் கூறியுள்ளவற்றால் அறியலாம். தமது பரம்பரை திருக்கயிலாயப் பரம்பரை என்பதை

செப்பிரும் கைலைக் குருமுறை மையிற்றன்
சிரமிசைச் சரணம்வைத் துளவோர்

என்ற வைராக்கியதீப அடிகளால் அறியலாம்.

அக்காலத்தில் தமிழகத்தில் வீரசைவ நெறியைப் பேணி வளர்த்து வந்த ஆதீனங்களுள் பொம்மபுர ஆதீனம் சிறந்து விளங்கியது. அதில் சிவஞான பாலய சுவாமிகள் என்பார் எழுந்தருளி மக்களுக்கு அருள்வழங்கி வருவாராயினர். அவரைக் கண்டு அருள்பெறும்பொருட்டுச் சாந்தலிங்க சுவாமிகள் பொம்மபுரம் சென்றனர். செல்லும்வழியில் இவருக்குக் கற்பனைக் களஞ்சியமாகிய, துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளின் தொடர்பும் கிடைத்தது. இருவரும் பொம்மபுரம் சென்று சிவஞான

பாலய சுவாமிகளைக் கண்டு வணங்கி அருள் பெற்று மகிழ்ந்தனர்.

சிவஞான பாலய சுவாமிகளின் திருவருட் குறிப்பின்படி சிவப்பிரகாச சுவாமிகளின் தங்கை ஞானாம்பிகையம்மையைச் சாந்தலிங்க சுவாமிகள் திருமணம் செய்து கொண்டார்.

பின்னர் சாந்தலிங்க சுவாமிகள் பல தலங்களையும் வழிபட்டுக் கொங்குநாட்டையடைந்தார். கொங்கு நாட்டில் அவிநாசி முதலிய தலங்களை வழிபட்டு இறைவனுடைய திருவருட்குறிப்பின்படித் திருப்பேரூர் என்னும் தலத்தில் திருமடம் அமைத்துத் தங்கியிருந்தனர். சதகம் (47) தோத்திரப் பகுதியில் நள்ளாறுடையாய் அவிநாசி நயந்துளானே என்று கூறுகிறார்.இவர் அவிநாசியில் தங்கியிருந்ததாகவே வரலாறும் சிலர் எழுதியுள்ளனர். இறைவன் திருவருட்குறிப்பின்படியே திருப்பேரூரில் இவர் தங்கினார் என்பதை, அருளின் பிறவா நெறி கூட்டுவித்தாய், பிறவா நெறியாகிய தோர் திருப்பேரையா என்னும் சதகச் செய்யுட்களால் அறியலாம். பிறவாநெறி என்பது திருப்பேரூரின் பெயர்களுள் ஒன்று.

திருப்பேரூரில் இவர் தங்கியிருந்த காலத்தில் கன்னட நாட்டு மன்னர் ஒருவர் பக்குவமுடையராய்ச் சற்குருவைத் தேடிப் பல தலங்கட்கும் வந்தவர் திருப்பேரூரில் சாந்தலிங்க சுவாமிகளைக் கண்டு உபதேசம் பெற எண்ணினார். சுவாமிகளும் அவருடைய பக்குவநிலையைச் சோதித்தறிந்து உபதேசம் அருளி மாணாக்கராக்கிக் கொண்டனர். இவர்தாம் குமாரதேவர்.

பின் இக்குமாரதேவர் சாந்தலிங்கசுவாமிகளின் திருவுள்ளக் குறிப்பின்படிப் பல தலங்கட்கும் சென்றார். பெரிய நாயகியம்மையின் திருவருளால் திருமுதுகுன்றத்தில் (விருத்தாசலம்) தங்கிப் பல அன்பர்களுக்கு அருளுபதேசம் செய்து மகாராச துறவு முதலிய சாத்திரங்களையும் அருளித் திருவருளில் கலந்தார். குமாரதேவர் மடம் துறையூர் ஆதீனத்தின் ஆளுகையில் விருத்தாச்சலத்தில் சிறப்புடன் திகழ்கிறது.

சாந்தலிங்க சுவாமிகள் மக்கள் உய்யும் பொருட்டுக் கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என்னும் நூல்களை அருளிச் செய்தார். இவை முறையே சீவகாருணியத்தையும், ஈசுவர பத்தியையும், பாச வைராக்கியத்தையும், பிரம்ம ஞானத்தையும் உணர்த்துவன.

இந்நான்கு நூல்களையும் முத்திப்பெருவீட்டிற்கு நான்கு வாயில்களாக ஆன்றோர் கூறுவர்.

திருமுதுகுன்றத்தில் தங்கியிருந்த குமாரதேவருடைய திருவருளுக்கு ஆளானார் சிதம்பர தேசிகர் என்பார். அவரைக் குமாரதேவர் தம் குருவாகிய சாந்தலிங்க சுவாமிகளிடம் அழைத்து வந்தார். சிதம்பர சுவாமிகளுடைய மதி நுட்பத்தை உணர்ந்த சாந்தலிங்க சுவாமிகள் தாமியற்றிய நூல்களுக்கு உரை செய்யும்படிப் பணித்தார். சுவாமிகளின் குறிப்பின்படியே சிதம்பர சுவாமிகள் இந்நான்கு நூல்களுக்கும் உரையியற்றியருளினார். சாந்தலிங்க சுவாமிகளின் திருவுள்ளக் குறிப்பின்படிக் குமாரதேவர் சிதம்பர சுவாமிகளைத் தம் மாணாக்கராகக் கொண்டு உபதேசம் அருளினார்.

இச்சிதம்பர சுவாமிகள் மதுரை அங்கயற்கண்ணம்மையின் திருவருட் குறிப்பின்படித் திருப்போரூர் என்னும் தலத்தினையடைந்து அங்கு மறைந்து கிடந்த முருகப்பெருமான் கோவிலைப் புதுப்பித்து வழிபாடு செய்து அங்கேயே தங்கியிருந்தனர். திருப்போரூர் முருகன் மேலும் தம் ஆசிரியர் மேலும் பல பிரபந்தங்களை இயற்றினார். அவை திருப்போரூர் சந்நிதிமுறை என்று வழங்கப்படுகின்றன. கண்ணுடைய வள்ளலார் அருளிய ஒழிவில் ஒடுக்கம் என்னும் நூலுக்கும் உரை செய்தார். இவருடைய திருமடம் இன்றும் திருப்போரூரில் சிறப்புடன் விளங்குகின்றது.

சாந்தலிங்க சுவாமிகளின் தொடர்பால் சிதம்பரம் மௌன சுவாமிகள் வீரசைவநெறியை மேற்கொண்டனர்.

மாணாக்கர் பலர் நம் சுவாமிகள் துறவுநெறியை வற்புறுத்தும் நூல்களை அருளியும் - அவற்றை நமக்குப் போதித்தும் தாம் மட்டும் இல்லறநெறியில் இருக்கின்றாரே என்று மனத்தில் எண்ணினர். அதையுணர்ந்த சுவாமிகள் ஒரு நாள் தம் துணைவியாராகிய ஞானாம்பிகையம்மையையும் உடனிருத்தி மாணாக்கர்க்குப் பாடஞ் சொன்னார். அப்போது சுவாமிகளும் அம்மையாரும் மாணாக்கர்க்கு இறைவனும் இறைவியுமாகவே காட்சியளித்தனர். அக்காட்சியைக் கண்ட மாணாக்கர் தாம் நினைத்த பிழைக்கு மிகவும் நாணி வருந்தித் தம் பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டினர்.

ஒரு நாள் சுவாமிகள் இல்லறத்தினின்றும் நீங்கித் துறவு கொள்ள எண்ணினார். இதற்கு இறைவன் திருவுள்ளக் குறிப்பையும் அறிய விரும்பினார். அன்று பிச்சைக்குச் செல்லுகின்ற காலத்துப் பாலன்னம் கிடைத்தால் துறவு மேற்கொள்வோம் என எண்ணி இறைவனைச் சிந்தித்துப் பிச்சைக்குச் சென்றனர். திருவருளும் அவ்வாறே இருந்தது. அன்றிலிருந்து முழுத்துறவினை மேற்கொண்டார்.

சுவாமிகள் தில்லை நடராசப்பெருமானிடத்தில் உளம் ஒன்றியிருந்தனர். இறைவன் உமையம்மையுடன் இடப வாகனத்திவர்ந்து இவருக்குக் காட்சியளித்தான். சுவாமிகள் தாம் கண்ட காட்சியைத் தம் நூலுள் பல இடங்களிற் கூறியுள்ளார். அவை,

பிரானே திருத்தில்லையுளாய் அன்றிப் பேதையேன்முன்
ஓரானேறிவர்ந் தம்பிகையோடெளி தோடி வந்தாய்
வாரானோவினம் எம்மிறை என்றுனை நாடிவாடி
இரா நாயடியேற் கெதிர் தோன்றிலை இன்றிதென்னே (சதகம்)

ஆனேறிவர்ந் தென்னெதிரே விரைந்து அன்று வந்தோய்க்கு
ஏனோ வெறுப்பு இப்பொழுது ஓர் சற்றிரங்கு கில்லாய் (சதகம்)

என்பன. இங்ஙனம் பலவகையில் சிறப்புற்று விளங்கிய சுவாமிகள் ஒரு மாசித் திங்கள் மக நாளில் சிவலிங்க ஐக்கியம் கூடினர். இவர்களுடைய வரலாறும், குமாரதேவர், சிதம்பர சுவாமிகள் வரலாறுகளும் தண்டபாணி சுவாமிகள் பாடிய புலவர் புராணத்தில் உள்ளன. சிரவணபுரம் கௌமார மடாலயம் அருண்மிகு கந்தசாமி சுவாமிகள் சாந்தலிங்க சுவாமிகளுக்குப் பிள்ளைத்தமிழ் நூல் பாடியுள்ளார்.

சுவாமிகளுடைய சமாதித் திருக்கோயிலும், திருமடமும் திருப்பேரூரில் பட்டிப்பெருமான் திருக்கோயிலுக்குக் கிழக்கே நொய்யலாற்றங் கரையில் அமைந்துள்ளன.

## பதிப்புரை

ஞானகுரு கயிலாயப் பரம்பரையில் வந்த திரு
மோனகுரு முத்தமிழில் முத்திதரு நால்வேத
ஞானமொழி யாத்தகுரு சாந்தலிங்க மரபினுக்கு
ஆனகுரு எம்மிதயத் தாமரையில் இருந்தசிவமே.

முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு இக்கன்ம பூமியில் மானுட உருத்தாங்கி நடந்து மாதவஞ் செய்து, மக்களின் மனமாசுகளைப் போக்கச் சாந்தலிங்கப் பெருமான் அருளிய நூல்கள் நான்கு, அவற்றுள் "அவிரோத உந்தியார்" எனும் நூல் மூவடிகளால் இயன்ற சந்தநயம் மிக்க மெய்ப்பொருள் விளக்கமாக அமைந்துள்ளது.

"உந்தி" என்பது மகளிர் விளையாடும் விளையாட்டுகளில் ஒன்றனைக் குறிப்பதாகும். மகளிர் ஆடல்கள் பலவற்றைத் தமது திருவாக்குகளுக்கு மணிவாசகப்பெருமான் பயன்படுத்துகின்றார். அவற்றுள் திருவுந்தியார் எனப் பெயரிய இவ்வாடலும் இடம் பெறுகின்றது. அவ்வகையில் சாந்தலிங்கரும் உந்தி ஆடலை எடுத்துக்கொண்டு அவிரோத உந்தியாரைப் படைத்து அருளுகின்றார். அவிரோதம் என்பதனை அ+விரோதம் எனக்கொண்டு விரோதமின்மை, மாறுபாடின்மை, முரண்பாடின்மை எனக் கொள்ளலாம். ஆயின், எதற்கு முரண்பாடு அல்லது மாறுபாடு இன்மை எனக் கூறப் பெறுகின்றது? என்ற வினா எழுகின்றது.

பிரபஞ்ச ஆக்க, இயக்கத்தில் வளர்ச்சி அல்லது பரிணாமம் என்பது இயல்பானதொருமாற்றம், அவ்வகையில் பருப்பொருட்களாகட்டும் உயிர்ப் பொருட்களாகட்டும் பல வளர்சிதை மாற்றங்களை அடைகின்றன. டார்வின் என்ற அறிவியலாளர் புறமாற்றங்களைக் குறித்து தமது கொள்கைகளை வெளியிட்டார். ஆனால் நமது நிறைமொழி மாந்தர்களான தொல்காப்பியர் முதலானோர் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரையிலான உயிர்ப் பரிணாமத்தை விளக்கினர். இங்கு பரிணாமம் என்பது உயிர்களின் அறிவு விளக்கம், மாணிக்கவாசகரும் புல் பூண்டு முதலானவற்றிலிருந்து வருகின்ற

அறிவு விளக்கம் பெறும் ஆன்மப்பரிணாமத்தைச் சிவபுராணத்துள் விளக்கிச் செல்லுகின்றமையைக் காணுகின்றோம்.

இத்தகு பரிணாமத்தை அதாவது வளர்நிலை மாற்றங்களை மனித வர்க்கத்தின் நாகரிகத்திலும் அவர் தம் கருத்துருவாக்க நிலைகளிலும் ஞான மார்க்கத்திலும் காணுகின்றோம். ஞானிகளிலும் பல படித்தரங்களில் நிற்பவர்களைக் காணலாம். இத்தகு வளர்நிலை அதாவது படித்தரம் முழுமைக்கு மாறுபாடானதோ முரண்பாடானதோ அல்ல. அவை விரோதமானவை அல்ல. அவை அவிரோதமானவையே. ஏனெனில் முழுமைக்குள் படி நிலைகள் அடங்கிப் போய்விடுகின்றன.

மேற்கண்ட கருத்துக்களை நுணுகி ஆராய்ந்தால் அவிரோத உந்தியாரின் அருமை நமக்குப் புலப்படும். மனித வர்க்கம் என்றும் ஆராய்ந்த வண்ணமிருப்பது மூன்று பொருள்களைப் பற்றியே ஆம். அவை 1. காணப்படும் பொருட்பிரபஞ்சம் 2. அதனைக் காணுகின்ற உயிர்வர்க்கம் 3. காணப்படும் பிரபஞ்சத்தையும் காணும் உயிர்த் தொகையையும் இணைக்கும் சக்தி என்பனவாம் . இவற்றுள் அறிவுக் கூறற்ற பொருட்பிரபஞ்சமும், குறையறிவுடைய உயிர்த் தொகுதியும் ஒன்றை ஒன்று காரணகாரியப் பிணைப்பை உருவாக்கிக் கொள்ளமுடியாதாகையால் அப்பிணைப்பினை உருவாக்கக் கூடிய முற்றுணர்வும் முழுமையாற்றலுமுடைய ஒரு பொருள் இருந்தே ஆகவேண்டும். இதனை,

நிருமலம் பூரணம் நித்தம் ஆதி நீங்காது
ஒரு பரந்தான் உளது உந்தீபற
உலகங்கள் தோற்றலான் உந்தீபற (37)

எனும் திருப்பாடலால் சாந்தலிங்கப் பெருமான் விளக்கி அருளுகின்றார்.

இனி, மேற்குறிப்பிட்ட முப்பொருளுண்மைக்கு உலகில் தோன்றியுள்ள பல சமயங்களும் தத்தமக்குத் தோன்றியவாறு விளக்கங்களைக் கூறி நிற்கின்றன. அவை அனைத்தையும் பல படித்தரங்களாக அவிரோதமாக ஏற்றுக்கொண்ட சித்தாந்தமே முடிந்த பொருளைத் தரவல்லதாய் அமைகின்றது, இதனை,

ஆறு நெறிக்கும் அவிரோத போதமே
தேறும் மெய்ஞ் ஞானிஎன்று உந்தீபற
சித்தாந்தம் ஆகும் அது உந்தீபற (35)

என அவிரோத உந்தியார் விளக்குகின்றது. எனவேதான் இந்நூல்,

தவிரா விரோத சமயநூல் அன்றால்
அவிரோத உந்தியென்று உந்தீபற
ஆம்இந்நூல் நாமம் என்று உந்தீபற (2)

என, அவிரோத உந்தியார் எனப் பெயர் பெறுகின்றமைக்கு உரியதாகின்றது.

அறம் பொருள் இன்பம் வீடு எனப்படும் நான்கு உறுதிப் பொருட்களில் சிறந்த பயன் வீடு. ஆதலால் பெற்ற அறிவால் பெறும் பயன் ஓதும் வீடே ஆம். இதனை ஞானத்தன்றி மேவொணாது. ஆகையால் அதனைக் கூடுவோன் கோதில் மெய்ஞ்ஞானியாவான்.

இத்தகு மெய்ஞ்ஞானியாதற்குத் தடையாய் அமையும் உலக பந்தங்களினின்றும் விடுதலை பெற வேண்டும். சாதி, சமயம், பெண்ணாசை முதலானவற்றைக் களைதல் வேண்டும். இத்தடைகளைக் கடந்த முத்தான்மாக்களுக்கு, பெத்தர்க்குச் சிவம் தோன்றாதது போல உலகந் தோன்றுதல் இல்லை என்றிவ்வாறு விளக்கியருளிய சாந்தலிங்கப்பெருமான் நிட்டையிரும் முறையினையும் நிட்டை கூடுதற்குரிய உபாயங்களையும் ஓதியருள்கின்றார். கேவல நிலையிலும் சுத்த நிலையிலும் இருவேறு எல்லைகளில் நிற்கும் ஆன்ம நிலையினை,

ஒன்றிய கேவலம் என்றே உனத்தகும்
துன்று இருள் ஒன்று இலாது உந்தீபற
சுத்தம் இதுஆயது என்று உந்தீபற (71)

என ஒத்தநிலை போலப் பேசுதல் இலக்கியநயத்தினை விளைவிப்பதாகும்.

பாராதி எட்டும் அப்பாலும் எப்பாலுமாய், ஓர் சோதியாய் எல்லாமாய் நிற்கும் சிவபரத்தைப் பாவனாநிட்டையாகிய

மகாயோகத்தின் மூலம் அடைய அரிதாயின் தாம் கொண்டருளிய குருவடிவத்தை இதயத்தினுள்ளே தியானம் செய்து பிரணவத்தை உச்சரிக்க வேண்டும் என்பது சாந்தலிங்கம்.

கொள்ளரிதேல் அக்குறி எமது இவ்வுரு
உள்ளத்தின்உள்ளே வைத்து உந்தீபற
ஓங்காரம் உச்சரி உந்தீபற (80)

இவ்வரிய முயற்சியில் ஆன்மாவிற்கு உய்தியளிப்பது அன்பொன்றேயாம். ஐம்புலன் வழிச் செல்லாது வேண்டுதல் வேண்டாமையற்று நிற்கும் ஞானியற்கு விரோத உணர்வு தோன்றுதல் இல்லை.

அவிரோத உந்தியார் எனும் இஞ்ஞானப்பனுவலை உலகம் ஓதி உணரும் நாளே உய்தி பெரும் நாளாம்.

சாந்தலிங்கப்பெருமான் தண்மலர்த்தாள் வாழ்க

திருச்சிற்றம்பலம்

பேராசிரியர். முனைவர் கா. அரங்கசாமி
தாராபுரம்

## அணிந்துரை

எல்லா முடையான் குருவாகி ஈங்கெமது
அல்லல் அறுத்தான் என்று உந்தீபற
அவன்தாள் தொழுவாம் என்று உந்தீபற

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கி.பி. பதினேழாம் நூற்றாண்டில் கொங்குவள நாட்டினிடை மேலைச்சிதம்பரமாம் பேரூரில், சீலத்தர் போற்றத் திருமடஞ் செய்து , இன்குணத்துத் தொண்டரினஞ் சூழஆங்கிருந்து, நன்குமுத்தி வீட்டிலுறு நான்குபெரு வாயில்களே எனப்போற்றிடும் நூல்கள் நான்கு செய்தருளினார், அந்நான்கு நூல்களின் பெருமைகளை புலவர் புராணமுடையார் ,

கூச ல்அறக்கருணை கூட்டும் கொலைமறுப்பும்
ஈசனது பத்திக்கு இனிதாம் சதகமும்பொய்ப்
பாச முழுதும் பறித்தெரியுந் தீபமுநெஞ்
சூசனிக ராட்டொழிக்கு முத்தியுமா நூற்பெயரே

என எடுத்தோதினார்.

நம் இந்தியத் திருநாட்டைப் புண்ணியபூமி என்று கூறுவர். ஏனெனில் பரதகண்டமாகிய இந்நாட்டிலேயே "பிரமானுபவப் பிரமஞான விசாரப் பெரியோர்" அதிகமாகத் தோன்றினர். தோன்றித் தம் அனுபவத்தை, நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்னும் கருணை கொண்டு நூன்முகமாகவும் உபதேசவாயிலாகவும் உலகினருக்கு உபரித்துள்ளனர். அவர்கள் அனைவரும் புலவுத் துறந்த நோன்புடையரா ஆகலின் அவர்களுடைய வாக்குப் பொய்கலவா மெய்யே.

"ஓதுசமயங்கள் பொருளுணரும் நூல்கள் ஒன்றோடு ஒன்று ஒவ்வாமல் உளபலவும் இவற்றுள் யாதுசமயம் ? பொருள் ? நூல் ஆதிங்கு என்னில், இதுவாகும் அதுவல்லது எனும் பிணக்கினைத் தெளிந்து, நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காணநின்றது. யாதஒரு சமயம் அதுசமயம் அது பொருள் , நூல் என எடுத்துக் கூறி, நூல்களில் காணவரும் சிற்சில கொள்கை வேறுபாடுகளைக் களையும் பொதுமை நெறிகளும் ஆன்றோராற் காட்டப்பட்டுள்ளன.

வேதாகமங்களைப் பிரமாணமாகக் கொண்ட சித்தாந்த சைவமே இந்தப் பொதுமையைக் காணுவதில் முன்னின்றது. வேதாந்தத்தீதில் பொருள் கொண்டுரைக்குநூல் சைவம் (சிவஞான சித்தியார், "வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்" (சிவப்பிரகாசம் ) , வீடு வைதிக சைவம் பகரும் எனச் சித்தாந்த சாத்திரங்கள் வேத ஆகமங்களிடையே பேதமின்மையைக் கண்டன . வேதாகமங்கள் கூறிய ஞானானந்த அனுபவத்தை வலியுறுத்தும் நூல்கள் ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மலாபம், எனவும் ஆன்மரூபம், ஆன்ம தரிசனம் , ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் எனச் சிவானந்த மேலீட்டை அடையும் வழியும் அனுபவ பேதங்களும் அந்நூல்களில் பேசப்பட்டன

பிற்றை நாளில் தாயுமானவர் போன்றரால் "வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை" வலியுறுத்தப்பட்டது. சமரசம் அல்லது சமத்துவம் என்பதற்குச் சித்தாந்தம் கூறும் பொருள் அறியத்தக்து, சீவனும் சிவனும் ஒன்று இரண்டு என்று சொல்லுதற்கு ஏலாததாகிச் சுவானுபூதியில் ஒன்றும் இரண்டும் உள்ளதாகி நின்ற சமநிலையையே தாயுமானார் சமரசம் சமத்துவம் என்ற சொற்களால் உணர்த்தினார். (எந்நாள் கண்ணி, நிற்குநிலை - 15, 16) இந்தச் சமத்துவத்தை அருணகிரிநாதர் , "நேராக வாழ்வது" என்று கூறினார். முப்பத்தாறு கருவிக் கூட்டங்களிலேயே சமயக் கூட்டம் அனைத்தும் நிலை பெறுமாதலால், தாயுமானார் , "சைவமுதல் அளவில் சமயமும் வகுத்துமேற் சமயங் கடந்த மோன வாழ்வு சமரசம் வகுத்தநீ" என மற்றொரு கோட்பாட்டினையும் சித்தாந்தசைவத்தின் வழி வகுத்து ஓதினார் , இந்த மோன வாழ்வுதான் சமயாதீதம் , இதுவே சும்மாவிருத்தல் எனும் சுவானுபூதி. (பாம்பன் சுவாமிகள் . பரிபூரணானந்தபோதம் பக் 60)

"சைவ சமயமே சமயம்" எனத் தேற்று ஏகாரம் இட்டுக் கூறிய தாயுமானார், இச்சைவமே, "சமயாதீதப் பொருளைக் கைவந்திடவே மன்றுள்வெளி காட்டும்" என்றும் உரைத்தருளினார். சைவசமயம் என்பது தளிர்த்துப் பூத்துக் காய்க்குமொரு மரம் ஒக்கும். சமயாதீதம் என்பது. அம்மரத்தில் பழுக்கும் பழம் கொம்பினைவிட்டு நீங்கி அனுபவிப்பார்க்கு அனுபவப் பொருளாதல் ஒக்கும். சமயத்தின் வழி நின்று மெய்ப்பொருள் உணர்ந்து , அச்சமய அபிமானத்தையும் விட்டு

நீங்கினாருக்கே நிரதிசயானந்தம் கூடும். சமயத்தின் வழி மெய்ப்பொருளை உணர்ந்த மெய்ஞ்ஞானிகளுக்கு உறங்கினான் கையிற் பொருள்போல சமயாச்சாரமும் விட்டு நீங்கும் . அவர்கள் எச்சமயாபிமானமும் பற்றி நிற்பதில்லை . இந்த அவிரோத நிலையை , அடிகளார்,

எல்லாச் சமயத்து இயல்பும் அறிந்தவர்
நில்லார் அவற்றூடு என்று உந்தீபற
நீங்கில் பழியாது என்று உந்தீபற(31)

என வலியுறுத்தினார்.

வேதாந்த சித்தாந்த சமரசம் இத்தகைய மிக அருமையான கோட்பாடுகளைத் தமிழ்த் தத்துவ உலகுக்கு அளித்தது. மெய்கண்டசந்தானத்தில் வந்த சீர்காழிச் சிற்றம்பலநாடிகளின் மாணாக்கரின் வழியில் வந்த காழிக்கண்ணுடைய வள்ளல் என்பார் வழியில் வள்ளலார்சந்தானம் என்னும் மரபு உருவாகியது. இக்காலத்தில் சித்தாந்த சைவம் ஐக்கியவாத சைவம், வேதாந்தம் மூன்றையும் இணைக்கும் முயற்சி தோன்றியது .

வீரசைவத்தைத் தழுவிய துறையூர் சிவப்பிரகாசரின் மாணாக்கராகிய தவத்திரு சாந்தலிங்க அடிகள் பெருமானும் சமயங்களுக்கிடையே பிணக்கும் நீக்கும் கோட்பாட்டினை உருவாக்கும் நிலையில் "அவிரோதம்" என்பதொரு அரிய கோட்பாட்டினை வகுத்து உபகரித்தார் .

சாந்தலிங்க அடிகளாரின் மரபின் வந்தவரும் அவிரோத உந்தியார் என்னும் இந்நூலின் உரையாசிரியருமாகிய திருப்போரூர் சிதம்பரசுவாமிகள் , இந்நூலின் பாயிரத்தில் "மறைநெறி ஆகமநெறி யொன்றெனக் காட்டும் வீரசைவத் தொன்னெறி" என்று கூறுவதால் இம்மூன்று நெறிகளையும் இணைக்கும் முயற்சி தெளிவாகின்றது.

இம்மூன்றுநெறிகளுக்கும் மேல் கடவுள் ஒருவர் உண்டு என்ற கொள்கையை உடைய ஆத்திக மதங்கள் அனைத்தையும் தன்னுட் கொண்ட பொதுமைநெறியைக் கண்டார் சாந்தலிங்கர். தத்தம் சமயக் கோட்பாடுகளைக் கூறும் நூல்கள் அனைத்தும் ஏதோவொரு விதத்தில் ஒன்றற்கொன்று விரோதப்படும். அத்தகைய விரோதமில்லாத கோட்பாட்டினைக் கூறுவதால்

இந்நூலுக்கு "அவிரோத உந்தியார்" என்று பெயர் என்று இந்நூற்குப் பெயர் வந்த காரணத்தை ஓதினார்.

தவிரா விரோத சமயநூல் அன்றால்
அவிரோத உந்தியென்(று) உந்தீபற
ஆம்இந்நூல் நாமம்என்(று) உந்தீபற(2)

சமயங்கள் ஏகம், துவிதம், அத்துவிதம் என்றும் பேதம் அபேதம் பேதாபேதம் என்றும் அவற்றைக் கூறும் நூல்களாலும் நூல்களுக்கு எழுந்த உரைகளாலுமே வேறுபட்டு நிற்கின்றன. இப்படிக் கூறி வாதிட்டு நிற்கும் சமயங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு குறையுண்டு. சமயங்கள் அனைத்தும் இறைவனின் சம்மதப்பட்டுத் தோன்றினவையேயாம், ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு சமயம் இறையருளால் மேம்பட்டுத் தோன்றும். அதனை எடுத்துப் பேசுவோரால் பிரகாசப்பட்டுத் தோன்றும்.

சமயக் கோட்பாட்டினை எடுத்து வாதிப்போருக்கு வெற்றிதோல்வி கூறப்படுமேயன்றி அவற்றின் இடையே உயர்வு தாழ்வு என்பது இல்லை. இவ்வாறு விளக்கிய சாந்தலிங்க அடிகளார் அவிரோதம் என்னும் பொது நிலையை உருவாக்கினார். (அவிரோத உந்தியார் 26 முதல் 30)

சாந்தலிங்க அடிகளார் எடுத்து இயம்பும் அவிரோதம் என்னும் பொதுமை நிலையைப் பேரா,வை.இரத்தின சபாபதி அவர்கள் இரத்தினச் சுருக்கமாக மூன்றாம் பதிப்பு அணிந்துரையில் கூறியுள்ளார்கள். "சாந்தலிங்கரின் பொதுமையில் தனிமைகள் இல்லாதன வல்ல. தனிமைகளைத் தொட்டு, தனிமைகள் வாழ வகை செய்து தனிமைகளைக் கடந்து நின்ற பொதுமைப் பெருநிலை இது. தனிமைகள் உணராத நிலையில் தனிமைகளைக் கடந்த பொதுமை நிலையே அவிரோதம்".

எல்லாப் பற்றுக்களையும் விடுதலாகிய சர்வசங்கப் பரித்தியாகத்தின் எய்துவது முத்தி. அம்முத்தி நித்திய பூரண நிரதிசயானந்தத்தை உடையது. அதுவே உயிர்கள் எய்துவதற்குரிய வீடுபேறு என்று வேதம் முதலிய நூல்கள் கூறும். ஞானம் ஒன்றே முத்திக்கு ஏது. முத்தியாகிய பேரானந்தத்தைக் கூடியவன் மெய்யுணர்வுடைய ஞானி. ஏனைய சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்றும் ஞானம் மருவுவதற்கு ஏதுவான சாதனங்கள், "யான்" "எனது" என்ற செருக்கை ஒழித்தவனே

எனும் மெய்யுணர்வுடைய ஞானி. அவனே முத்திப் பேற்றுக்குரியவன். எனவே , பொருளாராய்ச்சியையும் சமய ஆராய்ச்சியையும் விட்டு. இறைசொரூபத்தை அனுபவிக்க ஞானநிட்டை மேற்கொள்ள வேண்டும் என்றும் ஞானம் பெறுதற்குத் தடையாக நிற்கும் யான் எனது எனும் செறுக்கு ஒழிக்கும் எந்த நிட்டையாயினும் தமக்குச் சம்மதமே என்றார் , சாந்தலிங்க அடிகளார் .

எம்மதத் தோர்எவ் வகைநிட்டை சொல்லினும்
சம்மதமே எமக்கு உந்தீபற
தற்போத மாய்க்குமேல் உந்தீபற(66)

என நிட்டையை, வலியுறுத்திய அடிகளார் அதில் தம் அவிரோதக் கோட்பாட்டையும் ஓதினார்.தமிழகத்துச் சைவ சித்தாந்த நெறியினர் பொதுமை நிலையை விரும்பி ஏற்புடைய அளவில் திருமுறைகளோடு வேதாகமப் பிரமாணங்களையும் தழுவிக் கொண்டனர் . உமாபதி சிவாச்சாரியார் முதலியோர் "வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தம்" எனப் பேசினர். விரும்பினர் . தமிழ்நாட்டு வீரசைவம் சித்தாந்த சைவத்துடன் பெரிதும் இணைந்தது.வேதாந்தம் அகம்பிரம வாதத்தைக் கடந்து சித்தாந்தத்துடன் கலந்தது. தாயுமான அடிகள் வேதாந்த சித்தாந்த சமரசநிலையைப் பேசினார். அத்துடன் சமயாதீதம் , சமயங்கடந்த மோனம் எனும் கருத்துக்களும் சித்தாந்தநெறியில் இடம் பெறலாயின. "வாதமும் சமய பேதமுங் கடந்த, மனோலய வின்பசா கரமே" என மனோலயத்தை வற்புறுத்தினார் பட்டினத்தடிகள் . அதன்பின் சாந்தலிங்க அடிகளாரின் அவிரோதம் எனும் பொதுநிலை வளர்ச்சி எய்தியது . இராமலிங்க அடிகளார் எல்லாச் சமயங்களின் முடிவாகிய அந்தங்களையும் கடந்த மேனிலையில் உள்ளது சமரச சன்மார்க்கம் எனப் பேசினார்.

நமக்கு மிகவும் அண்மைக்காலத்தில் வாழ்ந்த ஞானி சந்தமறையும் தமிழும்தேர் தன்னேரிலாக் குமரகுருதாச சுவாமிகள், பரமான்மா அளவையுட்படாதவன் . பிறப்பிலி , தருக்கத்தினால் இந்நீர்மையன் என நிச்சயிக்கப் படாதவன், சிந்திப்புக் கெட்டாதவன் . எனவே, "சுவானுபூதி" நீத்துத் தன்னையே பெரிய தெய்வமாகக் கூறிக் கொள்ளும் ஏகவாதம் இழிந்தது ஆண்டான் அடிமையாகக் கூறிக்கொள்ளும் துவைதம் சிறந்தது. இதனினுஞ் சிறந்தது சம்பந்தப் பொருள் பயக்கும் அத்துவிதம், இதனினுஞ்

சிறந்தது இறைவனது மோன முத்திரையின் இறுத்தல் எனா வெமது முடிவான சித்தாந்தம் என்றார். இந்த சமரச மோனம், சும்மாவிரு சொல்லற எனக் கந்தரனுபூதியிலும், ஏகமிரண் டென்னாமற் சும்மாவிரு என ஒழிவிலொடுக்கத்திலும், மோனமென்பது ஞான வரம்பு எனக்கொன்றை வேந்தனிலும் மோனமாகிய பொது நிலை கூறப்பட்டது.

காலந்தோறும் சைவ சித்தாந்த நெறியினர் சமயப் பொதுநிலையைக் கண்டு வந்துளரேனும், சாந்தலிங்க அடிகளாரே சமயப்பொதுநிலையை வலியுறுத்தும் "அவிரோத உந்தியார்" எனும் இத்தனியொரு நூலை உலகுக்கு அருளியவர். இந்த சிறந்த சாத்திரம் இதுவரையில் நான்கு பதிப்புகள் வெளிவந்துள்ளன. ஐந்தாவது பதிப்பு இப்பொழுது வெளி வருகின்றது.

சமயச் சண்டைகளும் குழப்பங்களும் நிறைந்த இக்காலத்தில் ஆன்மீக நாட்டங் கொண்டோருக்கு அவிரோத உந்தியார் மன அமைதியும் வழியும் காட்டும் என்பது உறுதி.

தவத்திரு. சித்தர் சுவாமிகள்
சிவக்குடில்,
கோவைபுதூர்,
கோயமுத்தூர்

## கணபதி வணக்கம்

[1]சமரபுரி மா[2]நிம்பத் தண்ணிழற்பாலும்பல்
அமரர் தொழவிருந்து அன்றித் - [3]திமிரமலம்
போக்கிஎம துள்ளின்பப் பூரணமா எவ்விடத்துந்
தேக்கறிவு மாய் இருந்ததே

## முருகக் கடவுள் வணக்கம்

உலகமெலாம் ஈன்ற ஒருத்திதனப் பால் உண்(டு)
இலகு கவிதைமழை ஈசன் - னிலவு
புயமலைப்பாற் பெய்தசுகப் போரூர்வாழ் வான் அம்
புயமலர்த்தா எம்முடிக்குப் போது.

*(உமையம்மை நல்கிய ஞானப்பாலினை அருந்தி தமிழ்மறையைத்தந்த ஞானசம்பந்தராக வந்தவர் முருகன்)*

## நூலாசிரியர் பெயர்

பன்னெறியில் இகல்விளைக்கும் பலசமயத்
  தவரும்முத்தி பதத்திற்(கு) ஈது
நன்னெறியென்று உய்யஅவி ரோதஉந்தி
  யார் எனும்நூல் நல்கி னானால்
வெண்னெறிதேர் மறைநெறி ஆகமநெறிஒன்(று)
  எனக்காட்டும் வீர சைவத்
தொன்னெறி மாகேசன் எங்கள் சாந்தலிங்க
  தேசிகனாம் தூயோன் தானே.

---

*1 - போரூர், 2 - வேம்படி விநாயகர், 3 - இருண்மலம்*

## நூல்

எல்லா முடையான் குருவாகி யீங்கெம
தல்லல் யறுத்தானென் றுந்தீபற
அவன்றா டொழுவாமென் றுந்தீபற 1

*எல்லாம் உடையான் குருவாகி ஈங்கெம(து)*
*அல்லல் அறுத்தான் என்(று) உந்தீபற*
*அவன்தாள் தொழுவாம்என்(று) உந்தீபற*

என்பது - சொல்லுவார் சொல்லும் வண்ணங்கள் அனைத்தையும் உடைய ஒரு பூரணன் (முழு முதல்) குரு வடிவமாகி இவ்விடத்தில் தோன்றி ஒன்றுக்கும் பற்றாத எம்முடைய பிறவித் துன்பத்தை வேரறுத்து அருளினன்; அக்கருணை மூர்த்தியினது திருவடிகளைத் தொழுதல் செய்வாம் என்றவாறு.

சொல்லுவார் ஒன்றை ஒன்று ஒவ்வாத சமயவாதிகள், வண்ணங்கள் அனைத்தும் என்றது - உருவெனல், அருவெனல், ஒன்றெனல், பலவெனல், உளதெனல், இலதெனல், முதலியவற்றை. உந்தி என்றது குழாம் கூடிய மகளிரது ஒரு விளையாட்டு எனக் கொள்க.

இது கடவுள் வணக்கம் கூறியது.

தவிரா விரோத சமயநூல ன்றா
லவிரோத வுந்தியென் றுந்தீபற
ஆமிந்நூ னாமமென் றுந்தீபற 2

*தவிரா விரோத சமயநூல் அன்றால்*
*அவிரோத உந்தியென்(று) உந்தீபற*
*ஆம்இந்நூல் நாமம்என்(று) உந்தீபற*

என்பது - ஒன்றுக்கு ஒன்று மாறாத விரோதத்தினை உடைய சமயநூல்களில் இஃதும் ஒன்று அன்று; ஆதலால், அவிரோத உந்தி என்று வழங்குதற்கு உரித்தாம் இந்நூற் பெயர் என்றவாறு.

அவிரோதம் - [1]பட்சபாதம் இல்லாமை. இது நூற்பெயர் காட்டியது.

உருவுகண் டெள்ளாது ளந்தேரு மேலோர்
பொருணலந் தேராமு னுந்தீபற
புன்சொல்கண் டெள்ளாரென் றுந்தீபற 3

*உருவுகண்(டு) எள்ளாது உளந்தேரும் மேலோர்*
*பொருள்நலம் தேராமுன் உந்தீபற*
*புன்சொல்கண்(டு) எள்ளார்என்(று) உந்தீபற*

என்பது - ஒருவனது வடிவின் கண்ணே குறை உண்டாயினும் அதனை நோக்கி இகழாது உள்ளத்தின்கண் உள்ள சிறப்பினை [2]விசாரியா நிற்கிற உத்தமர் ஆயினோர் யாதொரு நூலினைக் காணுமிடத்தும் அதன்கண் உண்டாகிய பொருளினது நன்மையைத் தேருதலின் முன்பே சொல்லின்கண்ணே குறை உண்டாயினும் அதனை நோக்கி இகழார் என்றவாறு.

சொல்லினது கருத்து பொருளாம் ஆதலின் எனக்கொள்க. இந்நூற்குச் சொல்லின் கண்ணே குறை உண்டாயினும், பொருள் [3]சுருதி, குரு, [4]சுவானுபவ சித்தம் ஆகலின் குற்றம் உண்டாகாது என்பது துணிவு.

இந்நூலில் வீட்டு நெறி கூறுவான் தொடங்கி முதற்கண் அவ்வீட்டினது சிறப்புக் கூறுகின்றார்.

அறம்பொருளி ன்பம்வீ டாயவோர் நான்கிற்
சிறந்தபயன் வீடென் றுந்தீபற
தேரின்வீ டேயெலா முந்தீபற 4

*அறம்பொருள் இன்பம் வீ(டு) ஆயவோர் நான்கில்*
*சிறந்தபயன் வீடு என்(று) உந்தீபற*
*தேரின்வீ டேஎலாம் உந்தீபற*

என்பது - தருமம், அருத்தம், காமம், மோட்சம் என்று அறிவுடையோர் அடையும் பயன்களாய் எல்லா நூல்களாலும் சொல்லப்படும் அவையாகிய நான்கனுள்ளும், வீடு [5]நிரதிசயமாதலால் சிறந்த பயனை உடையது. அஃது அன்றியும்,

1 - முரண்இன்மை, 2 - ஆராய்கின்ற, 3 - மறைமொழி, 4 - தன் உணர்வு, 5 - தன்னிகரற்ற.

தருமாதிகளுக்கு உள்ள இலக்கணங்களும் வீட்டிற்கே உளவாகலின் மாசறத் தேருங்காலை, அந்நால்வகைப் பயன்களும் அவ்வீடே ஆகும் என்றவாறு.

அஃது எங்ஙனம் எனில்?

தாங்குபற் றற்ற சகலத் தியாகத்தி
னோங்கு தருமமே துந்தீபற
உள்ளது வீட்டிற்க ஃதுந்தீபற 5

*தாங்குபற்று அற்ற சகலத் தியாகத்தின்*
*ஓங்கு தருமம்ஏது உந்தீபற*
*உள்ளது வீட்டிற்கு அஃது உந்தீபற*

என்பது - ஒன்றிலும் தாக்கற்றுடைய சர்வ [1]சங்கபரித்தியாகத்தினும், உயர்ந்த தருமமே இல்லை; தருமமாவது பெரும்பான்மையும் தானம், தவம் என்கின்ற இரண்டின் கண்ணே அடங்குதலின் மேலாய சிவத்தினிடத்தே உடல், பொருள், ஆவி மூன்றையும் சத்தியமாக ஒப்பித்து எவ்விடத்தும் தனது [2]சுதந்திரத்துவம் தோன்றாமை நிற்றலின் இதற்கு மேலாகிய தானமும் இல்லை. அங்ஙனம் அது தோன்றாமல் நிற்போர்க்குச் சிவமே ஒழியத் தானும், பிறரும் தோற்றாமையின், யான் செய்தேன், பிறர் செய்தார், என்னும் [3]இதாகிதங்களிலே சிறிதும் உண்டாகாமையின் இதற்கு மேலாகிய தவமும் இல்லை. இவை வீட்டிற்கு உரிய ஆகலின் வீடே அறமும் என்றவாறு.

இதற்குப் பிரமாணம் : **திருவாசகம்**

அன்றே என்றன் ஆவியும்
  உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை ஆட்
  கொண்ட போதே கொண்டிலையோ
இன்றுஓர் இடையூறு எனக்குண்டோ
  எண்தோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
  நானோ இதற்கு நாயகமே

(இறைவா, அடியேனை ஆட்கொண்ட அன்றே என் உடல், பொருள்,

*1 - முற்றுந்துறத்தல், 2 - தன் இணைப்பு, 3 - நன்மை, தீமை*

*ஆவி மூன்றையும் நினதாக ஏற்றுக் கொண்டனை அன்றோ! அடிமையாகிய எனக்கு இன்று ஏதேனும் துன்பமுண்டோ?)*

என்றும், **அருட்பிரகாசம்**

நிறைந்த பொருளொடு யாக்கை தம்
ஆவியை நீடு அருளால்
உறைந்த குருகரத்தே தத்தம்
செய்து அவற்று ஒன்றனையும்
மறந்தும் யான் எனது என்னாது
இறைகழல் மன்னி நிற்கும்
சிறந்த சகலத் தியாகரின்
ஓர்அறம் செய்தவரே

*( உடல், பொருள், ஆவி மூன்றையும் குருவினிடத்திலே ஒப்படைத்து விட்டு ஒருபோதும் அவற்றை யான் எனது என்று நினையாமல் இறைவன் திருவடிகளையே நினைத்திருக்கும் முற்றுந்துறந்தோரின் செயலே அறமாகும் என்றவாறு)*

என்றும், **பரிபூரண சித்தி**

சகமென உடலமென்னத் தகுகரணங்கள் என்ன
அகமென இதமதுஎன்ன அழிவில்போ கங்கள் என்ன
வகைபட உயிர்கட்கு ஆதல் மாயை அம்மாயை நீக்கிப்
புகலரு முத்திசேரும் அவர்கள் புண்ணியத் தினோரே

*(உலகம், உடல், கருவிகள், அகக்கருவிகள், நுகர்வுகள் ஆகிய அனைத்தும் உயிர்களுக்கு மாயையால் வருவன. அம்மாயையின்றும் நீங்கி முத்திவழியில் செல்வோரே புண்ணியம் செய்தவர்கள் ஆவார்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

பொன்றாப் பொருளே பொருளென்பர் நல்லோர
தன்றிப் பொருளியா துந்தீபற
அல்லன மாயையென் றுந்தீபற . 6

*பொன்றாப் பொருளே பொருள்என்பர் நல்லோர் அ(து)*
*அன்றிப் பொருள்யாது உந்தீபற*
*அல்லன மாயையென்று உந்தீபற*

என்பது - அழிவற்ற பொருளே பொருள் என்று கூறுவர்

நல்லோர்; முத்தியே [1]நித்தியம் ஆதலின் அஃது அன்றிப் பொருளே இல்லை. மற்றைய எவையும் [2]அநித்தியம் ஆகிய மாயா காரியங்கள்.

இதற்குப் பிரமாணம் : **திருக்கடைக்காப்பு,**

செல்வநெடு மாடம் சென்று சேண்ஓங்கிச்
செல்வமதி தோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர்வாழ் தில்லைச் சிற்றம்பலம் மேய
செல்வன்கழல் ஏத்தும் செல்வம் செல்வமே.

*(பெரும் செல்வந்தர்கள் வாழ்கின்ற தில்லைச் சிற்றம்பலத்தில் எழுந்தருளியுள்ள அம்பலவாணப் பெருமானின் திருவடிகளைச் சிந்திப்பது செல்வத்தில் எல்லாம் மேலான செல்வமாகும்)*

என்றும், **திருவாசகம்,**

காலம் உண்டாகவே காதல்செய்து உய்மின் கருதரிய
ஞாலம் உண்டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலம் உண்டான் எங்கள் பாண்டிப் பிரான்தன் அடியவர்க்கு
மூல பண்டாரம் வழங்குகின்றான் வந்து முந்துமினே

*(நல்லகாலம் கிடைத்தபோதே இறைவன் மீது அன்பு செலுத்தி உய்ய வேண்டும். மால் அயன் முதலிய தேவர்களும் அணுகுதற்கு அரிய சிவபெருமான் தன் அடியவர்களுக்குத் திருவருள் இன்பத்தை வழங்குகின்றான். எனவே வந்து முந்துங்கள்)*

அன்றியும்,

ஓடும் [3]கவுந்தியுமே உறவுஎன்றிட்டு உள்கசிந்து
தேடும் பொருளும் சிவன்கழலே எனத்தெளிந்து
கூடும் உயிரும் [4]கும்மண்டையிடக் குனித்தடியேன்
ஆடும் குலாத்தில்லை ஆண்டானைக் கொண்டுஅன்றே

*(அகப்பற்று புறப்பற்றெல்லாம் ஒழித்து எம்மால் தேடப்படும் பொருள் சிவன் சேவடியே எனத் தெளிந்து, தில்லைக் கூத்தனோடு குலாவுதலைக் கொண்டேன்.)*

---

1 -நிலையானது, 2 -நிலையற்றது, 3- கோவணம், 4- நிறைந்து தெவிட்ட

என்றும், **அஞ்ஞவதைப் பரணி**

என்றும் பொருவரிய இன்பப் பொருள் உடையார்
பொன்றும் பொருளும் பொருளாகப் போற்றுவரோ

*(எக்காலத்தும் பேரானந்த வெள்ளத்தில் திளைத்திருக்கும் பெரியோர்கள் அழிகின்ற உலகப் பொருட்களை இன்பத்திற்குரிய சாதனங்களாகக் கருதமாட்டார்கள்)*

என்றும், **மோகவதைப் பரணி**

கொழுங்கனலோ அவிப்பதுவும் கோபம் எனும் கொழும்கனலே
வழங்குவதும் அழிபொருளோ மறைதேடும் வான்பொருளே

*(மறைகளும் தேடும் உயர்ந்த பொருள் அழிவற்ற வீடுபேறே)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

பூரண மும்மாம் பொருவிலா னந்தக்கு
நேரியா தின்பம்வே றுந்தீபற
நீங்காச் சுகமதே யுந்தீபற 7

*பூரண மும்ஆம் பொருவில் ஆனந்தக்கு*
*நேரியா துஇன்பம்வே றுந்தீபற*
*நீங்காச் சுகமதே உந்தீபற*

என்பது, முற்கூறிய நித்தியத்துவமும் அல்லாமல் பரிபூரணமாய் இருந்துள்ள ஒப்பற்ற [1]நிரதிசயானந்தமே ஆனந்தம் அல்லது அதற்கு இணையாய் வேறே ஒரு இன்பமும் இல்லை. நித்தியமாகையால் காலத்தினாலும், பூரணமாகையால் தேசத்தினாலும், நீக்கமற்றுள்ளதாய் இருக்கிற சுகமும் அதுவே, என்றவாறு.

மற்றுள்ள மாயா போகங்களெல்லாம் தோற்றமுடையன ஆகையால் நாசமும், நாசத்தை அடைவதற்கு முன்னும் பரிச்சின்னமாகையால் நீக்கமும், நீங்குதற்கு முன்னும் பலவாய் உயர்ச்சி, தாழ்ச்சியுடையன ஆகையால், ஒன்றுக்கொன்று அதிசயமும் உடையனவாம்; ஆதலின், அவை துக்கமே அன்றிச் சுகமல்ல என்பது கருத்து.

---

*1 - தன்னிகரற்ற இன்பம்*

இதற்கு உதாரணம், **திருக்கடைக்காப்பு**

நிறைவெண் கொடிமாட நெற்றிநேர் தீண்டப்
பிறைவந்து இறைதாக்கும் பேர்அம்பலம் தில்லைச்
சிறைவண்டு அறைஓவாச் சிற்றம்பலம் மேய
இறைவன் கழல் ஏத்தும் இன்பம் இன்பமே.

*(தில்லைச் சிற்றம்பலத்தில் விளங்கும் சிவபெருமான் திருவடிகளைப் போற்றும் இன்பமே உண்மையான இன்பமாகும்)*

என்றும், **திருவாசகம்,**

தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்தொறும் பேசும்தொறும் எப்போதும்
அனைத்து எலும்பு உள்நெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்பு உடையானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ

*(சிற்றின்பங்களை நுகர்ந்து மகிழ்வதைவிட நினைக்கும்தோறும் காணுந்தோறும் பேசுந்தோறும் எலும்புகளும் உருகும்படி ஆனந்தமாகிய தேனைச் சொரியும் தில்லைக் கூத்தனையே நினைத்து மகிழ்வது மேலானது)*

என்றும், **சிவானந்தமாலை,**

துன்ப மயக்காகிய பொய்த் துட்டபந்த நோய் அதனை
இன்பம் எனக் கொண்டுஇங்(கு) இழந்தேனே - அன்பில் எழுந்து
ஓவாத மெய்யுணர்வாய் உள்ளே நின்(று) உள்உருக்கும்
தாவா ஆ னந்தந் தனை

*(பொய்மையும் தீமையும் நிறைந்த பற்றாகிய நோயை இன்பமென நினைத்து, அன்பில் எழுந்து ஓவாத மெய்யுணர்வாய் உள்ளே நின்று உருக்குகின்ற இடையறாத இன்பத்தை இழந்தேன்)*

என்றும், **கலிமடல்**

அருநான் மறைநூலொடு ஆகமநூல் மற்றும்
உரைசான்ற நூல்எல்லாம் ஓதுகின்றது ஓரில்
பொருள்நான்கே அந்நான்கும் பொய்மை அற மெய்மை
தெரிவார் தெரியுங்கால் தீங்கொன்றும் மேவா

[1]நிருபா திகம் என்றே நேரே தரும்அப்
பொருள் ஆவதும் என்றும் பொன்றாப் பொருளே
இரியாத இன்பமே இன்பம்சென்று எய்தற்கு
அரிதாய வீடும் அதுவேயாய் நின்றால்
உரையாடுவது எல்லாம் ஒன்றாய இன்பப்
பெருமானை அல்லவோ பேதமாய் வேறே
பொருள் நாடி நின்று புலம்புவோர்க்கு அந்தப்
பரமானந் தத்தைப் பகரப் படுமே.

*(அருள்நூல்கள் ஓதுகின்றனவற்றை ஆராய்ந்தால் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கே இறுதியில் நிற்பன. இவற்றிலும் வீடுபேறாகிய பொருளே அழியாப் பொருளாகும். இறைவனே அப்பொருளாக விளங்குகின்றான் என்பதை அறியாதோர் மேலான இன்பத்தை அடையார்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

ஆதலாற் பெற்ற வறிவாற் பெறும்பய
னோதும்வீ டேயென வுந்தீபற
உண்மைநூல் யாவுமென் றுந்தீபற 8

*ஆதலால் பெற்ற அறிவால் பெறும்பயன்*
*ஓதும்வீ டேஎன உந்தீபற*
*உண்மைநூல் யாவுமென்(று) உந்தீபற*

என்பது, [2]சர்வசங்க பரித்தியாகத்தின் எய்துவதாய் [3]நித்தியபூரண நிரதிசயானந்தத்தை உடையது யாது? அதுவே வீடும் ஆதலின், ஒருவன் பெறுதற்கரிய பிறவியையும், அதிலும் பெறுதற்கரிய நுண்ணூலுணர்வையும், பெற்ற காலையின் அங்ஙனம் பெற்ற அறிவால் பெறும் பயனாவது வீடு ஒன்றுமே எனக் கூறாநிற்கும். அவர் கற்ற [4]யதார்த்தம் ஆகிய வேதாதி நூல்கள் அனைத்தும், என்றவாறு.

இதற்கு உதாரணம், **தேவிகாலோத்தரம்**

பிறந்து பெற்ற அறிவால் பெறும்பயன்
நிறைந்த நீர்முகில் நீங்கிய வான்என
அறிந்து தம்மை அமல வியாபகம்
செறிந்து நல்ல தியானத்து இருத்தலே

*1 - துன்பமற்ற, 2 - முற்றுந்துறந்த, 3 - நிலையான நிகரில்லா இன்பம், 4 - உண்மை*

*(அறிவினால் பெறும்பயன் பற்றுக்களில் இருந்து நீங்கித் தூய்மை அடைந்து இறைவனையே நினைத்துக் கொண்டிருத்தலாம்)*

என்றும், **திருவள்ளுவர்,**

கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்

*(மேலான அறிவே வடிவமாக விளங்கும் இறைவனை உணர்ந்து தொழுவதே கல்வியின் பயன்)*

என்றும், **திருமந்திரம்,**

முன்னைப் பிறவியில் செய்த முதுதவம்
பின்னைப் பிறவியில் பெற்றால் அறியலாம்
தன்னை அறிவது அறிவாம் அஃதன்றிப்
பின்னை அறிவது பேயறி வாமே

*(முன்னைப் பிறவியில் செய்த பெருந்தவத்தை பின்னைப் பிறவியிலும் தொடர்ந்தால் தன்னை அறியும் அறிவைப் பெறலாம்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல் வீட்டினைச் சாதித்தற்கு ஏது கூறுகின்றார் :

வீடுஞா னத்தன்றி மேவொணா தாகையாற்
கூடுவோன ந்தவாழ் வுந்தீபற
கோதின்மெய்ஞ் ஞானியென் றுந்தீபற 9

*வீடுஞா னத்துஅன்றி மேவொணா துஆகையால்*
*கூடுவோன் அந்தவாழ்(வு) உந்தீபற*
*கோதின்மெய்ஞ் ஞானியென்(று) உந்தீபற*

என்பது, முத்தி சாதனமாகிய சரியாதி நான்கனுள் ஞானம் ஒன்றுமே முத்தி சாதனமாம். மற்றைய மூன்றும் ஞானத்திற்குச் சாதனமன்றி முத்திக்குச் சாதனம் ஆகாமையால், அந்த முத்தியாகிய பேரானந்த வாழ்வைக் கூடுமவன் குற்றமற்ற மெய்யுணர்வை உடையோனே; மற்றையர் அல்லர்.

குற்றமாவது ஐயம், திரிபு எனக் கொள்க.

இதற்கு உதாரணம், ***சிவஞானசித்தியார்,***

ஞானத்தால் வீடுஎன்றே நான்மறைகள் புராண
நல்ல ஆகமம்சொல்ல வல்லவாம் என்னும்
ஊனத்தார் என்கடவார் அஞ்ஞா னத்தால்
உறுவதுதான் பந்தம்உயர் மெய்ஞ்ஞா னத்தால்
ஆனத்தால் அதுபோவ(து) அலர்கதிர்முன் இருள்போல்
அஞ்ஞானம் அறப்பந்தம் அறுமுத்தி ஆகும்
ஈனத்தார் ஞானங்கள் அல்லா ஞானம்
இறைவன்அடி ஞானமே ஞானம் என்பர்

*(ஞானத்தினாலே முத்தியென்று அருள் நூல்கள் சொல்ல அதை மறுப்பவர் என்ன இன்பத்தை பெறக்கடவர்? சூரியன் முன் இருள் நீங்குவது போல சிவஞானத்தினாலேயே அஞ்ஞானம் நீங்கி, பந்தமும் நீங்கி முத்தியாம்)*

என்றும், ***திருமந்திரம்,***

ஞானத்தின் மிக்க தவநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவான்
ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே

*(மெய்ஞானத்தைவிட மேலான நெறி நாட்டில் இல்லை; ஞானத்தை விட உயர்ந்த சமயமும் நல்லதல்ல; ஞானத்தைவிட உயர்ந்து எதுவும் முத்தி தராது; ஞானத்தில் உயர்ந்தோரே மனிதரிலும் உயர்ந்தோராவர்)*

என்றும், **பிரபுலிங்க லீலை,**

உரைசெயில் பரம ஞானம் ஒன்றுமே முத்திக்கு ஏது
சரியைநற் கிரியை யோகம் தாமொரு மூன்றும்ஞானம்
மருவுதற்(கு) ஏது என்றே மறைபுகன்(று) உரைக்கும் இந்தக்
கருவியைப் பொருளென்(று) எண்ணிக் களிப்பவர் கயவர் அன்றே

*(உயர்ந்த உண்மை அறிவே முத்திக்குக் காரணமாக அமையும். சரியை, கிரியை, யோகம் என்பன மெய்யறிவு பெறத் துணை செய்யும் கருவிகளேயாம். எனவே இவற்றையே சிறந்த பொருள்கள் என்று கருதக் கூடாது)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

மெய்யுணர்வு உடையோனது இலக்கணம் யாது எனின்?

யானென தென்செருக் கீர்த்த மகனேமெய்ஞ்
ஞானியென் றோதிய வுந்தீபற
நான்மறை யாதிய வுந்தீபற

*யான்எனதுஎன் செருக்கு ஈர்த்த மகனே மெய்ஞ்*
*ஞானியென்(று) ஓதிய உந்தீபற*
*நான்மறை ஆதிய உந்தீபற*

என்பது, யான் என்றும், எனது என்றும், இந்நிலைக்கண் கூறப்படுவதாகிய மயக்கத்தினை அறுத்துள்ள புருடன் யாவன்? அவனே மெய்யுணர்வு உடையோன் என்று கூறா நிற்கும் வேதம் முதலிய பலகலைகளும் என்றவாறு.)

*இதற்கு உதாரணம்,* ***திருவள்ளுவ நாயனார்,***

யான் எனது என்னும் செருக்கு அறுப்பான்
வானோர்க்(கு) உயர்ந்த உலகம் புகும்

*(யான் எனது என்னும் பற்றுக்களிலிருந்து நீங்கியவனே வீடுபேறு அடைவான்)*

*என்றும்,* ***திருவாய்மொழி,***

நீர்நுமது என்றுஇவை - வேர்முதன் மாய்த்திறை
சேர்மின் உயிர்க்கு அது - நேர்நிலை இல்லே

*(யான் எனது என்னும் செருக்கை வேருடன் களைபவனே இறைவனைச் சேர்ந்து மகிழ்வான்)*

*என்றும்,* ***பிரபுலிங்க லீலை,***

யான்என(து) என்ப(து) இருந்திடு காறும்
ஞானம் உறான் அது நண்ணிலன் ஆயில்
தான் நிலை யாத சகந்திகழ் கிற்கும்
[1]தீனம் இலாத சிவம் திகழாதே

*(யான் எனது என்னும் பற்று இருக்கும்வரை ஞானத்தை அடைய முடியாது. எனவே சிவகதியும் பெறமுடியாது)*

*1 - குற்றமற்ற*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

*யாதினை யாதினை யான், எனது என்பது என்னின்?*

தேகாதி நான்கனுட் டேக கரணங்க
ளாகு மியானென்ப துந்தீபற
வலமற் றெனதென்ப துந்தீபற 11

*தேகாதி நான்களுள் தேக கரணங்கள்*
*ஆகும்யான் என்ப(து) உந்தீபற*
*அலமற்(று) எனதுஎன்ப(து) உந்தீபற*

என்பது இந்நிலைக்கண் உயிர்களுக்கு மாயையின் உண்டாகிய தனு, கரண, புவன, போகங்கள் நான்கன் உள்ளும், தனுகரணங்கள் 'யான்' என்றும், புவன போகங்கள் 'எனது' என்றும் சொல்லப்படும் என்றவாறு.

தனு என்றது தேகத்தை. கரணம் என்றது அகக்கருவிகளை புறக்கருவிகளை. புவனம் என்றது பூ, பூதராகிப் பிரபஞ்சத்தை. போகம் என்றது [1]சத்தாதி விடயங்களை. இவற்றுள் கரணங்கள் தனுவுக்கு [2]அபேதமாயும் புவனங்கள் போகத்துக்கு அபேதாமயும் நிற்கையால், "தேக போகம்" என இரண்டாகவும் சொல்லப்படுமெனக் கொள்க.

தனுகரணங்கள் தூலமாய், அசித்தாய், அநித்தயமாய் உள்ளன; ஆன்மா சூக்குமமாய்ச், சித்தாய், நித்தியமாய் உள்ளது ; இவைகள் ஒன்றுக்கொன்று மாறுபாடாதலின், உயிர்களுக்குத் தனு கரணங்களை யானென்றும் [3]ஐக்கியாத்தியாசம் எங்ஙனம் கூடிற்று எனில்.

அழிதேக மன்னுயிர்க் கன்னிய மேயேனும்
பழமோகத் தால்யானென் றுந்தீபற
பற்றுமை யொற்றுமை யுந்தீபற. 12

*அழிதேகம் மன்னுயிர்க்(கு) அன்னிய மேயேனும்*
*பழமோகத் தால்யானென்(று) உந்தீபற*
*பற்றுமை ஒற்றுமை உந்தீபற.*

1-ஐம்புலன்கள், 2- வேறாகையும், 3- சேர்க்கையினால் ஒன்றில் ஒன்று தோன்றுதல்

என்பது, அநித்தியமாகிய சரீரம் நிலை பேறுடைய உயிர்களுக்கு [1]விசாதீயமே ஆயினும், உயிர்கள் உள்ள அன்றே உண்டாய் அநாதியாய் இருந்துள்ள அஞ்ஞான சம்பந்தத்தினாலே சிறிய விளக்கமாய் நிற்கின்ற தனுவாதிகளைத் தான் என்று அபிமானித்த [2]பிராந்தியே ஐக்கியம் என்றவாறு.

ஒருவனுக்குத் தேகத்தை நான் என்னும் அகப்பற்றாகிய அகங்காரப் பிராந்தியை (மயக்கம்) நீக்குதற்கு உபாயம் யாது? என்னின்,

விறகா ரழல்போலு மின்னார்பொன் னாதி
யுறுகாறு மந்தமை யுந்தீபற
உள்ளக்கண் மாறாதென் றுந்தீபற 13

*விறகார் அழல்போலும் மின்னார்பொன் ஆதி*
*உறுகாறும் அந்தமை உந்தீபற*
*உள்ளக்கண் மாறாதென்(று) உந்தீபற*

என்பது, புறப்பற்றாகிய பெண், பொன் முதலிய பொருள்கள் சூழ்ந்து உள்ள அளவும் முற்கூறப்பட்ட அகப்பற்றானது விறகு பெற்ற தழல்போல் முறுகுவது அல்லது ஆன்மா இடத்து நீங்காது என்றவாறு.

இதற்கு உதாரணம், **தேவிகாலேத்தரம்,**

மூண்டு பற்றி முழங்கி எழும்கனல்
ஈண்டு [3]காட்டம் இலதேல் இலதாகும்
தீண்டும் அப்பொருள் இன்றுஎனில் சித்தமும்
மாண்டு தோற்றம் இலதாய் மடிந்திடும்

*(விறகு இல்லையெனில் நெருப்பு இல்லை. அது போலப் பற்றுக்கள் இல்லை எனில் பிறவி இல்லை)*

என்றும், **திருவள்ளுவர்,**

அடல் வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு

*(ஐம்பொறிகளால் உண்டான இன்ப நுகர்வினை ஒருவன்*

---

*1 - வேறானது, 2- ஒன்றை மற்றொன்றாக மயக்கும் உணர்வு, 3- விறகு*

*விடுவானாயின் இவ்வுலகில் உள்ள பொருள்கள் யாவும் அவனுக்குக் கூடும்)*

என்றும், வரும் மற்றும் வருவனவற்றால் காண்க.

வேரினைக் களையில் கொடி முதலிய வாடுதல்போலும் யானென்னும் அகப்பற்றை முன்பு நீக்கின் அதன் சார்பாகிய புறப்பற்றுத் தானே நீங்கி விடும். இஃது ஒழிந்து புறப்பற்றினை முன்பு நீக்கின் அதனால் அகப்பற்று ஒழியுமென்பது விருத்தமாகையால் அது கூடாதென்னின்,

நீக்காமுற் சூழ்காடு நீடெயிற் கொள்ளொணா
போக்கார் புறப்பற்றே லுந்தீபற
போமே யகப்பற்றென் றுந்தீபற 14

*நீக்காமுன் சூழ்காடு நீடுஎயில் கொள்ஒணா*
*போக்கார் புறப்பற்றேல் உந்தீபற*
*போமே அகப்பற்றுஎன்(று) உந்தீபற*

என்பது, சூழ்ந்துள்ள காட்டை வெட்டி வெளி செய்யா இடத்து, நிலை பெற்று நடுநின்ற எயிலைக் கவருதல் கூடாது. அது போல் எனது என்னும் புறப்பற்றை நீக்காராயின் யான் என்னும் அகப்பற்று ஒழியாது என்றவாறு.

இதற்கு உதாரணம், **அஞ்ஞவதைப் பரணி**

சுற்றமொ டுற்ற துவந்துவம் எல்லாம்
அற்றவர் தம்மொடும் அற்றவர் தாமே

*(சுற்றங்களோடு உண்டான இன்ப துன்பங்களைக் கடந்தவர்களே நல்ல தவத்தவர்கள்)*

என்றும்,

கதறிய ஆழியாறி ஆடுதல் கருதினர் யாவர்தாம் யாவையும்
உதறி அறாதபோது நாள் தொறும் ஒழுக விடாதஆர வாரமே

*(அலை அடங்கியபின் நீராடலாம் என்று எண்ணுவது போல காலம் கடந்தபின் பற்றை நீக்கலாம் என்று எண்ணுதல் கூடாது)*

என்றும்,

கழிய நிலாதபோது சேறது கழுவி இலாப மேதி யாவையும்
ஒழிய நிலாதபோது மாசற உதற ஒணாது பாச மூடுமே

*(அகப்பற்றை நீக்கியபின் புறப்பற்றை நீக்குவது என்பது நீராடிய பின் சேறு பூசுவது போலவாம்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

ஒருவன் புறப்பற்று நீக்கியமாத்திரத்து அவனுக்கு அகப்பற்று ஒழியுமோ? எனின்,

புறப்பற் றெலாந்தூரப் போக்கிமீட் டெண்ணா
துறப்பற்றின் மெய்யுணர் வுந்தீபற
ஓடு மகப்பற்றென் றுந்தீபற 15

*புறப்பற்(று) எலாந்தூரப் போக்கிமீட்டு எண்ணாது*
*உறப்பற்றின் மெய்யுணர்(வு) உந்தீபற*
*ஓடும் அகப் பற்றென்(று) உந்தீபற*

என்பது, எனது என்னும் பொருள்கள் அனைத்தையும் ஒரு சற்றும் தாக்காது தூரத்திலே போவனவாகக் கைவிட்டு அவ்வாசனையும் மனத்தின் கண்ணே தோன்றாமல் ஒழித்துத் தன் உண்மைக்கண் முறுகப்பற்றி நிற்கின், சுவடும் தோன்றாமல் நீக்கும் அகப்பற்று என்றவாறு.

தூரப்போக்கி என்றது விட்ட பொருளினது நாம ரூபங்கள் மீண்டும் தனது இந்திரியங்களுக்கு விடயமாக்காமை எனக் கொள்க.

புறப்பற்றெல்லாம் நீக்க வேண்டும் என்பதற்குப் பிரமாணம், **திருவள்ளுவர்,**

இயல்பாகு நோன்பிற்கு ஒன்று இன்மை உடைமை
மயலாகு மற்றும் பெயர்த்து

*(தவம் செய்வான் ஏதேனும் ஒரு பொருள் மீது பற்றுடையவனாயின் அப்பற்று மீண்டும் மயங்குதற்குக் காரணமாக அமையும்)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

அவற்றைப் தூரப்போக்கி மீண்டும் அவ்வாசனையும் தோன்றாமை அடக்க வேண்டும் என்பதற்குப் பிரமாணம்,

**ஒழிவிலொடுக்கம் :**

கரையடுக்க வந்தால் திரைஅலைக்கும் கப்பல்
பொருள்அடுத்தால் தோன்றும் பொய்ப்போதம் - விருதினவன்
வெற்றிக் குழி குதித்தோன் போல்வேண்டும் விட்டதுபின்
பற்றுமதில் சிக்கென நிற்பாய்

*(கரையினை நெருங்கி வருகின்ற கப்பலை அலையானது மீண்டும் கடலுக்குள் இழுப்பது போலப் பொருளானது சேர்ந்தால் பொய்யான அறிவு தோன்றும்)*

மற்றும் வருவனவற்றால் காண்க.

மெய்யுணர்வின் கண் முறுகப்பற்றி நிற்கின் அகப்பற்றொழியும் என்பதற்குப் பிரமாணம், **திருவள்ளுவர்,**

பற்றுக பற்றுஅற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

*(உலக வாழ்வுமீது கொண்ட பற்றினை நீக்க வேண்டுமெனில் பற்றற்றவனாகிய இறைவனின் திருவடிகளை முதலில் பற்ற வேண்டும்.)*

என்றும், **தேவாரம்**

விறகில் தீயினன் பாலில் படுநெய்போல்
மறைய நின்றுஉளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வுக் கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே.

*(விறகில் உள்ள தீப்போலவும் பாலில் மறைந்துள்ள நெய் போலவும் இறைவன் மறைந்துள்ளான். உறவாகிய கோலினை நட்டு உணர்வாகிய கயிற்றினால் கட்டி வேகமாகக் கடைந்தால் அவனைப் பெறலாம்)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

மோக வற்சநாபிக் கொடி முளைத்தெழு மூலம்
சோக மாசுணம் இருந்தரசு ஆள்வதோர் சூழல்
ஏகமே முதல் யான்எனது என்னும் அஞ் ஞானம்
ஏகமாகிய பராபரம் தோன்றினால் இறக்கும்.

*(மனிதரிடத்தில் மோகமாகிய நச்சுக் கொடி முளைத்துத் துன்பம்*

*என்னும் நச்சுப்பாம்பு அரசாள்வதற்குக் காரணமான உடம்பு முதலானவற்றை நான் என்று பார்க்கும் அஞ்ஞானம் - எல்லாமாய் உள்ள மேலான ஒருவனை நினைக்கும் மெய்ஞ்ஞானம் உள்ளத்துள் எழுந்தால் இறக்கும்)*

என்றும், **சிவஞான சித்தியார்**

யான் செய்தேன் பிறர் செய்தார் என்னதுயான் என்னும்
இக்கோணை ஞானஎரியால் வெதுப்பி நிமிர்த்துத்
தான்செவ்வே நின்றிடத் தத்துவன் தானேரே
தனைஅளித்து முன்னிற்கும் வினைஒளித்திட்டு ஓடும்
நான்செய்தேன் எனும் அவர்க்கு தான்அங்கின்றி
நண்ணுவிக்கும் போகத்தைப் பண்ணுவிக்கும் கன்மம்
ஊன்செய்யா ஞானத்தான் உதிப்பின் அல்லால்
ஒருவருக்கும் யான்எனது இங்கு ஒழியாது அன்றே

*(யான் எனது என்னும் செருக்கு அற்றாலன்றி இறைவனுடனாய் நின்று அதனால் செருக்கினை அறுப்பதும் இன்பத்தைப் பயப்பதும் ஏகனாகி நிற்கும் ஞானப் பொருளே அன்றிப் பிறிதின்மையின் செருக்கினை அறுக்கக் கட்டாயம் ஞானம் வேண்டும்)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

அகப்பற்றை ஒழித்தற்கு மெய்யுணர்வே காரணமாயின் அதனை எவ்விதத்தாலும் சாதித்தல் வேண்டும் என்னாது, முன்பு புறப்பற்றை நீக்கிப் பின்பு சாதித்தல் வேண்டும் என்பானேன்? எனின்.

வேண்டா துறத்தலே மெய்யுணர் வென்பதொன்
றீண்டிடை யூறதற் றுந்தீபற
எய்துமே லில்லையென் றுந்தீபற 16

*வேண்டா துறத்தலே மெய்யுணர்வு என்பதொன்(று)*
*ஈண்டுஇடை யூறுஅதற்று உந்தீபற*
*எய்துமேல் இல்லையென்று உந்தீபற*

என்பது, மெய்யுணர்வு என்பது ஒரு [1]பரம கேவலப் பொருள். இவ்விடத்து இல்வாழ்க்கையொடு கூடி இருக்கவும் ஓர் இடையூறின்றி ஒருவனாலே சாதிக்கப்படுமாயின், அவன் இல்வாழ்க்கையைத் துறக்கவே வேண்டாம் என்றவாறு.

*1 - மிக உயர்ந்தது*

ஆயின் இல்வாழ்க்கையை நீங்காவிடத்து மெய்யுணர்வு இடையூறின்றித் தலைக்கூடாதோ? எனின்.

குடும்பபா ரந்தலைக் கொண்டவர்க் கல்லல்
விடும்பரி சின்மையா லுந்தீபற
மெய்யுணர் வெங்ஙனா முந்தீபற 17

*குடும்பபா ரம்தலைக் கொண்டவர்க்கு அல்லல்*
*விடும்பரிசு இன்மையால் உந்தீபற*
*மெய்யுணர்(வு) எங்ஙனாம்? உந்தீபற*

என்பது - தாய், தந்தை, மனை, மக்கள், சுற்றம் என்னும் குடும்பத்தைத் தனது என்றும், அவற்றினைத் தாங்கும் அதிகாரமுடையோன் தான் என்றும், [1]அபிமானம் பூண்ட ஒருவன் அக்குழாங்களோடும் கூடி நுகர்தற்கு விடய சுகங்களைத் தேடுதலாலும், அவை பொருளினால் அன்றி வாராமையின் அப்பொருளைத் தேடற்கு முயலுதலாலும்; அங்ஙனம் முயலுமிடத்து அவற்றிற்கு வரும் இடையூறுகளை நீக்க வேண்டுதலாலும்; அவ்வாறு கூட்டப்பட்ட பொருளுக்குப் பிறரால் அழிவு வாராமல் காத்தலாலும்; அப்பொருளைக் காலதேசங்கள் அறிந்து நுகருதலாலும்; அக்காலையில் தமது குழாங்களுக்கும் தமக்கும் வரும் [2]தாபத்திரயங்களை நோக்கி வருந்துதலாலும் இவை முதலிய அல்லல்கள் அனந்தம் இடையறாது சூழ்தலின், அவற்றினை நீக்கிச் சற்குருவை அடைந்து நித்தியாநித்தியப் பொருள்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிகுதலே கூடாது. கூடினும், தன்னுண்மைக்கண் ஒரு கணமேனும் [3]நிட்டாபரனாய்ச் சித்த சலனம் அற்று இருத்தல் கூடாது. அஃது ஒரு காலையிற் கூடினும், கூடியவுணர்வு முதிர்வளவில் ஒரோர் இடையூறுகளால் சித்த சலனம் பிறந்து மெய்யுணர்வு நீங்கிவிடும். அது நீங்கவே, அகப்பற்றும் அவனுக்கு நீங்காது என்றவாறு.

இதற்கு உதாரணம், **திருவள்ளுவர்,**

பற்று விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு

*(அகப்பற்று புறப்பற்று என்னும் இருவகைப் பற்றுகளையும் விடாதவர்க்குத் துன்பங்கள் என்றும் நீங்காது)*

1 - எண்ணம், 2 -மூவகைத் துன்பம், 3 - அமைதியுருபவனாய்

என்றும், **திருக்கடைக்காப்பு,**

தந்தைதாய்தன்னுடன் தோன்றினார்
புத்திரர் தாரம்என்னும்
பந்தநீங் காதவர்க்கு உய்ந்துபோக்கு
இல்எனப் பற்றினாயே
வெந்த நீறு ஆடியார் ஆதியார்
சோதியார் வேதகீதர்
எந்தை ஆரூர்தொழுது உய்யலாம்
மையல்கொண்டு அஞ்சல் நெஞ்சே

*(நெஞ்சே! தந்தை, தாய், மக்கள், மனைவி என்னும் உறவுகளை விட்டு நீங்காதவர்களுக்கு உலகில் வாழ்வே இல்லை என்று எண்ணாதே, திருநீற்றை உடம்பு முழுவதும் பூசி, ஆதியில் சோதியாக நின்று வேதத்தைப் பாடுகின்ற எந்தை ஆரூரனைத் தொழுது உய்யலாம்)*

என்றும், **தேவாரம்,**

பழகி னால்வரும் பண்டுஉள சுற்றமும்
விழவிடா விடின் வேண்டியது எய்துஒணா
திகழ்கொள் சேறையிற் செந்நெறி மேவிய
அழகனார் உளர்அஞ்சுவது என்னுக்கே.

*(தொன்றுதொட்டு வரும் சுற்றங்கள் நிங்குதற்குரியவை. நீங்குதற்கு இறை துணை நிற்கும்)*

அன்றியும்,

அருத்தமும் மனையாளொடு மக்களும்
பொருத்த மில்லைபொல் லாதது போக்கிடுங்
கருத்தன் கண்ணுத ல்அண்ணல் காட்டுப்பள்ளித்
திருத்தன் சேவடி யைச்சென்று சேர்மினே

*(பொருள், மனைவி, மக்கள் பொல்லாதவை. பொருத்தமில்லாதவை, இவர்களை விட்டுத் திருக்காட்டுப்பள்ளியுள் உள்ளவன் சேவடியைச் சென்று சேருங்கள்)*

என்றும், **திருப்பாட்டு**

பதியும் சுற்றமும் பெற்ற மக்களும்
பண்டை யார்நல்ல பெண்டிரும்

நிதியும் இம்மனை வாழும் வாழ்க்கை
   நினைப் பொழிமட நெஞ்சமே
மதியம் சேர்சடைக் கங்கை யான்இடம்
   மகிழ மல்லிகை சண்பகம்
புதிய பூமலர்ந்து எல்லி நாறும்
   புறம் பயம் தொழப் போதுமே

*(நெஞ்சமே! மனைவி, மக்கள், சுற்றம் முன்னோர், செல்வம், இல்வாழ்க்கை இவற்றின் நினைவை ஒழிப்பாயாக. சுற்றம் முதலாகியவற்றை விடுக. மல்லிகை, சண்பகம் மலர்ந்துள்ள திரும்புறம்பயத்து இறைவனைத் தொழுவாயாக)*

என்றும், **திருவாசகம்**

தாமே தமக்குச் சுற்றமும்
   தாமே தமக்கு விதிவகையும்
யாமார் எமதார் பாசம்ஆர்
   என்ன மாயம் இவைபோகக்
கோமான் பண்டைத் தொண்டரொடும்
   அவன்தன் குறிப்பே குறிக்கொண்டு
போமாறு அமைமின் பொய்நீக்கிப்
   புயங்கன் ஆள்வான் பொன்அடிக்கே.

*(நாம் யார்? எம்முடையது யாது? பாசம் என்பது எது? என்பதை உணர்ந்து இவற்றிலிருந்து நீங்க பழைய அடியாரோடு சேர்ந்து இறைவனது உளக்குறிப்பைப் பற்றிப் பொய்மையான வாழ்வை நீத்து அவனது திருவடி சேரும் நெறியில் நில்லுங்கள்)*

என்றும், **பட்டணத்துப் பிள்ளையார்,**

திருவடி பிடித்து வெருவரல் விட்டு
மக்களும் மனையும் ஒக்கலும் திருவும்
பொருள்என நினையாதுஉன் அருளினை நினைந்து

*(இறைவா! நின்னுடைய திருவடியை நினைந்தும் அச்சத்தை விட்டும், மனைவி, மக்கள், செல்வம் முதலியனவே பொருளென நினையாது என்றும் உன்னை நினைந்து இருக்கும் நினைவை அருள்)*

என்றும், **கந்தரனுபூதி**

வளைபட்ட கைமாதொடு மக்கள்எனும்
தளைபட்டு அழியத் தகுமோ தகுமோ
கிளைபட்டு எழு சூர் உரமும் கிரியும்
துளைபட்டு உருவத் தொடும் வேலவனே

*(சூரனையும் கிரவுஞ்ச மலையையும் துளைத்து நின்ற வேலவனே! மனைவி, மக்கள் ஆகிய கட்டுகளைத் தவிர்த்தல் வேண்டும்)*

என்றும், **திருவாய்மொழி**

கொண்டபெண்டிர் மக்கள்உற்றார் சுற்றத்தவர் பிறரும்
கண்டதோடு பட்டதுஅல்லால் காதன்மற்று யாதும் இல்லை
எண்திசையும் கீழும்மேலும் முற்றவும் உண்டபிரான்
தொண்டரோமாய் உய்யின்அல்லால் இல்லைகண்டீர் துணையே

*(மனைவி மக்கள் சுற்றம் உற்றார் மற்றவர் அனைவரும் பொருள் இருக்கும் வரையே அன்பு காட்டுவர். எட்டுத் திசைகளையும் கீழுலகம், மேலுலகம் ஆகிய இரண்டையும் உண்ட இறைவனின் திருவடிக்கே தொண்டராய் இருந்து உய்யுங்கள். அவனது திருவடிகளே துணை.)*

என்றும், **தத்துவராயர்**

தந்தையொடு தாய்மைந்தர் முன்பின்உடன் வந்தார்
தாரமொடு பேரர்மிகு கூறும் உறவாகும்
பந்தம்எனவே வந்த சொந்தம்இவை ஒன்றில்
பட்டதல காணும்இவை விட்டுவிடு நேராய்
அந்தம்முதல் தான்இன்றி என்றும் உளதானே
அண்டமுதலாய்அன்றி நின்றபொருள் ஆமா
இந்தஉலகே வந்து தந்து அருளுமாறாது
எந்தை சொரூபானந்தன் என்று மொழியீரே

*(தந்தை, தாய் என்னும் உறவு முறைகள் நம்முடன் இருந்து கொண்டு வருவன. இதனை விட்டு என்றும் நிலைத்து நிற்கக் கூடிய மெய்ப்பொருளை நாடினால் இந்த உலகமும் மேலுலகமும் வந்து சேரும்.)*

என்றும், **சிவதருமோத்தரம்**

மண்ணினும் தனத்தினும் மனைக்கு வாய்த்தநற்
பெண்ணினு மகவினும் பெரிய பேரினும்

துண்என விழைவினைத் துறந்த தூயரே
விண்ணினும் இன்புடன் விளங்கி மேவுவார்

*(மண், பொருள், வீடு, மனைவி, மகன் என்றவர்களை விட்டு வந்தவர். வினைகளைத் துறந்த தூயராவார். அவர்கள் விண்ணில் விளங்கிடும் இறைவனைச் சார்ந்து இன்பம் அடைவர்.)*

என்றும், **ஞானவாசிட்டம்**

தாரதனம் மிகும்என்னில் தளையாகும்
அப்பாசம் தளைத்துக் கொண்டால்
ஆர்அதனை அறுத்துஅகலும் விரகுஉடையார்
அறிவிலார் ஆசை விஞ்சிக்
கூர்இதயம் அப்போகத்து உழன்றுஉழக்கும்
கொடும்துயரைக் குறித்த போதே
தீர்அதையாம் அறிஞருக்கு விரத்திஉள
தாய்ச்சித்தம் தெளியும் அன்றே

*(மனைவி, செல்வத்திடத்து ஆசை அதிகமானால் விலங்கின் குணம் உண்டாகும். இவற்றிடத்துக் கொண்ட ஆசையினால் துன்பம் மிகும். இதனை உணர்ந்த மெய்ஞ்ஞானிகள் இவற்றை நீக்கித் தெளிவடைவர்.)*

என்றும், **பரமார்த்த தரிசனம்**

இறவா வகைதன் உள்ளத்தை
அடக்கும் அவனே தனக்கு என்றும்
உறவாய் உள்ளான் அல்லாதார்
தமக்கே பகையாய் ஒழுகுவார்
துறவாது ஒழுகும் துவந்துவங்கள்
துறந்தோன் தனையே தொடர்ந்து அவர்பால்
மறவாது எழுந்த மெய்அறிவெம்
மாயை மறைக்க மறையாதால்

*(தன் உள்ளத்தை அடக்குகிறவன் தமக்குத் தாமே உறவாயுள்ளவன். உள்ளத்தை அடக்க இயலாதவன் தமக்குத் தாமே பகையாவான். எல்லாவற்றையும் துறந்து இறைவனை மறவாது இருந்தால் மாயை மறையும்.)*

என்றும், **அமுதசாரம்**

மடம்படும் இப்பிறவி மாற்ற நினைவார்க்(கு)
உடம்பும் மிகைஎன்று உணர்வுற்(று) - அடங்கத்

துறவா மனிதர்க்கு எளிதன்றே துஞ்சிப்
பிறவா நெறியைப் பெற.

*(பிறவித் துன்பத்தை மாற்ற நினைப்பவருக்கு உடலை வளர்க்கும் உணர்வு அடங்கினால் பிறவா நெறி அடைவது எளிதாகும்)*

என்றும், **ஞான சூரியன்**

உடலை ஒண்பொரு ளினைஉலகு
இயல்பினை உயர்குல நெறிதன்னை
அடையும் மைந்தர்தாய் தந்தைநன்
மனைஎன அறைதரும் இவர்தம்மை
விடஇகழ்ந்து இறை கழலினை
மருவிய விமலர் தங்களைஎல்லாம்
உடைய நன்குஉறு மொழிமறை
முனிவர்கள் உரைப்பர் ஆத்தர்கள் என்றே

*(உடலை, பொருளை, உலக இயல்பினை இகழ்ந்து இறைவனின் திருவடியைத் தொழுது உய்பவரை முனிவர்கள் உயர்ந்தோர் என்பர்)*

என்றும், **நாலடியார்,**

துன்பம் பலநாள் உழந்தும் ஒருநாளை
இன்பமே காமுறுவர் ஏழையார் - இன்பம்
இடைதெரிந்து இன்னாமை நோக்கி மனையா(று)
அடைவு ஒழிந்தார் ஆன்றமைந் தார்

*(வாழ்வில் துன்பத்தைப் பலநாள் சுமந்து ஒரு நாள் கிடைக்கும் இன்பத்தை எண்ணி மகிழ்வர் அற்பர். நிலையாமையை உணர்ந்த மேலோர் பலநாள் வருந்தும் வாழ்வை மேற்கொள்ளார்.)*

என்றும், **சிவானந்தமாலை**

உடம்பு மனைவி மகவுஉற்றாரோடு ஊர்கேள்
அடைந்ததனம் வீடுஅடிமை காணி - தொடர்ந்தஇவை
என்னது எனும் சொல்நினைவு போனால் இறைஅருளால்
மன்னி அவனைப்பெறுமான் மா.

*(உலகியற் பொருள்கள் அனைத்தும் என்னது எனும் நினைவைத் தவிர்த்தால் உயிர் இறைவனைச் சேரும்)*

என்றும், ஒழிவிலொடுக்கம்

நாடுநகர் வீடுஉடையான் தாய்தந்தை நட்புமக்கள்
மாடுகுலம் பொன்உடம்பின் வாதனைகள் - கூடத்
தொடுத்தவலைக் கண்ணித் தொடக்குஇதனை இப்போது
விடப்பெறுவார் ஏன்பிறப்பார் மேல்

*(உலகியல் வாழ்வினால் வரும் துன்பங்களையும் விட்டவர் மீண்டும் பிறவார்.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

ஆயின் குடும்ப சகிதராய் நின்று மெய்யுணர்வு அடைந்தோர்கள் இலரோ? எனின்,

கற்றழீஇ முந்நீர் கடந்தோரு முண்மையா
னிற்றழீஇ மெய்யுணர் வுந்தீபற
ஏய்ந்தோரு மில்லெனா ருந்தீபற. 18

*கல்தழீஇ முந்நீர் கடந்தோரும் உண்மையால்*
*இல்தழீஇ மெய்யுணர்(வு) உந்தீபற*
*ஏய்ந்தோரும் இல்லெனார் ஊந்தீபற.*

என்பது, கல்லைப் புணையாகத் தழுவிக்கொண்டு கடலைக் கடந்தோரும் ஒருவருண்டு ஆகையால், மனை வாழ்க்கையைத் தழுவி நின்று கொண்டு மெய்யுணர்வை அடைந்தோரையும் இல்லை என்று சொல்லார்கள் பெரியோர்கள், என்றவாறு.

எனவே, அந்நிலைக்கண் மெய்யுணர்வை அடைதல் அரிதென்றது எனக் கொள்க. அங்ஙனம் கடல் கடந்தவர் அப்பரடிகள்.

ஆயின் எல்லோர்க்கும் துறவடைகுதல் கூடுமோ? எனின்,

எல்லோர்க்குங் காலன் றுறவீவ னீயாமு
னல்லோர் துறப்பர்தா முந்தீபற
நன்றறி வார்களென் றுந்தீபற 19

*எல்லோர்க்கும் காலன் துறவுஈவன் ஈயாமுன்*
*நல்லோர் துறப்பர்தாம் உந்தீபற*
*நன்றறி வார்களென்(று) உந்தீபற*

என்பது, ஆண், பெண், அலி என்று கூறப்பட்ட அனைவர்க்கும் இயமன் [1]சடிதியிலே பற்றொழிவு கொடா நிற்பன்; அவன் வந்து சரீர நீக்கம் செய்வதற்கு முன்னம் தாமே அச்சரீரத்தின் கண்ணே பற்றொழிந்து அதன் சார்பாகிய புறப்பற்றையும் கைவிட்டு மெய்யுணர்வு அடைவோரே நன்மையினை உடையார் ஆவர். அவரே தமக்கு உறுதியாயின அறிவார் என்றவாறு.

இதற்குப் பிரமாணம், **சித்தாந்த கரணம்**

எல்லோர்க்குங் காலன் துறவுஈவன் ஈந்தபிற்கேள்
பல்லோரும் மாய்ந்த மனைப் பால்உடலை - ஒல்லையினில்
வைப்பர் சமாதி இந்தவாறு அவர்செயா முன்நலோர்
அப்பரிசே தாம்புரிவ ரால்

*(எல்லோர்க்கும் எமன் பற்றுக்களை ஒழிப்பான். பின்னர் மாய்ந்த உடலை சமாதியிலே வைப்பர். இக்கதி அடைவதற்கு முன்னர் நல்லோர் பற்றுக்களை விட்டு மெய்யுணர்வை அடைவர்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

துறவடைந்தோர் அடைந்த மாத்திரத்திற் செய்யும் கருமம் யாதென்னின்?

இருமெயுண் மைவல்லோர்க் கிம்மெய் கொண்டம் மெய்
விரவினாய்ந் தெய்தலே யுந்தீபற
வேலையா சானையுற் றுந்தீபற 20

*இருமெய் உண்மை வல்லோர்க்கு இம்மெய் கொண்டம் மெய்*
*விரைவின்ஆய்ந்து எய்தலே உந்தீபற*
*வேலைஆ சானைஉற்(று) உந்தீபற*

என்பது, ஒரு மெய்யென்னும் பெயரினை உடைய சரீரத்தினது அசுத்தமும், அஃது அளவற்ற துக்கத்தோடு அவதி அறிதற்கு அறிய அநித்தியத்தோடும் கூடியிருத்தலையும் மற்றுமொரு மெய்யென்னும் இயல்பினை உடைய வீட்டினது [1]பரிசுத்ததையும், அதனது நிரதிசயானந்தமும் நித்தியத் தன்மையும் அந்த வீட்டினை அடைவதற்கு இந்தச் சரீரம் இன்றியமையாமையும், [2]சென்மாந்தரத்திலே செய்த தபோபலத்தால் இந்தச் சரீரம் பெற்ற அருமையும்,

1 - விரைவில், 2- தூய்மை, 3 - முற்பிறவி,

[1]பிரத்தியட்சத்தினாலும் [2]வாக்கியத்தினாலும் கண்டும் கேட்டும் அறிந்துள்ளோர்க்கு இந்தச் சரீரம் நீங்குவதற்கு முன்பே [3]அநாசரியனை நீங்கி ஞானாசாரியனை அடைந்து [4]அதிசீக்கிரத்தில் வீட்டு நெறியை விசாரித்து நிட்டை கூடுதலே கருமம், என்றவாறு.

இந்தத் தேகம் அசுத்தமும், துக்கமும் நிலையாமையும் உடையதென்பது பிரத்தியட்சமாயினும் [5]பெத்தான்மாக்கள் நிமித்தம் புராதனர் கூறியிருத்தலின் வாக்கியப் பிரமாணமும் காட்டுதும்

தேகம் இழிவுடையது என்பதற்குப் பிரமாணம், **திருக்கடைக்காப்பு,**

என்பினால் கழி நிறைத்து இறைச்சி
 மண்சுவர் எறிந்து இது நம்இல்லம்
புன்புலால்நாறும் தோல்போர்த்துப்
 பொல்லாமையான் முகடுகொண்டு
முன்புஎலாம் ஒன்பது வாசலார்
 குரம்பையின் மூழ்கிடாதே
அன்பன் ஆரூர்தொழுது உய்யலாம்
 மையல்கொண்டு அஞ்சல்நெஞ்சே

*(எலும்பாகிய கோலை நட்டு இறைச்சியாகிய சுவர் எடுத்து, தோலாகிய கூரை போர்த்து ஒன்பது வாசல் வைத்து எடுத்த வீடாகிய இவ்வுடல் நிலையானது என்று மயங்காது இறைவனைத் தொழவேண்டும்)*

என்றும், **திருப்பாட்டு,**

உதிர நீரிறைச்சி குப்பை யெடுத்தது மலக்குக் கைம்மேல்
வருவதோர் மாயக்கூரை வாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
கரியமால் அயனும் தேடிக் கழலிணை காண மாட்டா
அரியனாய் நின்ற ஆரூர் அப்பனே அஞ்சினேனே

*(அழிந்து போகும் உடலை மதித்து வாழும் வாழ்க்கையை விரும்பாது சிவபெருமானை நினைத்து உய்வடைய வேண்டும்)*

*1- காட்சி, 2 - உரை, 3 - ஆகாதார், 4 - மிகவிரைவில், 5 - கட்டுண்ட உயிர்கள்*

என்றும், **திருவாசகம்**

பொத்தைஊன் சுவர் புழுப்பொதிந்து உளுத்(து) அசும்
பொழுகிய பொய்க்கூரை
இத்தை மெய்எனக் கருதி நின்று இடர்க்கடல்
சுழித்தலைப் படுவேனை
முத்து மாமணி மாணிக்க வயிரத்த
பவளத்தின் முழுச்சோதி
அத்தன் ஆண்டுதன் அடியரில் கூட்டிய
அதிசயம் கண்டாமே

*(நாறும் உடலை மெய்யெனக் கருதி துன்பக்கடலில் மூழ்காமல் அடியார் கூட்டம் சேர்க)*

என்றும், **சிவதருமோத்தரம்,**

பொற்கடத்துஉள்மலம் பொருந்தின்
புல்லியரும் பொருள்நசையால்
அக்கடத்தைப் பற்றி எடார்
அங்கையினால் அவனிதனின்
மக்கள் தமது உடலினைத்தாம்
மலபாண்டம் என அறிந்தும்
எக்கணக்கால் இகழாதே
அருவருப்பு அற்று இருக்கின்றார்

*(மலம் நிறைந்த உடலை அருவறுக்காது எதற்காக உலகத்தவர் உடலை மதித்துப் போற்றுகின்றாரோ?)*

என்றும், **போதாமிருதம்,**

அடுத்தவை ஊத்தை யாக்கும் உடம்பைநல் அறிவால்தோலை
விடுத்துள வேறுவேறா நரம்பினோடு இறைச்சி என்பால்
தொடுத்தஇம் மாலை தன்னைத் தூய்துஇன்மை நோக்கித் துன்பம்
எடுத்தஇக் காமபாசம் எறிகிலார் என்னே என்னே

*(உடல் தூய்மையற்ற தொகுப்பு என்பதை உணர்ந்து காமத்தை விடாது நிற்போர் பெறும்பயன் யாதோ?)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

தேகம் துன்பமுடையது என்பதற்குப் பிரமாணம்,

**சிவானந்தமாலை**

இருவகையா மான்மிகமிக் காயத்தின் நெஞ்சின்
வரும்அவை தான்ஓதக்கேள் மாணாப் - பொருவரிய
குன்ம மதிசாரம் வெப்புக் கொடுஞ்சூலை
அன்னபிறவு இன்னங் கேளாய்

*(குன்மம் (வயிற்றுவலி), அதிசாரம், வெற்பு, சூலை முதலிய நோய்களால் உடல் துன்புறும். இவை ஆதியான்மீகத்தால் வரும் துன்பங்கள்)*

அன்றியும்,

மக்களொடு துட்ட மிருகம் பேய் வன்பசுநற்
பக்கிபறிப் போர்அசுரர் பற்பலவும் - தொக்கில்உறல்
சோகம் அசூயை அபிமானம் மாச்சரியம்
ஆகுபல உள்ளுறு நோயாம்

*(ஆதியான்மீகத்தால், மக்கள், விலங்கு, பேய், கள்வர், சோகம், அசூயை (பொறாமை), அபிமானம், மாச்சரியம் போன்றவற்றால் துன்பங்கள் நேரிடும்)*

அன்றியும்,

சீதம்உடன் வெம்மை செறிந்து மிகச்சலிக்கும்
வாதம் மழைதடித்து வானில்இடி - தீதில்
கௌரிஒரு பாகன் கருணையினால் ஆகும்
பௌதிகம் ஈதுஎன்றே பகர்.

*(ஆதிபௌதீகத்தால் வரும் துன்பங்களாவன, குளிர், வெப்பம், வாதம், பெருமழை, இடி முதலியனவாம்)*

அன்றியும்,

கருவாய் உதரத்தில் கட்டுஉண்டல் மண்ணில்
உருவாகி உற்பவித்தல் ஓங்கல் - நரைதிரைதான்
மைவிரவு அஞ்ஞானம் மரணம் நரகம்சனனம்
தெய்விகம் ஈதுஎன்றே தெளி.

*(ஆதி தெய்வீகத்தால் வருவன; கருவாய் வயிற்றில் கட்டுண்டல்,*

*மண்ணில் பிறத்தல், உடல் வளர்த்தல், நரை திரை மூப்பு, மரணம் முதலியன)*

என்றும், **சிவதருமோத்தரம்,**

**அன்னைதன் வயிற்றுஇடை அனேக துன்பமே**
**பின்னையும் பிறப்புழிப் பெரிது துன்பமே**
**தன்னையர் அறவுரை தரிக்கத் தாதையோர்**
**சொல்நவில் குரவனும் சுளியத் துன்பமே**

*(அன்னை வயிற்றில் கருவாய்க்கிடக்கும் போதும், பிறக்கும் போதும், பெற்றோர், குரு அறவுரை கூறும் போதும், துன்பமே பிறிதில்லை)*

அன்றியும்,

**காலையும் மலத்தினால் கடிது துன்பமே**
**சாலவும் பசியினால் தளர்வர் உருச்சியின்**
**மாலையில் காமமும் மலிய வாடுவர்**
**வேலைகள் தொறும்இடர் விளையும் விஞ்சியே**

*(காலையில் மலத்தினாலும், உச்சியில் பசியினாலும் மாலையில் காமத்தினாலும் துன்பமே அல்லால் பிறிதில்லை)*

என்றும், **தத்துவாமிர்தம்,**

**பிணிகளும் கவலையும் பேசின் ஏழ்கடல்**
**அணைதரு மணலினும் அனந்த கோடியால்**
**இணைதரும் பிறவியில் இடர் அலாதுஒரு**
**கணம்அதும் இலதுஎனக் கண்டு நொந்தனன்**

*(மனிதனுக்கேற்படும் நோய்களும் துன்பங்களும் ஏழுகடல்களின் கரைகளில் உள்ள மணலிலும் பலவாம். பிறவியில் துன்பமில்லாதது இல்லை)*

என்றும், வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

தேகம் அநித்தியம் என்பதற்கு உதாரணம், **திருவள்ளுவர்.**

**நெருநல் ஊன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்**
**பெருமை உடைத்து இவ் வுலகு**

*(நேற்றிருந்தவன் இன்றில்லை என்னும் பெருமையுடையது இவ்வுலகு)*

என்றும், **திருக்கடைக்காப்பு,**

தந்தையார் போயினார் தாயரும்
 போயினார் தாமும் போவார்
கொந்தவேல் கொண்டுஒரு கூற்றத்தார்
 பார்க்கின்றார் கொண்டு போவார்
எந்தநாள் வாழ்வதற்கே மனம்
 வைத்தியால் ஏழை நெஞ்சே
அந்தண் ஆரூர்தொழுது உய்யலாம்
 மையல்கொண்டு அஞ்சல் நெஞ்சே

*(உலகத்தைவிட்டு எல்லோரும் ஒருநாள் போவார்கள். கூற்றுவன் எல்லோரையும் கண்காணித்துக் கொண்டிருக்கிறான். எனவே இறைவனைத் தொழுது உய்ய வேண்டும்)*

என்றும், **தேவாரம்,**

நடலை வாழ்வுகொண் டென்செய்தீர் நாணிலீர்
சுடலை சேர்வது சொற்பிர மாணமே
கடலி ன்நஞ்சமு துஉண்டவர் கைவிட்டால்
உடலி னார்கிடந் துஊர்முனி பண்டமே

*(துன்பமயமான வாழ்க்கையில் அத்துன்பம் நீங்குவதற்கு முயலாமல் இறுதியில் சுடலை சேர்வதால் என்னபயன்? எனவே சிவபெருமானைப் போற்றி உய்வீர்களாக)*

என்றும், **திருப்பாட்டு,**

பரிந்த சுற்றமும் மற்றும்வன் துணையும்
 பலரும் கண்டுஅழுது எழஉயி ருடலைப்
பிரிந்து போமிது நிச்சய மறிந்தால்
 பேதை வாழ்வெனும் பிணக்கினைத் தவிர்ந்து
கருந்த டங்கண்ணி பங்கனை உயிரைக்
 கால காலனைக் கடவுளை விரும்பிச்
செருந்தி பொன்மலர் திருத்தினை நகருட்
 சிவக்கொழுந் தினைச்சென் றடை மின்னே

*(எல்லோரும் அழும்படி உடலை விட்டு உயிர்போவது உறுதி. எனவே*

*காலகாலனாகிய சிவபெருமானை வணங்கி உய்வடைய வேண்டும்)*

என்றும், **கந்தரனுபூதி,**

கூகா வெனஎன்கிளை கூடி யழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
நாகா சலவே லவநா லுகவித்
தியாகா சுரலோக சிகா மணியே

*(எல்லோரும் கூடி அழும்படி உயிர்போவதற்கு முன்னால் மெய்ப்பொருளாகிய இறைவனை வணங்க வேண்டும்)*

என்றும், **கந்தரலங்காரம்,**

கூர்கொண்ட வேலனைப் போற்றாமல்
ஏற்றங்கொண்டு ஆடுவிர்காள்
போர்கொண்டகாலன் உமைக் கொண்டு
போம்அன்று பூண்பனவும்
தார்கொண்ட மாதரும் மாளிகை
யும்பணச் சாளிகையும்
ஆர்கொண்டு போவரை யோகெடு
வீர்நும் அறிவின்மையே

*(முருகப் பெருமானைப் போற்றாமல் செருக்கோடு திரிந்தோரே, காலன் உமைக்கொண்டு போகும் நாளில், உம்முடைய செல்வங்களை எல்லாம் யார் கொண்டு போவார்கள் என்றவாறு)*

என்றும், **பட்டணத்துப் பிள்ளையார் பாடல்,**

வினைப்போகமே ஒரு தேகம்கண்
டாய்வினை தான்ஒழிந்தால்
தினைப்போதளவு நில்லாது கண்டாய்
சிவன்பாதம் தன்னை
நினைப்போரை மேவி நினையாரை
நீங்கி நெறியின்நின்றால்
உனைப்போல் ஒருவர்உண்டோ மனமே
எனக்கு உற்றவரே

*(வினைப்போகமே இவ்வுடலாகும்; வினையொழிந்தால் இவ்வுடல் ஒருகணமும் நில்லாது. சிவனடியாரை அடைவதல்லால் உய்யும் நெறி வேறில்லை)*

என்றும், ***திருவாய்மொழி,***

மின்னில் நிலையில்இம்
மன்னுயிர் ஆக்கைகள்
என்னும் இடத்திறை
உன்னுமின் நீரே

*(மின்னலைப் போல நிலையில்லாதது இவ்வுடல் என்பதை உணர வேண்டும் என்பதாகும்)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

நிதியும் அரசும் செயலும் இவ்வுடம்பும்
வேண்டுவது நிற்கின் அன்றோ
விதியில்வரும் காலனால்இவை எல்லாம்
சிலநாளில் வீந்து போகும்
உதிரமொடு தசைஉடைத்தாய் உடைவதுஇயல்
பாய்ந்தாழ்ந்தோர் உயர்ந்தோர் ஒத்தே
அதிகசரா மரணம்உறும் தரம்அறியாது
இவ்வுடலின் அழகுஎன் கொல்லோ

*(செல்வமும், செல்வாக்கும், உடலும் எல்லாம் காலன் வரும் நாளில் அழிந்து போகும். அவ்வாறிருக்க இவ்வுடல் கொண்டு பெறும் இன்பம் எதுவும் இல்லை)*

என்றும், **நாலடியார்,**

புன்நுனிமேல் நீர்போல் நிலையாமைஎன்று எண்ணி
இன்னினியே செய்க அறவினை - இன்னினியே
நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேளல்அறச்
சென்றான் எனப் படுதலால்

*(உடல் நிலையற்றது. புல்நுனிமேல் உள்ள பனி சூரியனைக் கண்டதும், போவதுபோல உடலும் அழியக்கூடியது. எனவே தாழாது அறம் செய்து உய்க.*

என்றும், ***சிவஞானசித்தியார்***

கருவினுள் அழிவதாயும் கழிந்திடாது அழிவதாயும்
பரிணமித்து அழிவதாயும் பாலனாய் அழிவதாயும்

தருணனாய் அழிவதாயும் தான்நரைத்து அழிவதாயும்
உருவமே அழிவேஆனால் உள்ளபோதே பார்உய்ய

*(மனிதவுடல் கருவிலும், பிறப்பிலும், வளர்ச்சியிலும், இளமையிலும், முதுமையிலும் என்று வரையரையின்றி அழியக்கூடியது. எனவே உடல் உள்ளபோதே உய்யும் வகை தேடல் வேண்டும்.*

என்றும், **தத்துவராயர்**

கொட்டாவி கொண்டவர் விட்டார் உயிர்என்று கூட நின்று
நட்டார்கள் சுட்டுநடக்கும் வகைஇது கண்டுகண்டும்
ஒட்டாது என் நெஞ்சம் ஒருகால் இதுஎன்ன என்று உணர உம்பர்க்கு
எட்டாதவன் என்னை ஆளுடையான் அருள் இல்லவர்க்கே

*(உடல் விரைந்தழிதலை எண்ணி இறையருள் பெற முயல வேண்டும்)*

என்றும், **ஒழிவிலொடுக்கம்,**

தேடப்படும் பொருளைச் சிக்கெனவாகப் புதைத்துக்
கோடிக்குஒரு நிமிடம் கொள்ளுகினும் - கூடாத
வாணாளை வீண்கழிக்கும் மானுடரைப் போல்மயக்கம்
பூணார்பொய் கண்டு துறப்போர்

*(எத்தனை பொருள் சேர்த்தாலும் காலத்தை வீணாய் கழிக்காது மெய்ஞ்ஞானிகள் விரைந்து துறவறம் பூண்பர்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

வீடு சுத்தமாய் நித்தயமாய்ச் சுகமாயிருக்கு மென்பதற்குப் பிரமாணம் : **தேவிகாலோத்தரம்**

ஒரு பொருள் எக்காலத்தும் உளதாகிச் சிறப்புஉடைத்தாய்
இருவினை இன்றிமேலாம் இன்பத்தை அளிப்பதாகும்
பொருவுஇலா இதன்மேல்அன்பு பொருந்திடாதாரும் உண்டோ
திருவுலா அகன்றகல்வி சிறந்த சான்றோர்கள்தாமே

*(என்றும் நிலைத்திருக்கக்கூடிய பரம்பொருளை முத்திக்குரிய ஞானத்தைப் பெற்ற சான்றோர்கள் அன்போடு போற்றுவர்)*

என வரும். மற்றும் வருவனவற்றால் காண்க. அத்தன்மைய

வீடடைதற்கு இத்தேகம் இன்றியமையாதென்பதற்குப் பிரமாணம், **சிவதருமோத்தரம்,**

அழியும் ஆக்கை கொடே அழியாப் பதங்
கெழுமுவார் பெற்றதே நல்லகேள்வியும்
அழியும் ஆக்கை தனை அழியாதுஎன
விழுவரே நரகக் குழி வெய்யரே

*(அழியும் உடலைக் கொண்டு அழியாத முத்தியை பெறுவதற்கு உதவுவதே நல்லறிவாகும்.)*

என்றும், **பிரபுலிங்க லீலை**

எய்தற்கு அரிய யாக்கைதனக்கு எய்திற்று
என்றால் அதுகொண்டு
செய்தற்குஅரிய அறங்கள்பல செய்து
துயர்கூர் பிறவியின்நின்று
உய்தற்கு ஒருமை பெறஎண்ணாது உழல்வோன்
உடம்பு பொற்கலத்தில்
பெய்தற்கு உரிய பால்கமரில் பெய்வது
ஒக்கும் என்பரால்

*(கிடைத்தற்கு அரிய உடம்பைக் கொண்டு செய்தற்கரிய அறங்களைச் செய்து துன்பமான பிறவியிலிருந்து உய்வதற்கு முயல வேண்டும்)*

என்றும், **நாலடியார்,**

அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தால்
பெரும்பயனும் ஆற்றவே கொள்க - கரும்புஊர்ந்த
சாறுபோல் சாலவும் பின்உதவி மற்றுஅதன்
கோதுபோல் போகும் உடம்பு

*(அரிய உடம்பைக் கொண்டு செய்தற்கரிய அறங்களைச் செய்க. பிறவியிலிருந்து உய்வதற்கு முயல வேண்டும்)*

என்றும், **சித்தாந்தகரணம்**

மந்திரவாள் பெற்றும் பகைவெல்லான் மற்றதுகொண்டு
அந்தோதன் மெய்யை அரிந்தான் போன்று இந்தஉடல்
கொண்டு முத்திசெல்லும் குறிப்பின்றிச் சிற்றின்பம்
கண்டுவினைக் காளாம் கணக்கு.

*(மந்திரவாள் பெற்றவன் பகைவனைக் கொல்லாமல் தன்னுடலை அழித்துக் கொள்ளாது கிடைத்தற்கரிய உடம்பைக் கொண்டு முத்திக்கு வழிதேடிக் கொள்ளவேண்டும்)*

என்றும், வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

இச்சரீரம் பெறுதற்கரியதென்பதற்குப் பிரமாணம், **திருமந்திரம்,**

இக்காய நீக்கி இனியொரு காயத்தில்
புக்குப் பிறவாமை போம்வழி தேடுமின்
எக்காலத்து இவ்வுடல் வந்துஎமக்கானதுஎன்று
அக்காலை உன்ன அருள் பெறலாமே

*(இவ்வுடலை நீக்கி இனியொரு உடலில் புகாதபடி உய்யும்வழி தேடவேண்டும்)*

என்றும், **அறிவானந்த சித்தியார்,**

தேரிற் சதுரயுகம் இரண்டாயிர நாள்திங்கள் ஆண்டு
ஓரில் அந்நூற்றின் அயன் மாண்டுஉகாந்தமும் உற்றுத் தென்பால்
சேருநுகத் துளையில் வடபாற் கழிசெல் எளிது
சாரும் பிறப்பு ஒழித்து இம்மானுடத்தில் சனிக்குஅரிதே

*(பல்வேறு பிறவிகளில் உழன்ற பின்பே கிடைத்தற்கு அரிய மானுடப்பிறவி கிடைக்கும். அதை வீணாக்கக்கூடாது)*

என்றும், **சிவஞான சித்தியார்,**

அண்டசம் சுவேதசங்கள் உற்பிசஞ் சராயு சத்தொடு
எண்டரு நால்எண் பத்து நான்கு நூறு ஆயிரத்தான்
உண்டுபல் யோனிஎல்லாம் ஒழித்து மானுடத்து உதித்தல்
கண்டிடில் கடலைக் கையால் நீந்தினன் காரியம்காண்

*(நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பில் உள்ள எண்பத்து நான்கு நூறாயிரம் வகையான பிறவிகளை ஒழித்தபின்பு கிட்டுவதே கிடைத்தற்கரிய மனிதப் பிறவியாகும். இது கடலைக் கையால் நீந்திக் கடத்தற்கு ஒப்பானதாகும்.)*

என்றும், **அனந்த போதம்,**

சனித்திடும் சராசரத்தின் தான்மிக அரியது ஒன்றே
மனித்தராய் அறிவுஉண்டாகை மற்றதின் அரியது ஒன்றும்

அனித்தமில் தன்னைஆயும் அறிவதின் அரியதையா
இனித்தமாம் இன்பம் காண்பார் யாரினும் அரியர் அன்றே

*(பல்வேறு பிறவிகளில் மனிதப்பிறவியே அரிது; அதிலும் அறிவோடு விளங்குவது அரிதிலும் அரிது; அதிலும் தன்னை உணரும் அறிவோடு விளங்குவது அரியது; அதிலும் முத்தியாகிய இன்பத்தை அடைதலே அரிதிலும் அரிதாகும்.)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

எறியும் கடலின் நுகத்துளையில்
ஆமைக் கழுத்துப் புகுவதுபோல்
பொறிவெம் பிறவி அனேகத்தால்
புருடன் விவேகி எனப்பிறந்து
முறியும் பிறவி பயனிலதுஇம்
மோகம் அமையும் செய்தொழிலால்
செறிவது என்னே இவற்றாலே
தினங்கள் எல்லாம் சென்றிடுமால்

*(கிடைத்தற்கு அரியது அறிவோடு கூடிய மானிடப் பிறவி; அதில் பயனில்லாதவற்றைச் செய்து வாழ்நாளை வீணாள் ஆக்கக் கூடாது)*

என்றும், **திருக்கடைக்காப்பு,**

நீநாளும் நன்நெஞ்சே நினைகண்டாய் ஆரறிவார்
சாநாளும் வாழ்நாளும் சாய்க்காட்டு எம்பெருமாற்கே
பூநாளும் தலைசுமப்பப் புகழ்நாளும் செவிகேட்ப
நாநாளும் நவின்று ஏத்தப் பெறலாமே நல்வினையே

*(சாநாளும், வாழ்நாளும் யாரும் அறிதற்கு அரியது. எனவே இறை நெறியில் நின்று நல்வினைகளை ஈட்டி உய்ய வேண்டும்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

அநாசாரியனை நீக்கி என்பதற்குப் பிரமாணம் : **பெருந்திரட்டு (சித்தாந்த தீபிகை),**

வேதியர்ஆகி நான்காம் வெவ்வேறும் அனுலோமத்தால்
சாதிதான் சொல்லினிற்க சடகன்மா வாகி லும்கேள்
கோதுஇலா ஞானம்இல்லோன் குருவலன் பாச பந்தம்
சேதியா வீட்டைக் காட்டும் தெளிவு இலானாகில் அன்றே.

*(பாசத்தை நீக்கிப் பரம்பொருளைக் காட்டும் குற்றமில்லாத ஞானம் வாய்க்கப்பெறாதவன் எக்குடியில் பிறந்திருந்தாலும் குருவாகான்)*

என்றும், **மெய்ம்மொழி,**

ஆர்த்தன பிறவித்துன்பம் அறுத்து அறிவுலகின் மிக்க
மூத்தவர் போல் நடித்து மூடமா மனிதர் எல்லாம்
தீர்த்திடார் தம்குற்றத்தைச் சிலர்குற்றம் தீர்க்கும் தன்மை
பேர்த்துஅடி இடமாட்டாதான் பிறர்க்கு ஊன்றுகோலாம் ஆங்கே

*(பிறவித் துன்பத்தை அறுக்கும் நெறி அறியாது குரு போல நடிப்பவரால் பயனில்லை)*

என்றும், **அமுதசாரம்**

துயில் புணர்ப்பால் கர்ப்பம்தொடு கடல்நீராமை
மயிர்ப்படாம் மின்மினியின் வன்னி - முயல்கோடு
எருத்தில்பால் மெய்உணர்வு இல்லாதான் பண்ணும்
குருத்துவமும் நேராகக் கொள்

*(மெய்யுணர்வு இல்லாதவன் குருத்துவமானது, கனவில் புணர்ந்து கருப்பமடைதல், ஆமைமயிர்க் கம்பளம் மின்மினிப்பூச்சியின் நெருப்பு, முயற்கொம்பு, எருத்துப்பால் போன்றவற்றுக்கு ஒப்பானது. அதாவது பயனில்லை)*

என்றும், **அறிவானந்த சித்தியார்,**

அளிமலர் விட்டு விட்டு ஆய்ந்து மதுவுண்டு அகநிரப்பிக்
களி வந்து இருந்த கருத்துஇங்கு உறநின் கவலை என்னும்
விளிவினை விட்டு விட்டு ஆய்ந்து வியன்குரு மேவி நின்று
தெளிவந்து உனைக்கண்டிடும் அளவும் குருத் தேடிடுமே

*(சற்குருவைத் தேடி ஆராய்ந்து கண்டுகொண்டு தன்னை அறியும் ஞானத்தைப் பெறுதல் வேண்டும்)*

என்றும், **அருட்பிரகாசம்,**

மெய்ம்மணம் அன்றி முன் சிற்றிலின்
    கண்ஒரு மெல்லியலைப்
பொய்ம்மணம் செய்தோன் பதியன்று
    அவர்க்குஎனல் போலும்இறை

செம்மை நெறி அறிவிப்பான் குருவன்றித்
தேர்ந்து தம்மின்
அம்மயல் ஈர்க்க அறியார் குருவோ
பிறர்க்கு ஆய்ந்திடினே

*(பெண்குழந்தைகள் விளையாட்டாகத் திருமணம் செய்து கொண்டு இவன் என் கணவன் என்று சொல்லுவதை ஒத்தது செம்மை நெறி அறிவிக்கும் திறனற்றவர்களை குருவெனக் கொண்டாடுவதாகும்.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க. ஞானாசிரியனை அடைவதற்குப் பிரமாணம் : **மெய்ம்மொழி**

பிறிந்திடக் கடைந்த வெண்ணெய் பின்புமோர் அதனைக்கூடிச்
செறிந்திடாவாறு போலத் தேகமும் தேகி தானும்
பிறிந்திடப் பார்த்த பின்பு பெயர்த்ததின் நிற்பினும்கேள்
செறிந்திடா வாறு செய்யும் தேசிகன் தேசிகன் தான்.

*(தயிரைக் கடைந்து வெண்ணெயையும் மோரையும் பிரித்துவிட்டால் அவை மீண்டும் சேராதவாறு போல ஆன்மாவையும் பற்றையும் பிரித்து மீண்டும் அவை சேராதவாறு செய்யும் ஆற்றல் உடையவனே சற்குரு ஆவான்.*

என்றும். **மெய்ஞ்ஞான விளக்கம்,**

கரையறு பிறவிவெங் கடலு ளேவிழுந்(து)
அயர்வுரு துயருழந் தவரையோ என
விரைவொடு வினைகெட நோக்கி வேதகக்
கரையினை அருள்பவன் கருணை நன்குரு

*(பிறவிக்கடலில் விழுந்து துன்புறும் ஆன்மாக்களை அவற்றின் வினைகெடுமாறு முத்திக் கரையில் சேர்ப்பவனே நல்ல குருவாவான்)*

என்றும், **உண்மை நிலயம்**

சிறுபுலைக்கு இரும் குலப்பேர் செப்பலின்
மெய்ப்பேர் கொண்டுஇங்கு
இறும்உடல் குறைபார்த்து அஞ்சி எதார்த்தமாய்
இருத்த லாலே
பெறும்ஒரு மெய்ப்பேர் கொண்ட பேரின்ப
வீடு காண்பார்

குறைவறத் தேர்ந்து ஞானக் குரவர்தாள்
அடைந்து உய்வாரால்

*(அழியும் பிறவியில் சிக்கித்துன்புறுவோர் வீடுபேறு அடையும் பொருட்டு குற்றமற்ற ஞானகுருவைத்தேடி அடைந்து உய்திபெறுதல் வேண்டும்.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

அங்ஙனம் அடைந்த அதிபக்குவம் உடைய சீடர்க்குச் சிவமே குருவடிவமாய் வந்து [1]அனுக்கிரகம் பண்ணும் என்று மேற்கூறுகின்றார்.

மாய்க்கு நோய்க் கன்றே மருந்தீகு வாரின்மா
றேய்க்குமோர் பக்குவற் குந்தீபற
தேசிகனாய்ச் சிவ முந்தீபற 21

*மாய்க்கு நோய்க்(கு) அன்றே மருந்துஈகு வாரின்மால்*
*தேய்க்குமோர் பக்குவற்(கு) உந்தீபற*
*தேசிகனாய்ச் சிவம் உந்தீபற*

என்பது, இவ்வுலகத்தின் கண்ணே வைத்தியராயினோர் இந்நோய்க்கு இத்தனை தினத்தின் மேல் [2]ஔடதம் கொடுக்க வேண்டும் என்று நியமம் இருப்பினும், அந்த அவதிக்கு உட்பட்ட ஒரு தினத்தின் கண்ணே நாவிழுதல் முதலிய [3]அசாத்தியங்களைக் காட்டுமாயின், அந்நோய்க்கு அக்கணமே மருந்து கொடுத்துத் தீர்ப்பது போலப் [4]பவரோக வைத்தியராகிய ஆசாரியர் சீடர்க்கு உபதேசிக்கும் முறைமை, அவரவர் வருணத்திற்கு ஏற்கச் சோதிக்கும் காலங்களும்; அவற்றுள்ளும் உயர்ந்த பக்குவர்க்கு ஒருவருடம் அளவாயினும் சோதிக்க வேண்டும் என்பன உளவாயினும் பரமசிவமே குருவடிவமாகி எழுந்தருளி வந்து [5]அநாசாரம் சற்றுமின்றி ஆசாரங்கள் அனைத்தையும் இயல்பாய் உடைய [6]அதிதீவிர பக்குவம் உடையோனுக்கு வந்தவுடனே அனுக்கிரகம் செய்து பிறவிச் செருக்கை அழிக்கும் என்றவாறு.

அவரவர் வருணத்திற்கு ஏற்கச் சீடரைச் சோதித்தல்

---

1 - அருள், 2 - முற்றுந்துறத்தல், 3 - தன் இணைப்பு, 4 - நன்மை, தீமை, 5 - ஒழுக்கமின்மை,
6- மிகு விரைவு

என்பதற்குப் பிரமாணம்; **சைவசமய நெறி,**

பண்ணிடுக தீக்கையினைப் பக்குவம்பார்த்து ஆறிரண்டுள்
எண்ணிமும் மூன்றுஆறின் மூன்றின்

*(மாணவர்களின் பக்குவத்திற்கு ஏற்ப அருள்நூல்கள் வகுத்துள்ள தீக்கைகளில் ஏற்றதைச் செய்க)*

அன்றியும்,

சூத்திரர் ஆதியர்க்குச் சொன்னமுறையால் ஆண்டு
பார்த்தே அனுக்கிரகம் பண்

*(குடிப்பிறப்பிற்கும், பக்குவத்திற்கும் ஏற்ப மாணவர்களுக்கு குரு அருள் புரிய வேண்டும்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

அவரினும் பக்குவம் உயர்ந்தோர்க்கு ஒருவருடம் அளவாயினும் சோதிக்க வேண்டும் என்பதற்குப் பிரமாணம்: **சிவநெறிப் பிரகாசம்,**

தேசிகரும் மாணவர்கள் செய்தி உணர்ந்திடவே
சிறியோரைப் பெரியோர்செய் தொழில் அதனில்செறித்தும்
ஏசிலாரம் பெரியோரை ஈன மாம்தொழிற்கே
இசைத்தும் அடித்தும் வைதும் இவ்வாறு செயவும்
கூசியிடா துஇட்டபணி செய்து குருபத்தி
குறைவு இலராய் நம்பினராய்த் துரோகம் இன்றி
மாசிலராய் மனவாக்குக் காயத்தால் குருவின்
வாக்கிய பாலனம் செய்யும் மதிமானும் ஆயே

*(பக்குவமுடைய மாணவன், குரு என்ன செய்தாலும் கூசாது அவரிட்ட பணி செய்து குருபத்தியில் வழுவாது குருத்துரோகம் செய்யாது மனத்தாலும், மொழியாலும், உடலாலும் குரு சொன்னபடி நடத்தலே சிறப்பாகும்.)*

அன்றியும்,

ஆதரவும் சாந்தியும் நற்பொறுமை தானும்
அசத்தியம் இல்லாஉரையும் ஆசாரம் தவமும்

தீதான செயல்மறந்து நன்றி அறிந்திடலும்
சிவாகமத்தைக் கேட்டுஅதனைத் தெளிதல் தானும்
போது அலறப் பொறிவழியின் நிற்றல் ஆதிப்
புகன்றுஉடைய நற்குணங்கள் பொருந்தி மேலும்
ஓதலுறும் குணம்குற்றம் சோதித்தார் வருடமுறும்
குணத்தின் அளவாகத் தீக்கைசெய்வர் உயர்ந்தோர்

*(அன்பு, அமைதி, பொறுமை, வாய்மை, தூய்மை, தவம், தீவினையெச்சம், நன்றியுடைமை, சிவாகமக்கல்வி, புலனடக்கம் ஆகிய நற்குணங்கள் பொருந்திய மாணவனை நன்கு சோதித்து தீட்சை செய்பவரே உயர்ந்தோராவர்.)*

என்றும், **அருட்பிரகாசம்,**

குருபரனுக்கு அவன்நெஞ்சகம் போல்அனுகூலத்தனாய்க்
கரசரண் ஆதியின் ஏவல்செய்தே தினம்கண்ணுக்கு இமைபோல்
உரியமனை முதல்யாவையும் காத்து உண்மையாய் ஒருதற்
பரம்இவனே எனக்காண்பான் சற்சீடன் பகர்ந்திடினே

*(ஒரு மாணவன் குருவினுடைய உள்ளத்திற்கு இசைந்தவனாய் அவனிட்ட பணிகளை எல்லாம் விருப்பத்தோடு செய்து குருவின் உடைமைகளைக் கண்ணிமை போல் பாதுகாத்து குருவே சிவன் எனக் கருதினால் அவன் நற்சீடன் என்று போற்றப்படுவன்.)*

அன்றியும்,

தேசிகன்பால் பற்பல தீக்குணங்கள்செறியினும்நம்
பாசப் பிராந்திக்குஇவை தோற்றியஇறை பால்இலைஎன்(று)
ஆசறுபத்தியின் ஓர்ந்து எவ்விதத்தும் அவன்அருளைத்
தேசம்குலவ வளர்ப்போன் சற்சீடன் தெரிந்திடினே

*(ஒரு குருவினிடத்திலே பலவகையான தீய குணங்கள் இருந்தாலும் அது நம்முடைய பாசமயக்கத்தால் தோன்றுவது என்று கருதி குருவை இகழாது அவனையே பற்றியிருப்பவன் நற்சீடன் ஆவான்.)*

அன்றியும்,

பூரணமாய் சிவன்எம் பிறவியைப் போக்குதற்கு இத்
தாரணிமேல் குருவாய் வந்திடில் அவன் தன்எதிர்யாம்
ஓர்அணு என்ன பொய்தானும் என்னாகும் என்று உண்மைகளைக்
காரணனோடு உரைப்பானே சற்சீடன் கருதிடிலே

*(சிவபெருமானே நம் பிறவியைப் போக்குவதற்கு இம்மண்மேல் குருவாக வந்துள்ளான் என்று மெய்யாகக் கருதி உரைப்பவனே நற்சீடன் ஆவான்)*

விடையேறி ஈசன்வரின் மூடரும்அவன் வேண்டியதைப்
படிமீதுஅளிப்பர் குருவே சிவம்எனப் பாவனைமுற்(று)
உடையார்கள் தத்தம்உடல் ஆவிஈந்துஇறை உண்மைபெறத்
தடையாது உள(து) இங்குஉளதேல் அபக்குவர் தாம் அவரே

*(விடையேறி சிவபெருமான் இவ்வுலகில் வந்தால் மூடரும் அவன் வேண்டியதை அளிப்பர்; அதுபோல சிவனே குருவாக வந்துள்ளான் என்று கருதி தம் உடல் பொருள் ஆவி அனைத்தையும் அவனுக்கு ஈந்து மெய்ஞானத்தைப் பெறுபவனே பக்குவமுடைய மாணவன் ஆவான்.)*

என்றும், **ஞானவாசிட்டம்**

இயற்கைகுணம் சோதித்து முன்னே பின்னே
யாவையுமாம் பிரமநீ என்னல் வேண்டும்
வியப்புற ஆசையின் உழல்வார்க்கு, இவ்வாறு
ஓதின் மீளாத தீநரகில் வீழ்த்ததாகும்
தியக்குறு போகத்து ஆசை தீர்ந்து புந்தி
தெளிந்தஉனைப் போல்வார்க்கே திகழத் தோன்றும்
மயக்கம்அற உணர்த்தவல்ல குருவைக் கிட்டா
வருந்தியும்தன் பிறப்பு அறுக்கும் மகனும் ஆங்கே

*(குரு, மாணவனுடைய இயற்கை குணத்தை ஆராய்ந்த பின்னரே யாவையுமாம் பிரமம் என்னும் அத்துவித உண்மையை உபதேசிக்க வேண்டும்; ஆசையில் உழல்வார்க்கு இவ்வுண்மையை உபதேசிக்கக்கூடாது. நுகர்வுகளில் உள்ள பற்றுக்களில் இருந்து நீங்கி அறிவு தெளிந்தவர்களுக்கு இவ்வுண்மை விளங்கும்.)*

அன்றியும்,

சகப்பேர் பெரும்இவ் வாதனைதான்
தவிரில் அழியாச் சாந்தியதாம்
அகப்பா வனையில் இச்சகத்தில்
அலகைத் தேராம் நீர்தன்னில்
உகப்பா மறுதி உள்ளோர்கள்
உபதே சிக்க ஒண்ணாதோர்
மிகப்பா விகளாம் சீசீஎன்று
இகழ்வார் அவரை மெய்உணர்ந்தோர்

*(உலகமாகிய பெயரைப் பெற்றிருக்கின்ற இவ்வாதனை போகுமாயின் நிலையான சாந்தியாகும். அகப்பாவனையிலும், இவ்வுலகத்திலும், கானல் நீர் என்று கருதுபவர்கள் உபதேசம் பெற தகுதியற்றவர்கள்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

அதிதீவிர பக்குவம் உடையோர்க்கு உடனே [1]அனுக்கிரகம் பண்ணுதல் உண்டென்பதற்குப் பிரமாணம்; **திருவாதவூரடிகள் புராணம்,**

வந்துநான் வறுமை உற்றேன் மாற்றுஎனது
இலம்பாடு என்று
சிந்தை ஆகுலமுற்றான் கைச்செழும்பொருள்
ஈதல் செய்வார்
இந்தநாள் அளிக்க வேண்டும் எனவிதி
இன்மை யானே
அந்தநாள் இந்நாளாக அடிமைகொண்டு
அருள எண்ணி

*(வறுமைத்துன்பத்தினாலே அல்லல்படும் எனக்கு உதவவேண்டும் என்று கேட்பவருக்கு வேண்டிய பொருள் கொடுத்து உதவுதற்குக் கால நேரம் கருதவேண்டியதில்லை. அதுபோல அதிதீவிர பக்குவம் உடையோர்க்கு குரு காலம் கருதாமல் உபதேசிக்கலாம்)*

என்றும், **ஒழிவிலொடுக்கம்,**

அதிபக்கு வந்தோர்க்கு அனுக்கிரகம் செய்யும்
புதுமைக்குச் சாத்திரங்கள் போதா - இதுஎன்னாப்
பேறே அனந்த பிரகாரம் வந்தாலும்
வேறே அனந்த விதம்

*(மிகுபக்குவம் உடையோர்க்கு குரு எப்படி வேண்டும் என்றாலும் அருள் புரியலாம். அதற்கு சாத்திரங்களின் விதிகளைத் தேட வேண்டாம்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க. சிவமே குருவாய் வந்ததென்பதற்குப் பிரமாணம்: **திருவாசகம்,**

அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபரனாகி அருளிய பெருமையைச்
சிறுமை என்று இகழாதே

1 - அருள்

*(சிவபெருமானே குருவாக இம் மண்ணுலகில் எழுந்தருள்கின்ற சிறப்பை உணரவேண்டும்)*

என்றும்,

சிவன்எனை யானும் தேறினன் காண்க
அவன்எனை ஆட்கொண்டு அருளினன் காண்க.

*(குருவை சிவமாகவே கருத வேண்டும். அப்போதுதான் குருவடிவில் ஆட்கொள்வான்)*

என்றும், **திருவாய்மொழி,**

துயரில் சுடரொளி தன்னுடைச் சோதி
நின்றவண்ணம் நிற்கவே
துயரில் மலியும் மனிதர் பிறவியில்
தோன்றிக் கண்காண வந்து
துயரங்கள் செய்து தன் தெய்வநிலை
உலகில் புகஉய்க்கும் அம்மான்
துயரம்இல்சீர்க் கண்ணன் மாயன் புகழ்
துற்ற யானோர் துன்பம்இலனே

*(இறைவன் விண்ணுலகில் ஒளிமயமான தூய வடிவத்தில் இருந்து கொண்டே துன்பம் மிகுதியான மனிதப் பிறவியிலும் வந்து அருள் செய்கின்றான். அத்தகைய இறைவனுடை தூய குணங்களில் ஈடுபட்டால் துன்பம் இல்லாதவர்களாக விளங்கலாம்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

குருவாக்கியமும், சுருதியும், சுவானுபவமும் ஒத்திருக்க வேண்டும் என்று மேல் கூறுகின்றார்.

ஆன்றவா சான்சொன்மெய்ந் நூறன் னனுபவ
மூன்றுமொத் தாந்துணி வுந்தீபற
முத்தி நெறியதென் றுந்தீபற 22

*ஆன்ற ஆசான் சொல்மெய்ந் நூல்தன் அனுபவம்*
*மூன்றும் ஒத்தால் துணிவு உந்தீபற*
*முத்திநெறிய(து) என்று உந்தீபற*

என்பது, அமைவு பெற்ற ஞானாசாரியர் வாக்கியமும்,

உண்மை நூலாகிய சுருதியும், விசாரிக்கும் தன்னுடைய [1]சுவானுபவமும் ஆகிய இம் மூன்றும் ஒன்றுக்கு ஒன்று மாறுபடாமல் ஒரு தன்மை ஆகிய அவ்விடத்து உண்டாகிய நிச்சயமே வீட்டு நெறி என்றவாறு.

இதற்குப் பிரமாணம்: **ஞானவாசிட்டம்:**

ஆசான் மொழியால் நூல்பொருளால்
அன்றிப் பெறவும் அரிதாகும்
தேசார் குருநூல் மாணாக்கன் சிறந்த
இம் மூவரும் கூடில்
பாசஅதீதப் பரம் எய்தும் பன்னாள் நீங்கா
இக்கூட்டம்
ஏசா உணர்வைத் தரும் பகல்போது
எல்லாத் தொழிலும் தருவது போல்.

*(பகல்வேளை எல்லாப் பொருள்களையும் விளக்குவது போல் மூதுணர்வோர் சொல்லும், நூல் பொருளும் தன்னுணர்வும் வீட்டு நெறியை விளக்கும்)*

என்றும், **ஞான சூரியன்,**

ஒன்றோடு ஒன்று ஒவ்வா அறிவுகள்
துணிந்தும் பொருள்தனில் இயல்பு வேறாகா
ஒன்ற அப் பொருளின் இயல்பினால்
அறியும் அறிவு அன்றோ உண்மையாம் அறிவஃது
இன்றி அப்பொருளை உளதுஎனும் உளதை
இலதுஎனும் உணர்வினை ஒழித்து
முன்திகழ் குருவோடு அளவை தன் தேர்ச்சி
மூன்றினால் அறிவது மார்க்கம்.

*(குரு ஆதி மூன்றினால் அறியும் அறிவே உண்மை அறிவாகும்)*

என்றும் வரும்.

குருவாக்கியம் போல் ஒருபடித்து அன்றிச் சுருதி நானா வழி கற்பித்தலால் எங்ஙனம் ஒக்கும் என்பதற்கு மேல் உத்தரம் கூறுகின்றார்.

---

*1 - தன்னுணர்வு*

வேதம்பல் பக்குவ மோர்ந்தொரு வீட்டினுக்
கோதும்பல் லாற்றானு முந்தீபற
உண்மைகண் டார்க்கேக முந்தீபற. 23

*வேதம்பல் பக்குவம் ஓர்ந்து ஒரு வீட்டினுக்கு*
*ஓதும் பல் ஆற்றானும் உந்தீபற*
*உண்மை கண்டார்க்கு ஏகம் உந்தீபற.*

என்பது ஒப்பற்ற வீட்டிற்கு மார்க்கம் ஒரு விதம் அன்றிப் பலவிதமாக வேதம் கூறா நிற்பதும் ஆன்மாக்களது கன்மத்து அளவில் உண்டாகிய பருவபேதத்தை ஞான மயனாகிய பகவான் அறிந்து அம்மார்க்கங்களினது கரும காண்டங்களை அங்ஙனம் கூறி ஞான காண்டங்களில் எல்லாம் தற்போத நீக்கமே கூறுதலின் உள்ளபடி தேர்வார்க்கு [1]மார்க்காந்திரங்கள் எல்லாம் அபேதம் ஆதலில் சுருதி நெறி ஒன்றே என்றவாறு.

இதற்குப் பிரமாணம்: **திருமந்திரம்,**

ஒன்றதே பேரூர் வழிஆறு அதற்கு உள
என்றதே போலும் இருமுச் சமயங்கள்
நன்றுஇது தீதுஇது என்று உரை மாந்தர்கள்
குன்று குறைத்தெழு நாயை ஒத்தாரே.

*(வழிகள் பல, சேறும் இடம் ஒன்று,அது போல சமயங்கள் ஆறாக இருந்தாலும் சேரும் இடம் சிவமே)*

அன்றியும்,

ஒத்த சமயங்கள் ஓராறு வைத்திடும்
அத்தன் ஒருவனாம் என்பது அறிந்திலர்
அத்தன் ஒருவனாம் என்பது அறிந்திடின்
முத்தி விளைக்கும் முதல்வனும் ஆமே.

*(ஆறுவகைச் சமயங்களும் தொழும் தெய்வம் ஒன்றே ஆகும். அம்முதல்வனே முத்தியினை அளிப்பன்)*

அன்றியும்,

முதல் ஒன்றாம் யானை முதுகுடன் வாலும்
திதமுறு கொம்பு செவி துதிக்கை கால்

*1 - நெறியின் முடிந்த கொள்கை*

மதியுடன் அந்தகர் வகைவகை பார்த்தே
அதுகூறல் ஒக்கும் ஆறு சமயமே.

*(அறுவகைச் சமயமும் வேறு வேறு என்பார் யானை பார்த்த குருடரை ஒப்பர்)*

என்றும், **திருவாசகம்:**

சமயவாதிகள் தத்தம் மதங்களே
அமைவதாக அரற்றி மலைந்தனர்.

*(சமயவாதிகள் அவரவர் சமயக் கொள்கையே பெரிதென்று கூறுகின்றனர்)*

அன்றியும்,

இரு முச்சமயத்து ஒரு பேய்த் தேரினை
நீர்நசை தரவரும் நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப் பெருந் தாபம் நீங்காது அசைந்தன

*(உண்மையை அறியாது கானல் நீரை உண்ணும் மான் போன்றவர் சமயத்தின் உட்பொருளை அறியாத சமயவாதிகள்)*

என்றும், **அஞ்ஞவதைப் பரணி,**

தலைபலவாய்ப் பெயர்பலவாம் நதிகள் எல்லாம்
சாகரத்தில் ஒரு நீராம்தன்மை போலப்
பலபலவாய்ச் சொல்லும் நெறி எல்லாம் சொல்லப்
பட்டது ஒரு பொருளினையாம் பணிதல் செய்வாம்.

*(நதிகளின் பெயர் பலவானாலும் சேரும் இடத்தில் கடல் என்ற ஒரு பெயராகும். அதுபோல சமயநெறிகள் கூறும் எல்லாப் பொருளுக்கும் இறைவனே அடிப்படை)*

அன்றியும்,

அழியாத வீடுஎன்னும் பழையவூர் கண்டு
  அறியாதார்அது காணவேண்டி ஆறு
வழியாகும் சமயங்கள் கொண்டு தம்மில்
  வழக்குப் பேசும் சழக்கு மாழ்க அன்றே.

*(தத்தம் சமயக் கொள்கையே பெரிதென்றுபேசும் வழக்கு நீங்க வேண்டும்)*

என்றும், **பட்டணத்துப் பிள்ளையார்:**

அன்று என்றும் ஆம் என்றும் ஆறு சமயங்கள்
ஒன்றோடு ஒன்று ஒவ்வாது உரைத்தாலும் என்றும்
ஒருதனையே நோக்குவார் உள்ளத்து இருக்கும்
மருதனையே நோக்கி வரும்.

*(அறுவகைச் சமயங்களும் ஒன்றுக்கொன்று மாறுபட்டு உரைத்தாலும் அதன் உட்பொருள் ஒன்றே)*

என்றும், **அமுதசாரம்,**

உரைத்தது உரையாது உரைக்கும் சமயம்
பரத்தை அறிவுற்ற பான்மை-மரத்தின்
அவயவத்தில் ஓர் ஒன்று அறிந்தார் மரமா
அவயவத்தை கொண்டவாறு ஆம்.

*(பரத்தை அறிவது எளியதன்று. ஆனால் அறுவகைச் சமயம் மரத்தின் ஒருபகுதியை கண்டு மரத்தையே அறிந்தது போல சமய உண்மையைக் கூறுகிறது)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

கற்பனையாகிய சாதி சமயங்களைப் போலும், அழிவுஅற்றதாய் இருந்துள்ள ஞான மார்க்கமே ஞானிகள் செல்லும் வழி என்று மேல் கூறுகின்றார்.

சாதி சமயங்க டம்மின்மா ளாதமெய்ப்
போதமா மோர்சுரத் துந்தீபற
போயினார் மீளாரென் றுந்தீபற. 24

*சாதி சமயங்கள் தம்மின் மாளாத மெய்ப்*
*போதமாம் ஓர்சுரத்(து) உந்தீபற*
*போயினார் மீளார் என்(று) உந்தீபற.*

என்பது, அவரவர் கரும பக்குவத்திற்கு ஏதுவாகச்

[1]சர்வஞ்ஞனாலே கற்பிக்கப் பட்டிருந்துள்ள சாதி மார்க்கமும் அதற்கு உத்தரமாகிய சமய மார்க்கமும் போல் முடிவது அன்றி [2]எதார்த்தமாய் இருந்துள்ள ஞான வழியை அடைந்தோரே பிறப்பின்கண் மீளாதவர் என்றவாறு.

சாதி சமயங்கள் கற்பனையாய் அழியுமோ என்பாரைப் பற்றி மேல்கூறுகின்றார்.

வருண நெறிசார் மதத்தம் மதமெய்ப்
பொருளுணர் வூடிறு முந்தீபற
பொன்றாத தொன்றேயென் றுந்தீபற. 25

*வருண நெறிசார் மதத்துஅம் மதமெய்ப்*
*பொருள் உணர்வூடு இறும் உந்தீபற*
*பொன்றாது ஒன்றே என்று உந்தீபற.*

என்பது, ஒருவன் [3]குலாசார சங்கற்பம் அவனால் [4]அனுசரிக்கப்படுவதாகிய ஒரு சமய முதிர்ச்சியின் கண்ணே கெடும். [5]அச்சமயாசார சங்கற்பம் அவனது பக்குவத்தின் கண்ணே தோன்றிய மெய் உணர்வினாலே கெடும். அந்த மெய்உணர்வு ஒன்றினாலே முத்தி சித்தித்தலால் அதுவே [6]நித்திய மார்க்கம் என்றவாறு.

சாதி சங்கற்பம் சமய முதிர்ச்சியால் கெடும் என்பதற்குப் பிரமாணம்: **தேவாரம்,**

எவரேனும் தாமாக இலாடத்திட்ட திருநீறும்
சாதனமும் கண்டால் உள்கி
உவராதே அவர்அவரைக் கண்டபோது உகந்து
அடிமைத் திறம்நினைந்து இங்குவந்து நோக்கி
இவர் தேவர் அவர்தேவர் என்று சொல்லி
இரண்டு ஆட்டாது ஒழிந்துஈசன் திறமே பேணிக்
கவராதே தொழும் அடியார் நெஞ்சின் உள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே.

*(நெற்றியில் திருநீறும், உருத்திராக்கமும் அணிந்து சிவனே முழுமுதல் என்று உணர்ந்து தொழும் அடியார் நெஞ்சினுள் இறைவன் உறைவான்)*

*1 - முற்றறிவு உடையான், 2 - உண்மையாய், 3 - குல ஒழுக்க உறுதி, 4 - கடைப்பிடி, 5 - சமய ஒழுக்க உறுதி, 6 - நிலையான வழி*

என்றும், **பிரமோத்தர காண்டம்:**

எள்ளல் படுகீழ் மக்கள் என்னும் இழிந்த
குலத்தோர் ஆனாலும்
வள்ளல் பரமன் திருநீறும் மணியும்
அணிந்த மாண்பினரை
உள்ளத்துள்ளே இருபோதும் உணர்ந்து
தெருண்டு சிவன் எனவே
கொள்ளத்தகைய அறிவினரே பிறவிக்
கடலில் குளியாதார்.

*(வள்ளல் சிவபெருமானை வணங்கித் திருநீறும் உருத்திராக்கமும் அணியும் எவரும் இழிகுலத்தவர் அல்லர். அத்தகைய பக்குவம் பெற்றோர்க்கு பிறவி இல்லை)*

என்றும், **திருவாய்மொழி:**

குலந்தாங்கு சாதிகள் நாலிலும் கீழ்இழிந்து எத்தனை
நலம்தான் இலாத சண்டாள சண்டாளர்கள் ஆகிலும்
வலம்தாங்கு சக்கரத்து அண்ணல் மணிவண்ணற்கு ஆள் என்று உள்
கலந்தார் அடியார்தம் அடியார்எம் அடிகளே.

*(பிறப்பில் இழிகுலம் ஆயினும் திருமாலை வழிபடும் அடியவர்கள் உயர்ந்தவர்களே)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

சாதி சமயம் என்னும் இருவகை சங்கற்பமும் மெய் உணர்வில் கெடும் என்பதற்குப் பிரமாணம்: **அமுதசாரம்:**

எந்தக் குலமாய் என் எந்தக் கவியாய்என்
எந்தச் சமயத்தவராய் என்-சிந்தைத்
துறவிதரும் சொல்லே தூய்தாவது அல்லால்
பிறவி தரும் சொல்லே பிற.

*(எந்தக் குலத்தவர்க்கும், எந்தச் சமயத்தவர்க்கும் துறவோர் காட்டும் நெறியே தூயது. அதுவே சாதி சமயத்தை கடந்தது. முத்தி தருவது)*

என்றும், **அனுபூதிநிலயம்,**

அறுவகைச் சமயத்து அறையும் எப்பொருளும்
அறுபத்து நாலு நற் கலையும்

மறுவறப் பயின்று மாசறத் திகழும்
மதிஞராம் அவர்களே எனினும்
குறைவறத் தன்னைக் கொடுத்திடும் குரவன்
குரைகழல் புனைந்தவர் அன்றேல்
பறையர் மற்றவரே பறையரே எனினும்
அருள் உடையவர் பரம் பரரே.

*(கலைகள் அனைத்தும் பயின்றவரும், அறுவகைச் சமயத்தின் பொருள் அனைத்தும் கற்றோரும் குருபரனான இறைவன் தாள் சேர்ந்தால் உயர்ந்தோர், இல்லை எனில் தாழ்ந்தோர்)*

என்றும், **தத்துவசரிதை,**

செந்துகில் புனைவார் சீவரம் தரிப்பார்
திரிதண்டோடு ஒருதண்டு பிடிப்பார்
தந்த முத்திரைகள் பலபல தரிப்பார்
தவம்எனத் தம் உடம்பு ஒறுப்பார்
முந்துகாய் கிழங்கோடு இலை அயின்றிடுவார்
மோனம் என்பார் கதறிடுவார்
இந்த ஆகுலத்தால் ஈசன் மேவிடுமோ
இவர்துயர் உறுவது ஏன் அந்தோ.

*(செவ்வாடை, கடுக்காய் தோய்ந்த ஆடை உடுத்துவோர், திரிதண்டம், ஒரு தண்டம் பிடிப்போர், நிட்டை செய்வோர், காய்கனி உண்போர் என மேற்கொள்ளும் குலநெறி பலவாக இருந்தாலும், பக்குவம் இல்லை எனில் ஈசன் திருவடி கிட்டாது)*

என்றும், **போதரத்னாகரம்:**

சடையினைப் பரித்தும் தலையினைப் பறித்தும்
சீவரம் தாது நற் கலிங்கம்
உடையெனப் புனைந்தும் உடைகளைத் தவிர்ந்தும்
ஊண்உறக்கங் களைத் துறந்தும்
படியும்நற் சருகும் வாயுவும் அயின்றும்
பாரொடு கல்லிடைத் துயின்றும்
இடையதற்று உழலும் இவை அருள் சொரூபன்
மெய் அருள் பெறாதவர்க்கு இயல்பே.

*(மேற்கொள்ளும் சடங்குகளால் பயன் இல்லை. மெய்யுணர்ந்து வழிபடலே மெய்யருள் தரும்)*

என்றும், **உண்மைநிலயம்:**

குலநலம் உடையோர் எவர்அவர் உயர்ந்தோர்
குவலயத்தவர்க்கு அது இன்று ஏனும்
நலம் உளோர் சமயர்க்கு அவரவர் மேலாம்
நவில்நெறி வழார் எவர்அவரே
உலகில் எக்குலம் எச்சமயம் ஆயினும்
என்ஒரு தமது உண்மையை உணர்ந்திட்டு
இலகு தத்துவ ஞானிகள் எவர்அவரே
எனப்படும் அமர்கள் ஞானிகட்கே.

*(உலகில் எக்குலம், எச் சமயக் கொள்கையராக இருந்தாலும், உண்மையை அறிபவர் மெய்யுணர்ந்தவர்கள். மேலும் சமய நலம் உடையவரே உயர்குலத்தவர் ஆவார்.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

முற்கூறிய இருவகைச் சங்கற்பமும் எம்முடைய மார்க்கத்தால் வாதிக்கப்படுதலின் இதுவே ஞானமார்க்கம் என்னும் சமயிகளைப் பற்றி மேல் கூறுகின்றார்.

ஒன்றோடொன் றொவ்வா மதங்களொன் றொன்றினாற்
பொன்றுவ தில்லையே லுந்தீபற
பொய்யென்ப தெத்தைநா முந்தீபற. 26

*ஒன்றோடு ஒன்று ஒவ்வா மதங்கள்ஒன்று ஒன்றினால்*
*பொன்றுவது இல்லையேல் உந்தீபற*
*பொய்என்பது எத்தை நாம் உந்தீபற.*

என்பது, ஒன்றுக்கு ஒன்று மாறுபடுதலை உடைய சமயங்கள் எல்லாம் ஒன்றின் ஒன்று கெடுதல் இல்லையாயின் அவற்றுள் யாது சத்திய நெறி என்றும் மற்றியாது அசத்திய நெறிஎன்றும் நம்மாலே கூறப்படும் என்றவாறு.

எம்முடைய சமய [1]புராதனரால் அம்மார்க்கங்கள் முன் செயிக்கப்பட்டு உள என்பாரைப் பற்றி மேல் கூறுகின்றார்.

தோல்வியும் வெற்றியுஞ் சொன்மதங் கட்கெலாங்
காலபே தத்தினுண் டுந்தீபற.
கருத்தன் செயலதென் றுந்தீபற. 27

*1 - பழஅடியார்*

*தோல்வியும் வெற்றியும் சொல் மதங்கட்கு எலாம்*
*கால பேதத்தின் உண்டு உந்தீபற.*
*கருத்தன் செயல் அது என்று உந்தீபற.*

என்பது, இக்காலத்தில் இதனால் அது தோல்வி அடைந்தது என்றும், அக்காலத்தில் அதனால் இது தோல்வி அடைந்தது என்றும் சமயங்கள் ஆறும் கால பேதங்களின் ஒன்றுக்கு ஒன்று வெற்றி தோல்வி அடைதல் உண்டாதலின் அவற்றினை நிறுவிய ஒரு பரனது இச்சையால் தெய்வத் தன்மை கொண்டு எக்காலத்தில் எதை உயர்த்தி எதைத் தாழ்த்தல் வேண்டுமோ, அதை அங்ஙனம் செய்குவது ஒழிந்து மற்றோர் காலத்தின் உள்ளே ஒரு மதத்தை ஒருவராலும் வாக்கு வாதத்தினாலே [2]செயிக்குதல் கூடாது என்றவாறு.

இதற்குப் பிரமாணம்: **உண்மை நிலயம்,**

இறைவிதன் முலைப்பால் அயின்ற சீகாழிக்கு
இறைவனும் இறைவனைப் பரிமேல்
நறைமலர்ப் பொழில் சூழ் மதுரை அம் பதியில்
நடத்திய ஒரு பெருந்தவனும்
புறநிலைச் சமணம் ஆதியைச் செயித்தார்
பொருந்து தெய்விகத்து எனில்எவரோ
மறை சொல்சடு சமயத்து ஒன்று கொண்டு ஒன்றே
வாக்கு வாதத்தில் வெல்பவரே.

*(மூவர் முதலிகள் தாம் செய்த அற்புதங்களுக்கு சிவன் அருளே காரணம் என்பர். ஆனால் வாக்குவாதம் செய்வோர் தனது கருத்தே பெரிதென்பர்)*

என வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

ஒரு மதம் கொண்டு ஒரு மதத்தை வாக்கு வாதத்தினாலும் வென்றது உண்டு என்பாரைப் பற்றி மேல் கூறுகின்றார்.

வாதிக டங்களுக் கல்லான் மதங்களுக்
கோதார் வலியின்மை யுந்தீபற
ஓதி யுணர்ந்தோரென் றுந்தீபற. 28

*வாதிகள் தங்களுக்கு அல்லால் மதங்களுக்கு*
*ஓதார் வலியின்மை உந்தீபற*
*ஓதி உணர்ந்தோர் என்(று) உந்தீபற.*

என்பது முன்னைநாள் அச்சமயி இச் சமயியை வாதில் வென்று [1]மனோரதம் அடைந்தான் ஆயின் பின்னை நாள் இச்சமயத்திலே பின்னும் ஒருவன் அவனை மனோதுக்கம் அடையும்படி வாதித்து வெல்லுதலின் அவன் அவன் கற்ற கல்வி வலியினாலும், யுத்தி, புத்தி வலியினாலும் வெற்றி, தோல்வி அடைந்தார் ஆதலின் [2]வாததுர்ப்பலம் ஒழிந்து [3]மத துர்ப்பலம் இல்லை என்று கூறுவால் எல்லாக் கலைகளும் ஓதி உணர்ந்த பெரியோர் என்றவாறு.

மத துர்ப்பலம் இல்லை என்பதற்கு மேல் பொருந்து மாற்றானும் கூறுகின்றார்.

ஆறுளு மோரா றவாதித மென்கைதீ
தாறும் விளங்கலா னுந்தீபற
அளவி லளவைகொ டுந்தீபற. 29

*ஆறுளு (ம்) ஓர்ஆறு அவாதிதம் என்கைதீது*
*ஆறும் விளங்கலான் உந்தீபற*
*அளவில் அளவை கொ(டு) உந்தீபற.*

என்பது ஆறுவகைச் சமயங்களில் இச்சமயமே [4]அவாதிதார்த்தம் மற்றைய அனைத்தும் இதனால் வாதிக்கப்படும் என்று கூறுதலே கூடாது; கூறுமாயின், அனைத்தையும் வாதிதம் செய்த சமயமே பரமாய் விளங்கல் வேண்டும்; அது இன்றி எண்ணிறந்த ஏது [5]திட்டாந்தங்களோடும் கூடி ஆறும் தனித் தனியே விளங்கலின், யாது அவாதிதமும் யாது வாதிதமும், என்றவாறு.

அளவில் அளவைகள் என்றது அவரவர் கோட்பாட்டினது அளவினுக்கு ஏற்ற அளவைகள் என்றுமாம்.

சகலமுந் தேரினுந் தத்த மதநெஞ்
சகலா துரத்தலி னுந்தீபற
அபல மியாதென்ப துந்தீபற 30

*சகலமும் தேரினும் தத்தம் மதம்நெஞ்சு*
*அகலாது உரத்தலின் உந்தீபற*
*அபலம் யாது என்பது உந்தீபற*

---

1 - இன்பம், 2 - வாத வலியின்மை, 3 - மத வலியின்மை, 4 - மறுக்க முடியாப் பொருள்,
5 - சான்றுகள்

என்பது எச்சமயத்தின்கண் நின்றுள யாவரும் வேதாகமம் ஆதிய நூல்களும் மற்றைச் சமய நூல்களும் கசடறக் கற்றுணர்ந்தோரே ஆயினும் இதுவே ஞான சமயம் என்று ஒரு சமயத்தையே அடையாது தத்தம் சமயமே ஞான சமயம் என்று [1]தாபித்தற்கு ஏது திட்டாந்தங்கள் மிகவும் மனத்தின் கண் வலிதலின் வலியின்மைச் சமயம் யாது? என்றவாறு.

எல்லாச் சமயத்தையும் மெய்ஞ்ஞானிகளாயினோர் விட்டு நீங்குவார் என்று மேற்கூறுகின்றார்.

எல்லாச் சமயத் தியல்பு மறிந்தவர்
நில்லா ரவற்றூடென் றுந்தீபற
நீங்கிற் பழியாதென் றுந்தீபற 31

*எல்லாச் சமயத்து இயல்பும் அறிந்தவர்*
*நில்லார் அவற்றூடு என்று உந்தீபற*
*நீங்கில் பழியாது என்று உந்தீபற*

என்பது சகல சமயத்தின் உண்மையும் உள்ளபடி அறிந்து அவற்றின் முடிவுகண்ட ஞானிகள் [2]எச்சமயாபிமானமும் பற்றி நிற்பதே இல்லை; நீங்கிவிடுவார். அங்ஙனம் நீங்கியது கொண்டு அவர் அடையும் தாழ்வு யாது என்றவாறு

ஞானிகள் சமயாசாரங்களை நீங்குவார் ஆதலின் அவர்க்கு அதனால் வரும் தாழ்வு ஒன்றும் இல்லை என்று மேல்வரும் செய்யுள் இரண்டாலும் வலியுறுத்திக் கூறுகின்றார்.

உயர்ந்த நெறியீதென் றொன்றைவிட் டொன்றை
யிவைந்திடு வோனுமுண் டுந்தீபற
ஏத மடையானென் றுந்தீபற 32

*உயர்ந்த நெறி ஈது என்று ஒன்றைவிட்டு ஒன்றை*
*இயைந்திடு வோனும் உண்டு உந்தீபற*
*ஏதம் அடையான் என்று உந்தீபற*

என்பது தன் சமயத்தின்கண் இழிவும் பிறிதொரு சமயத்தின் கண் உயர்வும் கன்ம பாகத்தின் அளவின் ஒருவனுக்குத் தோன்றுகையால், தான் முன்பு நின்ற நெறியை நீங்கி உயர்வு

*1 - நிலை நிறுத்துதற்கு, 2 - சமயப் பற்று*

தோன்றிய நெறியை அடையா நிற்பன். அதனால் அவனுக்குப் பின்பு அடைந்துள மதத்தில் உண்டாகிய நன்மை அடைகுவது ஒழிந்து முன்பு நின்றுள மதத்திற்கூறிய பதிதத்தன்மை அடையான். மேற் [1]சங்கை, யாவன் ஒருவன் யாதொரு மதத்தின் கண் நின்றானாயினும் அதனை நீங்கி எம்முடைய மதத்தின் கண் வந்தான் ஆயின் அவனே [2]பரமுத்தன் என்றும், எம்முடைய மதத்தின் நின்றவன் மற்றொரு சமயியுடன் நட்புற்றுக் கூடியிருந்தானே ஆயினும் அவனே [3]பதிதன் அவனே [4]அதிபாதகன் என்றும், பகவானது வாக்கியமாகிய வேதங்களும், வியாசரால் கூறப்பட்டுள்ள புராணங்களும் எம்முடைய மதத்தின் கண் புராதனரது வாக்கியமும் உண்டு என்பாரும் உளர். அஃதெத்தால் எனில்?

மேலுத்தரம் : மற்றொரு சமயத்திற்கும் ஒருவன் வந்து கூடினும், நீங்கினும் அங்ஙனம் [5]முத்தத்துவமும் [6]பதிதத்துவமும் உண்டு என்று வேத புராண வாக்கியங்களும் அச்சமய புராதன வாக்கியமும் இருத்தலின் அது கூடாது; ஆயின் அச்சமயங்கட்குக் கூறிய வாக்கியங்கள் [7]அயதார்த்தமோ என்னில்? அயதார்த்தமும் அன்று. யதார்த்தமே என்றால், அவ்வாக்கியங்களுக்குத் [8]தாற்பரியம் ஏதெனில் ஒரு சமயத்தின் கண் நின்றோன் அச்சமயமே உயர்ச்சி என்றும் மற்றையவை தாழ்வு என்றும் மனதில் [9]நிச்சயார்த்தம் பிறந்திருக்கவும் புகழ் பொருளாகிய முன்னிலையினால் மற்றொரு சமயத்தை அடைந்தானே முன்பு நின்ற சமயத்தில் கூறிய பதிதத்தன்மை அடைந்து ஆயின் அச்சமயத்தில் கூறிய முத்தியை அடையாது நரகில் தாழ்குவன். இஃதன்றி முன்பு நின்றுள சமயம் தாழ்வு என்றும், பின்பு செல்லவேண்டிய சமயம் உயர்வு என்றும் நிச்சயார்த்தம் பிறந்து சென்றானே ஆயின் அச்சமயத்தில் கூறிய நன்கு அடைகுவதன்றி முன்பு நின்றுள சமயத்தில் கூறிய பதித்தன்மை அடையான். இங்ஙனம் ஆதலின் உயர்ந்த நெறி ஈது என்னும் துணிவுடைமையால் பின்பு ஒரு நெறியை அடைந்து ஒரு தாழ்வு அடைகுதல் இலன் என்றவாறு.)

1 - ஐயம், 2 - வீடுபேறுஅடைந்தவன், 3 - சமய ஒழுக்கம் தவறியவன்,
4 - பெருங்குற்றவாளி, 5 - முத்தத்தன்மை, 6 - ஒழுக்கம் தவறுதல், 7 - உண்மையின்மை,
8 -பொருள், 9 - உறுதி

ஆதலான் மேலா நெறியடைந் தோர்க்கொரு
சாதி சமயமே துந்தீபற
சங்கற்ப நாசரென் றுந்தீபற 33

*ஆதலால் மேலாம் நெறி அடைந்தோர்க்கு ஒரு*
*சாதி சமயம் ஏது உந்தீபற*
*சங்கற்ப நாசர் என்று உந்தீபற*

என்பது ஒரு சமயத்தை விட்டு ஒரு சமயத்தை அடைந்தோனுக்கும் துணிவுடைமையான் இங்ஙனம் ஆதலின் எல்லாச் சமயத்தின் உண்மைகளும் அறிந்து அவற்றினுக்கு எல்லாம் மேலாகிய ஒரு சன் மார்க்கத்தை அடைந்துள்ளவர் ஆதலின் ஞானிகளாயினோர்க்கு உலகாசார, குலாசார, சமயாசாரங்களும் இல்லை. அன்னோர் சர்வசங்கற்பமும் ஒருங்கே இறந்துடையார் ஆதலின் என்றவாறு.

இச் செய்யுள் இரண்டிற்கும் பிரமாணம்: **திருப்பனுவல்**

உலகுயரிய என்று ஓது இரு மூன்றுள்
ஐந்தையும் நீங்கி இந்த நன் நெறியூ(டு)
உற்றோர் பவமற்றோர் இஃது ஒரீஇப்
பிறிதொரு நெறிசார் பேதை என்ஞான்றும்
உய்குவது இல்லை எனச் சைவம் ஆதி
அறுவித சமயத் தவரும் தனித்தனி
சுருதி புராணம் தொல்லோர் நல்லுரை
காட்டிப் புவிப்பால் நாட்டிய அதனால்
நின்ற ஓர் நிலை நீத்து ஒன்றை ஈண்டு அடைந்தோன்
தன்நெஞ்சிடையே தான்முதல் நின்ற
அந்நிலை பெரிது என்று அறிந்தும் அஞ்சாது
குறுகின் மண் ஆதி குறித்து ஒரு நெறியை
அடைகுவன் நிரயத்திடை அஃது அன்றிச்
சென்னெறி பெரிது எனத் தேர்ந்து கொடு ஏகின்
அந்நெறிக்குள பேறு அவனும் எய்துதலான்
மூவிரு சமய முடிவையும் உணர்ந்திட்டு
ஏறிய ஞானி [1]சிலுகுவை எனக் கொண்டு
அச்சமயச் சார்பு அனைத்தையும்
இச்சகத்திடை நீத்திடில் எவன் பழியே

*1 - தடை*

(உலகம் உயரியது என்று ஓதிய ஆறனுள் ஐந்தை நீக்கி இந்த நன்னெறி ஒன்றைக் கொண்டோர் பிறப்பு அற்றோர். அதை விடுத்து அறுசமய ஞானியர் கூறும் சமயச் சார்புகளை இவ்வுலகில் நீத்திடின் என்னபழி வந்துவிடும்)

என்றும், **தேவிகாலோத்ரம்.**

சமயா சாரசங்கற்ப விகற்பமும்
அமையா தாம்குல ஆசார மானதும்
இமையாதாரும் விடாத இல் வாழ்க்கையும்
அமையார் தோளாய் விடுதல் ஆசாரமே

(சமய சடங்குகளையும் வேறுபாடுகளையும், குல ஒழுக்கங்களையும், தேவர்களாலும் விட்டு விடாத இல்வாழ்க்கையும் நீங்குதல் உயர்ந்தது)

என்றும், ***திருமந்திரம்***

ஆறு சமயமும் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் அவன் அலன்
தேறுமின் தேறித் தெளிமின் தெளிந்தபின்
மாறுதல் இன்றி மனைபுகலாமே

(அறுவகைச் சமய நுட்பம் கண்டவராலும் இறைப் பொருளின் நுட்பம் காணமுடியாது. இவற்றைத் தெளிந்து அவன் அருளாலே வீடு அடைதல் வேண்டும்)

என்றும், அன்றியும்

சிவம் அல்லது இல்லை அறையோ சிவமாம்
தவம் அல்லது இல்லை தலைப்படுவோர் கட்கு
அவம் அல்லது இல்லை அறுசம யங்கள்
தவம்வல்ல நந்திதாள் சார்ந்து உய்ம்மினீரே

(நெறியில் நிற்போர்க்குச் சிவமல்லது இல்லை என்பது தெளிவு. அறுசமயங்கள் அவம், அல்லது இல்லை. நீவிர் தவம் வல்ல நந்திதாள் சார்ந்து உய்மின்.)

என்றும், ***திருவாய்மொழி,***

யாவரும் எவையும் தானாய் அவரவர் சமயம் தோறும்
தோய்விலன் புலன் ஐந்திற்கும் சொலப்படான் உணர்வின் மூர்த்தி
ஆவிசேர் உயிரின் உள்ளல்ஆதும் ஓர் பற்று இலாத
பாவனை அதனைக் கூடில் அவனையும் கூடலாமே

*(யாவரும் அவரவர் சமயங்களில் தோய்வின்றி இருப்பினும் பற்றிலாத பாவனையைக் கைக்கொண்டால் இறைவனை அடையவாம்.)*

என்றும், ***அஞ்ஞவதைப்பரணி,***

தமர்பிறர் அற்றார் சமயமும் அற்றார்
சக இயல்பற்றார் தமை ஒழி பற்றார்
அமர்விடம் அற்றார் அறமறம் அற்றார்
அறிவயர் அற்றார் அவர் அடியாரே

*(தமர், பிறர், அற்றவர், உலக இயல்பு அற்றவர், அறிவில் தெளிவு பெற்றவராயிடின் இறை அடியாராகக் கருதப்படுவர்.)*

என்றும், ***தத்துவராயர்,***

இலன் என்று இனிச்சென்று இரக்கின்றிலேன் இங்கு யாவரையும்
குலன் என்று கோத்திர சாத்திரக் கத்துகள் கூறுகிலேன்
அலம் வந்து மற்றை அறுசமயத்தினும் மாயகிலேன்
தலம் வந்து தத்துவனார் எம்மையே இன்று சார்ந்தனரே

*(கோத்திர, சாத்திரம் கூறாது அறு சமயமும் ஆராயாது இறைவனே என்று கூறிச் சார்ந்தனர்.)*

என்றும், ***ஞானவாசிட்டம்***

தவமகம் தீர்த்தம் சேவை அருச்சனை தானம் ஆதி
அவமயக்கத்தால் நீள் நாள் விலங்குபோல் அவத்தர் வாழ்வார்
பவமுறும் இவற்றை விட்டு பரிசுத்த பரமபோதம்
கவரறப் பற்றி எல்லாக் காதலும் நீக்கி நிற்பாய்

*(துன்பம் தரத்தக்க உலகியல்புகளை விட்டுத் தூய இறை இன்பத்தைப் பற்றின் எல்லாப் பற்றும் நீங்கும்.)*

என்றும், **ஞானசித்து,**

தீர்த்தம் அர்ச்சனை அத்துவா மந்திரம்
செடியுடல் திதிசெப்பும்
ஆர்த்த சாதிபேதத்துடன் அளவைநூல்
அலைதரு மிகுதர்க்கம்
பார்த்திடார் மிகு குருபரன் அருளினால்
பரம்பரம் அது காண்பார்
ஓர்த்திடாதவர் அவை அவை பொருள் என
உழலுவர் உலகெல்லாம்

*(நீர் விடுதல், அருச்சனை, மந்திரம், அனைவரும் நூல் தரும் தர்க்கம் ஆகியவற்றைப் பார்க்காமல் குருபரன் அருளினால் பரம்பரம் காண்பர். இதனை ஆராயாதார் தாம் தாம் கருதியதே பொருள் என இவ்வுலகில் தடுமாறுவர்.)*

என்றும், **சிவஞானசித்தி,**

ஞாலமதின் ஞான நிட்டை உடையோருக்கு
நன்மையொடு தீமையிலை நாடுவது ஒன்றில்லை
சீலமிலை தவமில்லை விரதமொடு ஆச்சிரமச்
செயலில்லை தியான மில்லை சித்தமலம் இல்லை
கோலமிலை புலனில்லை கரணம் இல்லை
குணமில்லை குறி இல்லை குலமும் இல்லை
பாலருடன் உன்மத்தர் பிசாசர் குணம் மருவிப்
பாடலினோடு ஆடல் இவை பயின்டிறிடினும் பயில்வர்

*(ஞானநிட்டை உடையோருக்கு நன்மை, தீமை என ஒன்றில்லை.)*

என்றும், **ஒழிவிலொடுக்கம்,**

சிந்தை பயம் [1]இலச்சை சீலம் அருவருப்பு
[2]அந்தைவிடும் சாந்திகுலம் ஆசாரம் இந்தவழி
எட்டும் சிவயோகிக்கு இல்லை என மாமறைகள்
தட்டும் பெருமுரசம் தான்

*(சிவயோகிகளுக்கு உலகியல்புகளில் சொல்லத் தக்க (சிந்தை, பயம், நாணம், ஒழுக்கம், அருவருப்பு, அமைதி, குலம், ஆசாரம்) எட்டும் இல்லை.)*

*1 - நாணம், 2 - அகந்தை (இடைக்குறை)*

அன்றியும்,

காமாதி விட்டுக் கரமே கலமாகிப்
பூமீதே கை காலைப் போர்த்து உறங்கி-நாமகுண
சாதி கருமம் எனும் வாதனையில் தாக்கற்றார்க் (கு)
ஏது சமயம் எனலாம்

*(உலகியல் நெறி இல்லாதார்க்குச் சமயங்களின் வேறுபாடும் இல்லை.)*

என்றும், **திருவாசகம்:**

புல்வரம்பாய பலதுறை பிழைத்தும்

*(புல் முதலான பிற உயிர்த் தொல்லைகளினின்று விலகி)*

என்னும், ***சித்தாந்த கரணம்:***

ஓங்கி வருநீர்க்கதி மீதுள சிறைகள்
தேங்கி நதிசேர் திறமைபோன்று - ஆங்குப்
பருவத்துக்கு ஏற்றநெறி பற்றியவை எல்லாம்
ஒருவி உயிர்முத்தி உறும்

*(பற்பல கிளைகளிலிருந்து வரும் நீர் சேர்ந்து நதியாதல் போல் பருவத்திற்கேற்ற நெறிகளைப் பற்றியபின் அதனை விடுத்தால் உயர் முத்தி பெறலாம்.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

*இத்தன்மைப்பட்ட ஞானிகளாயினோர் ஓரோரிடத்திலே சமயாதி* [1]*சங்கற்பங்களோடு கூடி நிற்பினும் அவர்க்கு அஃது இல்லை என்று மேற் கூறுகின்றார்.*

நீங்கா தெவற்றொடு நின்றாலு நெஞ்சிடைத்
தாங்கான்மெய்ஞ் ஞானியென் றுந்தீபற
சலமரை யாதியொத் துந்தீபற 34

*நீங்காது எவற்றொடு நின்றாலும் நெஞ்சிடைத்*
*தாங்கான் மெய்ஞ்ஞானி என்று உந்தீபற*
*சலமரை ஆதிஒத்து உந்தீபற*

1 - எண்ணம்

என்பது மெய்ஞ் ஞானிகளாயினோர் முற்கூறிய சமயாதி சங்கற் பங்களோடு கூடி நிற்பினும் மனத்தின்கண் பற்று ஒழிந்து நிற்பர். அஃது எங்ஙனம் எனின் தாமரையும் நீரும், புளியம்பழமும் ஓடும் முதலிய கூடியிருத்தல் போன்று என்றவாறு.

எவற்றொடு நின்றாலும் என்ற உம்மையால் நில்லார் என்பது துணிவு. இதற்குப் பிரமாணம்: **அமுதசாரம்,**

அருந்தல் பொருந்தல் அவை ஒக்கு மேனும்
பெருந்தகையோர் உள்ளம் பிறிதே-திருந்து
மனத்தின்வேறே பதியு மைந்தனும் அம்மாதின்
தனத்தின் வேறு அல்லவே தான்

(உலகியல்புகளில் பிறர் உள்ளத்தோடு பெருந்தகையோர் உள்ளம் இருப்பினும் அவர்கள் மனம் தனித்து இயங்கும் தகையினது.)

என்றும், **சிவதருமோத்தரம்,**

மனத்து மயல் உற்றனனே மனைவிதனைத் தழுவியவன்
தனக்கு மகள் தனைத் தழுவித் தங்கினனோ அங்கு மயல்
முனைப்பயனை அருந்திடினும் தெருண்டார்கண் மோகமிலை
வினைப்பயனை வியந்து அருந்தி மற்றையரே வினைவிளைப்பர்

(இல் வாழ்க்கையுணர்வுடையோர் இவ்வுலகில் பிறந்ததன் வினைப்பயனை நில்லாமல் வியந்து இறைவனை நினைய வேண்டும்.)

என்றும், **அருட்பிரகாசம்,**

கடைஏகிக் காமநுகர்வாள் ஒருகன்னி காக்கும் சுற்றத்
தடையால் வருந்தி உறலின் பிராரத்தத் தால் எவற்றின்
இடை ஞானஆனந்தம் பெற்றோர் இருந்தும் பற்றின்றி எல்லாம்
உடையான் திருவடிக் கீழே மனம் வைத்து உறங்கு வரே

(பற்றின்றி இறைவன் திருவடிக்கே மனம் வைப்போர் ஞான இன்பம் பெறுவர்.)

அன்றியும்,

ஈங்கழனீருக்கு அவியினும் ஓரிடத்தின் மிகுத்த
ஓங்கு அழற்கு ஈரம் இலையென் கைபோல் எவ் உபாதியும்
நீங்கினர்க்கு அன்றி நன்கு இன்றினும் ஒரொரு நீடுஅறிஞர்க்கு
ஆங்கவை சூழினும் தாழ்விலென்று ஓதுவர் ஆய்ந்தவரே

*(நெருப்பிடத்து ஈரம் இருக்காது.அது போல மெய்ஞானிகளுக்கு மனத்திடத்து பற்றுக்கள் இருக்காது)*

என்றும், **நீதிசாரம்,**

நீற்றில் கழற்கொடியும் நீர்த்தாமரை இலையும்
சேற்றில் கிடந்த சிறுபுழுவும்-சாற்றுங்கால்
மண்ணில் தபனியமும் மாஞானி கள்மனமும்
எண்ணிக் கொள்ஐந்தும் இவை

*(நீர்க்கொடி, தாமரை இலை, மண் புழு, மண்ணில் பொன் மாஞானிகளின் மனம் என்ற ஐந்தும் பற்று இல்லாதவை)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

இத்தன்மைப்பட்ட ஞானிகளது அனுபவ [1]நிச்சயார்த்தம் மேற் கூறுகின்றார்.

ஆறுநெறிக்கு மவிரோத போதமே
தேறுமெய்ஞ் ஞானியென் றுந்தீபற
சித்தாந்த மாகும துந்தீபற 35

*ஆறுநெறிக்கும் அவிரோத போதமே*
*தேறும் மெய்ஞ்ஞானி என்று உந்தீபற*
*சித்தாந்தம் ஆகும் அது உந்தீபற*

என்பது ஒன்றுக் கொன்று விரோதம் நீங்காத அறுவகைச் சமயத்திற்கும் அவிரோதமாய் அவற்றிற் கெல்லாம் முடிவாய் இருப்பதொரு ஞானம் யாது? அதுவே தத்துவ ஞானிகளது துணிவு. அதுவே சித்தாந்தம் என்று சொல்லப்படும் என்றவாறு. சித்தாந்தம் என்றது முடிந்தபொருள் எனக்கொள்க.

இதற்குப் பிரமாணம்: **ஞானசூரியன்,**

அறைந்த எச் சமயக் கலையினும் எடுத்துக்
காட்டலாய் அருமறை முடிவில்

*1 - உறுதி*

சிறந்த நற் பொருளாய்ச் சிவன் அரி அயனால்
செப்பிய அருத்தமும் ஆகித்
துறந்துமற்று அவிரோதத்தையே துணிந்தோர்
சொல்லிடும் பொருளுமாம் ஒன்றை
நிறைந்த கைத் தலத்தின் மணிஎனக்
காட்டு நீதிசன் மார்க்கத்தின் இயல்பே

(கையின்கண் உள்ள மணி எவ்வாறு உறுதியோ அதுபோன்று அவிரோதத்தையே உறுதிப் பொருளாகக் கொண்டால் ஞானநெறியின் இயல்பு புலப்படும்.)

அன்றியும்,

செய்ததே தவமாய்ச் செறிவது விடுவது
இன்றியே சகலசங் கற்பப்
பொய்யதாம் ஒழுக்கப் புலமையது அறவே
போதமாம் மெய் ஒழுக்கு அதுவாய்க்
கையிலாமலகம் என்னவே வீட்டைக்
காட்டவும் வல்லதே அதுவே
மெய்யதாம் வேத வேதனம் அல்லாதவற்று அயல்
வேதனம் அறியே

(மெய்யொழுக்கமே வீடு காட்டும் நெறி.)

என்றும், **திருவள்ளுவர்,**

எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்பொருள் காண்பது அறிவு

(எப்பொருள் எத்தன்மைய தாய்த் தோன்றினாலும் அப்பொருளின் உண்மையான இயல்பை அறிவதே மெய்யுணர்வாகும்.)

என்றும், **அவிரோத போதம்,**

எடுத்த எம்மத எந்நூல்கள் யாவையும் தமதாம் அங்கு
வடித்த நாற் பொருளே கொண்டு வளம்பட மகிழ்வது அல்லால்
படித்து ஒரு பொருளைப் பற்றிப் பாங்கினால் அதில் ஒதுங்கிப்
பிடித்தது பிடித்துக் [1]காதும் பேதமை பெரியோர்க்கு இன்றே

---

*1 - முரணும்*

*(எம்மதத்தைச் சார்ந்த எவ்வித நூல்களாயினும் நூற்பொருளின் தன்மையினை உணர்தல் வேண்டும்)*

என்றும், **அருட்பிரகாசம்,**

ஓரோர் சமயத்து உயிராய்ச் சிலபல உண்டு சொல்நாம்
ஆராயின் முத்தி ஒன்றே எனில் எங்கும் அதை விரும்பித்
தேராமல் எம்மதம் இம்மதம் என்று ஒன்றில் சிக்கிஇந்தப்
பார்மீது உழல்வது என் நீர் தெளிந்தோர் செயும் பண்பு இதன்றே

*(முக்தி ஒன்றே என நினைந்து அதனை விரும்பித் தெளியாமல் பார்மீது உழல்வது தெளிந்தோர் பண்பு அன்று என்பதாம்.)*

என்றும், **மோகவதைப் பரணி,**

கூறுபல பேருடைய ஆறு பலவும் போய்க்
கோத்தபரவைக் கண் ஒரு நீத்தம் எனும் மாபோல்
வேறுபல வான சமயங்கள் முடிவிற்போய்
வேறுஅற அடைந்த அது வேதநெறி வீடே

*(பல ஆறுகள் ஒன்று கூடிக் கடலில் கலக்கும். அதுபோலச் சமயங்கள் பலவும் முடிவில் சேர்ப்பது வீட்டு நெறியில்.)*

என்றும், **அமுதசாரம்,**

இந்நெறி இந்நெறி என்றுஎம் மார்க்கமும் பகர்க
அந்நெறி எல்லாம் அறிந்த அறிவு-எந்நெறியால்
எய்தலாம் அந்தநெறி என்று அறைந்ததே வேதம்
எய்தவா வீட்டின் நெறி

*(எல்லாநெறிகள் இருப்பினும் அதில் இறுதியில் வீட்டு இன்பத்தில் செலுத்தும் நெறியே சிறப்புடையது.)*

அன்றியும்,

எய்த எளிதாம் இறை அருள் இல்லையேல்
எய்த அரிதாம் யாவர்க்கும்-மெய் தெளிந்தால்
எம்மார்க்கத்ததோடும் இகலற்றிருக்கும் அதே
சன்மார்க்கம் ஆகும் நெறி தான்

(இறையருள் இன்றேல் எதுவும் அடைதற்கு அரியது. ஆனால் உண்மையை ஆராயின் எல்லா நெறிகளோடும் முரணற்று இருப்பது சன்மார்க்க நெறியாகும்.)

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

வேதமுடிவும் சமயங்களினது துணிவும் இது என்று மேற்கூறுகின்றார்.

சுருதிகள் சொல்பல் சமயத் துணிவுமப்
பரசீவ பந்தமென் றுந்தீபற
பகர்நாமம் வேறுவே றுந்தீபற 36

*சுருதிகள் சொல்பல் சமயத் துணிவும் அப்*
*பரசீவ பந்தம் என்று உந்தீபற*
*பகர்நாமம் வேறுவேறு உந்தீபற*

என்பது வேதங்களிலே சொல்லப்பட்ட பலவித சமயங்களினது துணிவும் யாதுஎன்னில் [1]பரசீவ பந்தம் என்னும் மூவகைப் பொருளையும் உணர்த்துதல். சமயிகள் அவற்றிற்குத் தத்தம் கோட்பாட்டால் கூறாநிற்கும் [2]பரிபாசை நாமங்கள் வெவ்வேறு என்றவாறு.

இங்ஙனம் கூறிய முப்பொருளையும் இன்று என்பாரும் உளராகலின், அதுபற்றி முதற்கண் பரம் உண்டு என்று மேற்கூறுகின்றார்.

நிருமல பூரண நித்தாதி நீங்கா
வொருபரந் தானுள துந்தீபற
உலகங்க டோற்றலா னுந்தீபற 37

*நிருமலம் பூரணம் நித்தம் ஆதி நீங்காது*
*ஒருபரந்தான் உளது உந்தீபற*
*உலகங்கள் தோற்றலான் உந்தீபற*

என்பது [3]நிருமலம், [4]பூரணம், [5]நித்தம், [6]அதிசூக்குமம் [7]சச்சிதானந்தம் என்று கூறும் இவை முதலிய குணங்களைச் சொரூப இலக்கணமாக உடைய ஒரு பரம்பொருள் உண்டு.

1- இறை, உயிர், தளை, 2 - குறியீடு, 3 - மலத்திலிருந்து நீங்கிய, 4 - முழுமை, 5 - நிலையான, 6 - பெரு நுண்மை, 7- சத்து +சித்து+ ஆனந்தம்

அதனிடத்து நின்றும் [1]சராசரப் பிரபஞ்சங்கள் [2]உற்பவித்தலின் என்றவாறு.

இது [3]அநீசுரவாதிகளை மறுத்தது. அது எங்ஙனம் என்னில் ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் பிரபஞ்சமானது ஒரு கர்த்தாவை உடையது. தோன்றி நின்று அழியும் காரியம் ஆதலின்: எங்ஙனம் கடம் போல் அஃது ஒக்கும்: மாதா பிதாக்கள் காரணம் எனின்: அன்னோர் [4]புத்திரோற்பத்தி வேண்டிய காலத்து உண்டாகாமையினாலும், வேண்டாத காலத்து உண்டாகுதலாலும், ஆண் இச்சிக்கப் பெண்ணாகுதலாலும், பெண் இச்சிக்க ஆண் ஆகுதலாலும் இருவகை இச்சையும் அன்றியலே (அல்லாத பொழுதிலே), அலியாயும் [5]குரூபியாயும் தோன்றுதலினாலும் உற்பத்தியானதும் ஆகாததும் உடனே உணரப்படாமையினாலும் ஒருவர் பண்ணக் காணாது இருக்கவும், [6]மாதா உதரத்தில் மாதங்கள் தோறும் உருவாய் வளர்ந்து [7]கருப்பாசய முதலிய துன்பங்கட்கு இறவாது இங்ஙனம் தோன்றுதலாலும், [8]கடோற்பத்திக்குத் தண்ட சக்கராதிகள் போல் மாதாபிதாக்கள் சுதந்தரமின்மையாலும், அஃதன்றியும் [9]உற்பிச்சத் தோற்றங்கள், மாதா பிதாக்கள் [10]சையோகம் இன்றியே வித்துக்காரணமாக உண்டாகையினாலும் அன்னோர் காரணம் என்பது கூடாது. அஃது ஒக்கும்.

சுக்கிலம் காரணமாய்த் தேகங்கள் உண்டாதலின் [11]உத்தரோத்தர சரீரங்களுக்குப் பூர்வ சரீரபீசம் காரணம் எனின்; பாம்பின் வாயிலே கல்லும், கல்லின் வாயிலே தேரையும் நராதிதேகங்களிலே தோன்றிய புழு முதலியவைகளும் மரங்களில் தோன்றும் கிருமி கீட (நுண்ணுயிர்) புல்லுருவி முதலானவைகளும் காளான் முதலியவையும் நிலத்தில் சலத்தில் தோன்றும் கிருமியாதி வடிவங்களும் ஆகிய சுவேதசத் தோற்றங்களுக்குப் பூர்வ சரீரபீசம் காரணம் அல்லாமையால் வித்தே காரணம் என்பது கூடாது. [12]சுவேதசத் தோற்றங்களும் பூ பூதராதி பிரபஞ்சத்தினின்றும் உற்பவிக்கையால் அவையே [13]சரீரோற்பத்திக் காரணமெனின் சுவேதசோற்பத்திக்குச் சராசர உருவம் இரண்டும் காரணம்

1 - அசைவும், அசைவின்மையும், 2 - தோன்றுதல், 3- ஈசுவரன் (இறைவன்) இல்லை என்பார், 4 - மக்கள் தோன்றுதல், 5 - அழகற்றவன், 6 - தாய் வயிற்றில், 7- கருவறை, 8 - பானை வனைதல், 9 - நால்வகைப் பிறப்புள் ஒன்று, 10 - கலத்தல், 11 - மேல்வரும் பிறப்பு, 12 - வியர்வையால் தோன்றுவன, 13 - உடல்தோற்றம்

ஆகையினாலும் மற்றுமுள்ள மூவகையோனிகட்கும் அப்பூதராதி காரணம் என்கை காணப்படாமையினாலும் அது கூடாது. அங்ஙனம் அன்று. ஒரு தீபத்தில் ஒரு தீபமாகப் பாரம்பரியத்தில் அனேக தீபம் உண்டாயினும் அத்தீபத்தினது [1]தாபசத்தி அக்கினியின்கண் காணப்படுகையால் அதற்குக் காரணம் அக்கினியே ஆனாற்போலத் தேக குணங்கள் பூ பூத ராதிசரத்தில் (புலி, மலை) கிருமி புழு முதலியவும், அசரத்தில் காளான் முதலியவும் காணப்படுகையால் அவைகட்குப் [2]பிருதிவியாதி சாதுர்ப் பூதமே காரணம் எனின் அப்படித் தோற்றுவித்தது என்கை? ஒரு காலத்தும் ஓரிடத்தும் ஒருவராலும் கண்டோம் என்கை கேட்கப்படாமையினாலும் அது கூடாது. ஆயினும் அங்ஙனம் அன்று. விளக்கு உண்டாவதற்கு முன்னே அக்கினி விளக்கைத் தோன்றுவிக்க வேண்டுமே அல்லாமல் விளக்கு உண்டானதின் பின்பு அதுவும் இருக்க வேறொரு விளக்கை அக்கினி தோன்றுவிக்க வேண்டுவது இல்லை. அதுபோல் தேகாதிகள் இல்லாத காலத்திலே சாதுர்ப்பூதம் தேகாதிகளைத் தோன்றுவிக்கும் அல்லாமல் இப்பொழுது தோன்றுவியாது எனில் இப்பொழுதும் பிருதிவியாதிகளில் சுவேதச உருவம் தோன்றுகையினாலும் அஃதன்றிக் [3]காட்டத்தில் அக்கினியை அக்கினியில் விளக்கை ஒருவன் முன்பு தோன்றுவித்தப் பின்பு ஒரு விளக்கில் ஒரு விளக்கைத் தோன்றுவிக்குதல் அன்றி காட்டத்திற்கும் அக்கினிக்கும் விளக்கிற்கும் தானே வேறொன்றைத் தோன்றுவித்தல் கூடாமைபோல் சராசர பிரபஞ்சங்கள் சடம் ஆதலின் அவைகளை மாயையினின்றும் தோன்றுவித்தவன் ஒரு கர்த்தா உண்டு எனக்கொள்க.

இத்தடை விடை அநிசுரவாதிக்கும் ஈசுவரவாதிக்குமிடையே நிகழ்கிறது.

### ஈசுரவாதியின் கொள்கை

ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் பிரபஞ்சமானது ஒரு கர்த்தாவை உடையது. (இது மேற்கோள் - பிரதிக்ஞை - எனப்படும்) தோன்றி நின்று அழியும் காரியமாதலின் . (இது காரணம் ஏது) எங்ஙனம் ? கடம் போல் (இது எடுத்துக் காட்டு - திருட்டாந்தம்)

1 - சுடுகின்ற ஆற்றல், 2 - நிலம் முதலான மா பூதங்கள், 3 - விறகில்

**தடை 1.** அஃதொக்கும் (தோன்றி நின்று அழியும் காரியம் என்பது பொருந்தும்) மாதா பிதாக்கள் காரணம் - எனலாம்.

**விடை** - அன்னோர் (மாதா பிதாக்கள்)

1. புத்திரோற்பத்தி வேண்டியது காலத்து உண்டாகாமையினாலும்

2. ஆண் இச்சிக்கப் பெண் ஆகுதலாலும்

3. பெண் இச்சிக்க ஆண் ஆகுதலாலும்

4. இருவகை இச்சையும் அன்றியிலே அலியாயும் குருபியாயும் தோன்றுதலினாலும்

5. உற்பத்தியானதும் ஆகாததும் உடனே உணரப் படாமையாலும்

6. ஒருவர் பண்ணக் காணாதிருக்கவும் மாதா உதரத்தில் மாதங்கள் தோறும் உருவாய் வளர்ந்து கருப்பாசயம் முதலிய துன்பங்கட்கு இறவாது இங்ஙனம் தோன்றுதலாலும்

7. கடோற்பத்திக்குத் தண்ட சக்கராதிகள் போல் மாதா பிதாக்கள் சுதந்திரமின்மையாலும்

8. உற்பிச்சத் தோற்றங்கள் மாதா பிதாக்கள் சையோகம் இன்றியே வித்துக் காரணமாக உண்டாகையினாலும் (ஆகிய எட்டுக் காரணங்களால்)

அன்னோர் (மாதா பிதாக்கள்) காரணம் என்பது கூடாது.

**தடை 2** - அஃதொக்கும் சுக்கிலம் காரணமாகத் தேகங்கள் உண்டாதலின் உத்தரோத்திர சரீரங்களுக்குப் பூர்வ சரீர பீசம் காரணம்

**விடை** - எனின், (என்று நீ கூறுவாயானால்)

1. பாம்பின் வாயில் கல்லும் (உண்டாதல்)

2. கல்லின் வாயிலே தேரையும் (உண்டாதல்)

3. நராதி தேகங்களிலே தோன்றிய புழு முதலியவைகளும்

4. மரங்களில் தோன்றும் கிருமி, கீட, புல்லுருவி

முதலானவைகளும் காளான் முதலியவையும்

5. நிலத்தில் சலத்தில் தோன்றும் கிருமி ஆதி வடிவங்களும் ஆகிய சுவேதசத் தோற்றங்களுக்குப் பூர்வ சரீர பீசம் காரணம் அல்லாமையால் (இவ்வைந்து காரணங்களினால்) வித்தே காரணம் என்பது கூடாது.

**தடை - 3.** சுவேதசத் தோற்றங்களும் பூ பூதராதிப் பிரபஞ்சத்தினின்றும் உற்பவிக்கையால் அவையே (பூ, பூதராதிப் பிரபஞ்சமே) சரீரோற்பத்திக் காரணம்

**விடை எனின் -**

1. சுவேத சோற்பத்திக்குச் சராசர உருவம் இரண்டும் காரணம் ஆகையினாலும்

2. மற்றுமுள்ள மூவகை யோனிகட்கும் அப்பூதராதி காரணம் என்கை காணப்படாமையினாலும். அது கூடாது.

இவ்விரு காரணங்களினால் அத்தடையும் பொருந்தாது.

**தடை 4 -** அங்ஙனமன்று. (பூ, பூதராதி காரணமன்று என்பதன் கருத்து

அதுவன்று பின் எவ்வாறு எனில்)

1. ஒரு தீபத்திலிருந்து மற்றொரு தீபம் தோன்றுகிறது

(அத் தீபத்திலிருந்து வேறொரு தீபம் தோன்றுகின்றது)

இங்ஙனம் பாரம்பரியத்தில் அனேக தீபம் உண்டாயினும் அத்தீபத்தினது தாபசத்தி அக்கினியின் கண் காணப்படுகையால் அதற்குக் காரணம் அக்கினியே ஆனாற்போல (இவ்வெடுத்துக் காட்டினால் விளக்கிற்கு நெருப்பு (தேயு) என்னும் பூதமே காரணம் என்பது வலியுறுத்தப்படுகின்றது என்க) தேக குணங்கள் பூ, பூதராதிசரத்தில் கிருமி, புழு முதலியவும் அசரத்தில் காளான் முதலியவும் காணப்படுகையால் அவைகட்குப் பிருதிவியாதி சாதுர்ப்பூதமே காரணம்

**விடை எனின்,** (என்று நீ சொல்வாயானால்)

1. அப்படி (ஒரு பூத சத்தியால் முதலில் ஒரு தேகம்

தோன்றிப்பின் பரம்பரையாகத் தேகம் தோற்றுவிக்கப்படுதல்) தோன்றுவித்த தென்கை ஓர் காலத்தும் ஓரிடத்தும் ஒருவராலும் கண்டோம் என் கை கேட்கப்படாமையினாலும் அதுகூடாது.

**தடை 5 -** ஆயினும் (நீங்கள் சொல்வது உண்மையே என்றாலும் ) அங்஖னமன்று (தேக உற்பத்திக்குப் பூதங்கள் காரணம் என்று நான் கூறியது நீங்கள் கருதுவது போலன்று)

1. விளக்கு (முதன்முதலில் தோன்றிய விளக்கு) உண்டாவதற்கு முன்னே அக்கினி விளக்கைத் தோற்றுவிக்க வேண்டுமேயல்லாமல் விளக்கு உண்டானதின் பின்பு அதுவும் (அவ்விளக்கும்) இருக்க வேறொரு விளக்கை அக்கினி தோன்றுவிக்க வேண்டுவதில்லை. அது போல (முதல் விளக்குக்குப் பூதம் காரணமாக இருக்கிறதே போதும். ஒவ்வொரு விளக்கிற்கும் பூதம் நேரே காரணமாக இருக்க வேண்டுவதில்லை என்னும் முறைமை போல)

தேகாதிகள் இல்லாத காலத்தில் (முதல் தேகம் உண்டாவதற்கும் முற்பட்ட காலத்தில் என்பது கருத்து) சாதுர்ப்பூதம் தேகாதிகளைத் தோற்றுவிக்கும் அல்லாமல் இப்பொழுது தோன்றுவியாது (இப்பொழுது ஒவ்வொரு தேகத்தையும் பூதங்கள் தோன்றுவிப்பதில்லை என்பது கருத்து)

**விடை -** எனில் (என்று நீ சொல்வாயானால்) இப்பொழுதும் பிருதிவியாதிகளில் சுவேதச உருவம் தோன்றுகையினாலும் (சுவேதச உருவத்துக்குப் பூதம் காரணம் என்பதும் பொருந்தும் என்பது கருத்து, ஆனால் பிருதிவியாதிகளும் தாமே உருவத்தைத் தோன்றுவிக்க மாட்டா என்பது முடிவில் உணர்த்தப்படுகிறது.

**முடிவு -** அஃதன்றி (பூதங்களில் சுவேதச உற்பத்தி தோன்றுவதன்றி)

1. காட்டத்தில் அக்கினியை (ஒருவன் முன்பு தோற்றுவித்து)

2. அக்கினியின் விளக்கை ஒருவன் முன்பு தோற்றுவித்துப் பின்பு

3. ஒரு விளக்கில் ஒரு விளக்கைத் தோன்றுவிக்குதல் (ஒருவன் தோன்றச் செய்தல்) அன்றிக்

4. காட்டத்திற்கும் அக்கினிக்கும் விளக்கிற்கும் தானே வேறொன்றைத் தோன்றுவித்தல் கூடாமை போல் (காட்டம் அக்கினியைத் தானே தோற்றுவிக்காது. அக்கினி தானே விளக்கைத் தோற்றுவிக்காது. ஒரு விளக்கு மற்றொரு விளக்கைத் தானே தோன்றுவிக்காது. இவை அறிவற்றவை சடம் ஆதலின் இவற்றிலிருந்து வேறொன்றைத் தோன்றுவிப்பவன் ஒருவன் இருத்தல் வேண்டும் என்பது கருத்து)

சராசரப் பிரபஞ்சங்கள் சடமாதலின் அவைகளை மாயையினின்றும் தோன்றுவித்தவன் ஒரு கர்த்தா உண்டு எனக் கொள்க.

இதற்குப் பிரமாணம்: **சிவஞான சித்தியார்:**

ஒருவனோடு ஒருத்தி ஒன்று என்று உரைத்திடும் உலகம் எல்லாம்
வருமுறை வந்து நின்று போவதும் ஆதலாலே
தருபவன் ஒருவன் வேண்டும் தான்முதல் ஈறும் ஆகி
மருவிடும் அநாதி முத்த சித்துரு மன்னி நின்றே

(ஒருவன், ஒருத்தி, ஒன்று என உலகம் உரைப்பவை வந்து வந்து போகும் தன்மைய எனவே இவற்றைப் படைப்பவன் ஒருவன் வேண்டும் என்பது தெளிவு.)

எனவரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

*சீவர்கள் உண்டு என்று மேற்கூறுகின்றார்.*

பல்சித்தி முத்தி பரனா லடைதலாற்
றொல்சீ வருமுள ருந்தீபற
சுதந்திர [1]ரீனரென் றுந்தீபற 38

*பல்சித்தி முத்தி பரனால் அடைதலால்*
*தொல்சீவரும் உளர் உந்தீபற*
*சுதந்திர ஈனர் என்று உந்தீபற*

என்பது அநேக சித்திகளையும் முத்தியையும் அப்பரம் பொருளினது அருளினால் இவ்விடத்து அடைவார் உளர் ஆகலின் அநாதியாய [2]அநேக உயிர்கள் உளர். அவ்வுயிர்களும் சுதந்திரமிலர் என்றவாறு.

---

*1 - குறையுடையோர், 2 - எண்ணிலா உயிர்கள்*

பல்சித்தி என்றதனால் மயாவாதியை மறுத்தது அஃது எங்ஙனம் எனில் [1]பரகாயப் பிரவேசமும் சித்தி ஆதலின் எனக்கொள்க. முத்தி என்றது சீவர்க்கே, சீவர்க்கல்லது பரத்திற்குப் பந்தம் கூறுதல் ஒருவர்க்கும் ஒவ்வாமையின் எனக் கொள்க. உயிர்களை அநாதி என்றது பரத்தினது சிருட்டியாதி விளையாடல் அநாதி ஆதலின் எனக் கொள்க. அநேகம் என்றது ஏகாத்மாவாதிக்கும் விவகாரத்தில் இவ்வண்ணமே கூறப்படுதலின் எனக் கொள்க. சுதந்திர கீனர் என்றது [2]பரதந்திர [3]சுதந்திரர் என்றது எனக் கொள்க. அஃதன்று பரதந்திரரே எனில் தாமே வினை செய்குதல் கூடாது. அதுவும் பரமே செய்விக்கும் எனில் பரத்திற்கு அவிகாரி என்றும் பேரருள் உடையோன் என்றும் வேதாதிகள் கூறுதல் அப்பிரமாணமாம். அன்று சுதந்திரரே எனில் முத்தியை அடைய வேண்டுவது இல்லை முத்தியில் உயிர்க்குச் சுதந்திரமோ பரதந்திரமோ எனில் அது மேற்கூறப்படும் செய்யுளினிது அர்த்தங்களாலே கண்டு கொள்க. ஆதலாலே பந்தம் உடையராய் அநாதியாய் அனேக சீவர்கள் உளர் என்று கூறினார் எனக் கொள்க.

பந்தம் உண்டு என்று மேற்கூறுகின்றார்.

பல்லுயிர் முத்தி யடைதலாற் பந்தமுஞ்
சொல்வரெல் லோருமென் றுந்தீபற
தொன்மை யதுவுமென் றுந்தீபற 39

*பல்லுயிர் முத்தி அடைதலால் பந்தமும்*
*சொல்லுவர் எல்லோரும் என்று உந்தீபற*
*தொன்மை அதுவும் என்று உந்தீபற*

என்பது பல்லுயிர்களுக்கும் முத்தி அடைகுதல் உள. ஆதலின் அவ்வுயிர்களை அநாதியாய் மறைத்து நிற்பது ஒரு பந்தம் உண்டு என்று ஆன்மவாதிகள் அனைவரும் கூறாநிற்பர் என்றவாறு.

பந்தத்தை அநாதி என்றது சீவர்கள் உள்ள அன்றே உளது ஆதலின் எனக்கொள்க.

பந்தம் திரிவிதமாய் இருக்கும் என்று மேற்கூறுகின்றார்.

1 - விண்வெளியில் பறத்தல், 2- தன்னிச்சைப்படி இயங்காதோர், 3 - தன்னிச்சைப்படி இயங்குவோர்

அஞ்ஞான மாயைகன் மம்பந்த மாமிவற்
றஞ்ஞான மோர்முத லுந்தீபற
அன்றாகு மென்பரா லுந்தீபற. 40

*அஞ்ஞான மாயை கன்மம் பந்தமாம் இவற் (று)*
*அஞ்ஞானம் ஓர் முதல் உந்தீபற*
*அன்றாகும் என்பரால் உந்தீபற.*

என்பது, ஆன்ம ஞானத்திற்கு இங்ஙனம் பந்தம் என்று சொல்லப்படுவது யாது எனில் கேவலா அவத்தையைக் காட்டா நிற்கும் அஞ்ஞானமும் அவ்வவத்தையை நீக்கிச் சகலா அவத்தையைக் காட்டா நிற்கும் மாயையும்.

சகலாவத்தையில் மனோவாக்கு காயத்தால் உயிர்கள் [1]ஆர்ச்சிப்பதாகிய கன்மமுமே. இந்த மூன்றின் உள்ளும் அஞ்ஞானம் மிகவும் நுண்ணியது ஆகையால் அதனது சுபாவம் தோன்றாமையால் அஞ்ஞானம் தனியே ஒரு முதல் அன்று, சிவத்தின் அது [2]திரோபாவசத்தியே என்பாரும் ஆன்மாவினது குணமே என்பாரும் காரணமாகிய மாயையே என்பாரும் கன்மத்துள் தீவினையே என்பாரும் பலவாய் இருக்கும் என்பாரும் ஒன்றாய் அநாதி சித்தமாய் இருக்கும் என்பாருமாய் இப்படி அனேக விதங்களாலே கூறாநிற்பர். இவ்வண்ணம் மயக்கத்திற்கு இடம் கொடுத்ததும் அஞ்ஞானமே ஆதலின் அஞ்ஞானாதி திரிவித பாசம் உண்டு என்றவாறு.

[3]இத்திரிபதார்த்த நிச்சயம் எல்லார்க்கும் ஒக்கும் ஆயினும், அவரவர் கோட்பாடுகள் வெவ்வேறு என்று மேல்கூறுகின்றார்.

பல்லோர் துணிவும் பராதிமூன் றுந்தேர்த
லல்லால்வே றில்லேனு முந்தீபற
அவரவர் கொள்கைவே றுந்தீபற 41

*பல்லோர் துணிவும் பராதிமுன்றும் தேர்தல்*
*அல்லால் வேறு இல்ஏனும் உந்தீபற*
*அவர்அவர் கொள்கைவேறு உந்தீபற*

என்பது, வீட்டுநெறி ஆராயும் பல சமயிகளினது துணிவும் பரசீவ பந்தங்கள் மூன்றையும் விசாரித்தலே அன்றி வேறு இல்லை.

1. ஆக்கிக் கொள்வது, 2 - மறைப்புச்சத்தி, 3 - முப்பொருள் உண்மை

என்றாலும்

அத் திரிவிதபதார்த்தங்களினது உண்மைகளை அவர்அவர் கருதிக் கொள்ளும் கோட்பாடுகள் வெவ்வேறு என்றவாறு.

பல சமயிகளின்அது துணியும் திரிபதார்த்த விசாரணையே என்பது எங்ஙனம் எனின், எல்லா நூல்களாலும் உயிர்கட்குக் கூறப்பட்ட தருமாதி நால்வகைப் பயனில் வீடு என்பதற்குப் பொருள் விடுதலை. விடுதலையாவது பந்த நீக்கம் ஆதலின், பந்தம் ஒன்று உண்டு என்பதும். அஃது உண்டாகவே பந்தத்தினாலே கட்டுப் பட்டிருந்து அதினின்றும் விடப்படுவான் உண்டு என்பதும். பந்தம் சடம் ஆகையினாலும் பந்தம் உடையோன் சுதந்திர ஈனன் ஆகையினாலும் உயிர்களுக்குப் பந்தத்தை நீக்கி முத்தி கொடுப்பான் ஒரு சுதந்திர கர்த்தா உண்டு என்பதும் சர்வமத சம்மதம் எனக் கொள்க.

அங்ஙனம் ஆயினும், அவர்அவர் கோட்பாடுகள் வெவ்வேறு என்பது எங்ஙனம் எனின், ஆன்மாக்களுக்குக் கன்ம பேதம் அநேகம் ஆதலின், அவற்றினுக்கு ஏற்க வேதாதிகள் கூறிய பொருள்களைத் தத்தம் கருத்தினுக்கு ஏற்பத் துணிந்து, அப்பரம் பொருளுக்குப் பசுபாசங்களைப் பேதம் என்றும், அபேதம் என்றும், பேதாபேதம் என்றும் கொள்வார் எனக்கொள்க.

அங்ஙனம் சீவ பரங்களுக்குச் சமயிகள் சொல்லும் பின்னா பின்னத்துவ வாதம் எத்தால் உண்டாயிற்று என்பாரைப் பற்றி மேல் கூறுகின்றார்.

சீவ பரமத் துவிதமென் றிண்சொலா
னோவா தனைவரு முந்தீபற
ஒன்றிரண் டென்பரா லுந்தீபற. 42

*சீவபரம் அத்துவிதம் என் திண் சொலான்*
*ஓவாது அனைவரும் உந்தீபற*
*ஒன்று இரண்டு என்பரால் உந்தீபற.*

என்பது, சீவபரங்களை ஏகமும் என்னாமல், துவிதமும் என்னாமல் அத்துவிதம் என்று அவாதிதமாகிய சுருதி கூறுகையால், இரண்டு ஆகில் முத்தியில் ஒன்றாதல் கூடாது. கூடும் எனில் ஒன்று கெட்டு ஒன்றாதல் வேண்டும். கெடும் பொழுது முத்தி இன்மையால்

இரண்டு என்பதே கூடாது. பொன்னும் மணியும் போல இரண்டாகத் தோன்றுதலின் ஏகம் என்னாது அத்துவிதம் என்றது எனக் கொண்டு அப்பதத்திற்குத் தாற்பரியம் ஏகமே என்பாரும், அங்ஙனம் அன்று ஒன்று ஆகில் பொருளுக்குப் பந்தமோட்சம் சொல்ல வேண்டும். அஃது இன்மையால் ஒன்று என்பதே கூடாது. உடல் உயிர் ஆதிய போல் பேதம் தோன்றாமையின் துவிதம் என்னாது அத்துவிதம் எனா நின்றது. அதற்குத் தாற்பரியம் துவிதக் கலப்பே என்பாரும் ஆகி எல்லாச் சமயிகளும் கூறுவர் என்றவாறு.

அனைவரும் என்றமையால் எல்லாச் சமயிகளும் பேதம் அபேதம் என்பனவற்றையே அனுசரித்து நிற்கையால், அவ்விரண்டையுமே கூறினார் எனக்கொள்க. பேதாபேதம் என்பாரும் உளர். அங்ஙனம் ஒருபொருள் இருப்பது விருத்தம் ஆதலினாலும், அதுவும் துணிவின் கண் முற்கூறிய இரண்டினுள் [1]ஒருபட்சத்து அடங்கும் ஆதலின் அதனை ஓர் பட்சமாகத் தொகுத்துக் கூறினார் இல்லை எனக் கொள்க.

இங்ஙனம் கூறியவற்றுள் ஏகவாதம் சாதித்தல் கூடாது என்று மேல் கூறுகின்றார்.

ஒன்றெனின் வீடுமின் றுண்டேனும் லீலையாற்
பின்றையுஞ் சாருமென் றுந்தீபற
பெத்த மநித்தம்வீ டுந்தீபற. 43

*ஒன்றுஎனின் வீடும் இன்று உண்டேனும் லீலையால்*
*பின்றையும் சாரும் என்று உந்தீபற*
*பெத்தம் அநித்தம் வீடு உந்தீபற.*

என்பது சீவபரங்கள் ஏகம் என்னும் பட்சத்தில் வசுத்துவுக்குப் பந்தம் இன்மையால் முத்தியே இல்லை பந்தம் உண்டாயினும் முத்தி இல்லை. பரத்தினது லீலையால் பந்த மோட்சம் உண்டாயினும் பின்னும் [2]லீலையால் பிறப்பின்கண் சாராநிற்பர். சாரும் பொழுது முன்பு முத்தி அடைந்தது, அவமாகப் பந்தம் நித்தியமாய் விடும் ஆதலின் ஒன்று என்பது கூடாது என்றவாறு.

அஃது எங்ஙனம் எனின், சீவபரங்கள் ஏகமே என்னின் இங்ஙனம் துவிதபாவனை வருவான் ஏன்? பந்தத்தால் எனின், வசுத்து நின்மலன் ஆகையால் பந்தம் உண்டு என்பதே கூடாது.

1 - ஒரு பக்கம், 2 - விளையாட்டு

உண்டு என்னில், அப்பந்தம் வசுத்துவுக்கும் பின்னமோ அப்பின்னமோ? பின்னம் என்னில் வசுத்துவை விடப் பந்தம் வேறே ஒரு முதலாக உண்டாதலினால் அப்பொருளுக்கு ஏகம் என்பதே கூடாது. அதுவும் அன்றிப் பந்தம் உடைய பொருட்குச் சுதந்திரம் இன்மையால் அப்பந்தத்தை நீக்குவான் நின் மலனாக ஒரு கர்த்தாவும் மேலே உண்டாக வேண்டும்.

அங்ஙனம் கர்த்தா இன்மையால் அப்பந்தம் நீங்குதலே கூடாது. அங்ஙனம் அன்று, அப்பந்தம் பொருளுக்கு [3]அபின்னமை எனின், அபின்னம் தன் இயல்பு ஆகையால் ஒருகாலும் பந்தம் நீங்காது. இங்ஙனம் ஆதலால் வசுத்துவுக்குப் பந்தம் உண்டாயின் முத்தியும் இல்லை. அதற்குப் பந்தம் உண்டாயின் முத்தியும் இல்லை. அதற்குப் பந்தமே இல்லை என்றால், அதற்கு முன்பே முத்தியும் இல்லை. அஃது ஒக்கும். அந்த வசுதுவுக்குச் சுபாவத்திலே பந்தம் முத்தி இல்லாவிட்டாலும் அதனது சுதந்திர லீலையாலே பந்தம் முத்திகள் உண்டு என்னின். அங்ஙனம் ஆயின் சீவர்கள் வீடு கூடினும் பரத்தினது லீலையால் பின்னும் பிறப்பின் கண் சாரா நிற்பர். சாரும் பொழுது முன்பு முத்தி அடைந்ததும் அவமாகப் பந்தம் நித்தியம் ஆதலால், சீவபரங்கள் ஏகம் என்று கூறுதல் கூடாது எனக் கொள்ள.

ஏக வாதத்துள் பந்தத்தைப் பிராந்தி என்பாரைப் பற்றி மேல் கூறுகின்றார்.,

ஆகு முயிர்பந்தத் தானது மித்தையே
லேக வமலன்க ணுந்தீபற
எவ்வா றுளதாமென் றுந்தீபற. 44

*ஆகும் உயிர் பந்தத்தான் அதுமித்தையேல்*
*ஏக அமலன் கண் உந்தீபற*
*எவ்வாறு உளதாம் என்று உந்தீபற.*

என்பது [2]பிரதிபிம்பம் அவிச்சின்னம் இவை போலும் சீவர்கள் மாயையில் உண்டாகா நிற்பர். அம்மாயையும் பிராந்தி என்னில். அப்பிராந்தி ஏகத்துவம் நிருமலத் துவம் உள்ள பிரமத்திற்கு உண்டாகுதல் கூடாமையால், ஆத்மாக்களது அஞ்ஞானாதி பந்தம் [3]மித்தை அன்று என்றவாறு.

---

1 - ஒன்றானமை, 2 - நிழல் உரு, 3 - பொய்மை

அது எங்ஙனம் என்னின், மித்தையாவது விசயாதி தோசத்தால் தோன்றும் [1]சுத்திகாரசதாதி பிராந்தி ஞானம். அப்பிராந்தி ஆத்மாவுக்கே எனின். ஆத்மாவும் [2]கடதர்ப்பணாதிகளிலே தோன்றும் அவிச்சின்னம் பிரதி பிம்பம் இவை போலும் மாயையின் கண் நின்று தோன்ற வேண்டும். அதனால் மாயையினால் சீவர்களும் சீவர்களால் மாயையும் என்று [3]அன்னியோன்னியாச்சிரய தோசம் வரும்.

அதனால் ஆன்மாவுக்குத் தோன்றியது என்பது கூடாது. ஆனால் பிரமத்துக்கே தோன்றிற்று என்னில் அதுவும் கூடாது. பிரமம் ஏகம் ஆதலால் விடய தோசமும், நிருமலம் ஆதலால் [4]கரண கர்த்திரு தோசமும் தோன்றுதல் இன்மையால், பிராந்தி ஞானமே உற்பவித்தல் இல்லை. அஃது இன்மையாகவே, சீவர்களும் இல்லையாக, அதற்கு முன்பே பந்தம் சொல்லுகிறதும் இல்லையாய் விடும். அதனாலே பந்தம் மித்தை அன்று என்றது எனக் கொள்க.

இனித் துவிதவாதமும் சாதித்தல் கூடாது என்று மேல் கூறுகின்றார்.

ஓரிரண் டேலிறைக் குற்ற கருணையார்
சேர்வரன் றேயின்று முந்தீபற
சேர்தலென் சீவர்வீ டுந்தீபற. 45

*ஓர்இரண்டேல் இறைக்கு உற்ற கருணையால்*
*சேர்வர் அன்றே இன்றும் உந்தீபற*
*சேர்தல் என் சீவர்வீடு உந்தீபற.*

என்பது சீவபரங்கள் துவிதமாய் இருக்கும் எனில் பரத்தினது கருணையால் அநாதியே எல்லா உயிர்களும் முத்தியே அடையா நிற்கும். இப்போது சிருட்டி ஆதி தொழில் பண்ணுதற்கு இடமே இல்லை. அவை உண்டாயிருத்தலின், சீவர்களைப் பரத்திற்குப் பேதம் என்று கூறுதலும் கூடாது என்றவாறு.

அஃது எங்ஙனம் எனின், வசுத்து பின்னமாய் ஓர் ஆன்மா இருக்கில், அவனும் சித்தாதலால் அவனுக்குப் பந்தம் வருவான் ஏன்? அதுவும் செம்பிலே களிம்பு போல் [5]சகசம். அப்பந்தமும்

1 - இப்பியில் வெள்ளி தோன்றுதல் முதலிய மயக்க அறிவு, 2 - குடம், கண்ணாடி, 3 - ஒன்றை ஒன்று பற்றுதல் என்னும் குற்றம். 4- கருவி கருத்தாவால் வரும் குற்றம், 5- இணைந்தது

ஆத்மாவே நீக்கிக் கொள்ளில் அநாதியே நீங்கிப்போம். அஃது இன்மையால் வசுத்துவே நீக்குகின்றான் என்னில் வசுத்து [1]ஆனந்த சொரூப சர்வ திருப்தன் ஆதலால், அவன் தனக்கு ஒரு பயனும் வேண்டான். அவன் ஆன்மாக்களால் அடையும் பயன் யாது? அங்ஙனம் பயனைக் குறித்தது அன்று;

ஒப்பற்ற பேரருள் உடையோன் ஆதலின், ஆன்மாக்களிடத்து வைத்த கருணையே எனில், அங்ஙனம் ஆயின் உடனே பந்தம் நீக்கு வேண்டும். நீக்குதல் கூடாது என்னில், அசத்தன் ஆதல் வரும்.

மெள்ள மெள்ள நீக்குவன் எனில், பேரருள் உடையோன் என்பது கூடாது. இது அன்றியும் ஆன்மாக்கள் நித்தியம் ஆதலாலும். முத்தி அடைந்தோர்கள் பிறப்பின்கண் திரும்பாமையாலும், அநாதியே [2]பஞ்ச கிருத்தியம் ஒழிய வேண்டும். அங்ஙனம் அன்று, ஆத்மாக்கள் மிகுதியினாலும் ஓர் ஒருவர்க்கு இருவினை ஒப்பும் மலபரிபாகமும் வருதல் [3]கிளிஈடாதலினாலும், பஞ்ச கிருத்தியம். ஒழியாது என்னில், எண்ணிறந்த ஆத்மாக்களும் சிருட்டிக்கு ஒருவர் முத்தி அடையினும் எண்ணிறந்த சிருட்டியில் எண்ணிறந்த ஆன்மாக்கள் முத்தி அடைதலால், என்று ஆயினும் ஓர் காலையில் பஞ்சகிருத்தியம் ஒழியா நிற்கும். அப்படி ஓர் காலத்தில் பஞ்ச கிருத்தியம் ஒழியின் தோசம் ஏது எனில், பதியும் பசுக்களும் நித்தியம் ஆதலால் முன் இறந்த காலத்திற்கு அளவு இன்மையால் அநாதியே பஞ்ச கிருத்தியம் ஒழிய வேண்டும்.

ஒழியாமையால் இனி ஓர் காலத்தில் ஒழியும் என்பதற்குப் பிரமாணமே இல்லை. அல்லது ஒழியும் என்னில், பஞ்சகிருத்திய காரணாரம்பத்திற்கு அவதி கூற வேண்டும். அது கூடாமையால் பஞ்சகிருத்தியம் ஒழியும் என்பது கூடாது. அங்ஙனம் அன்று ஆன்மாக்கள் இடைவிடாது முத்தி அடையினும், [4]உலவாகிழிபோல் தொலைவு அற்று இருக்கும் எனின், அக்கிழி தெய்விகத்தினாலே பின்னும் இடையறாது [5]வர்த்தித்தல் போலே பசுக்களைப் பதி முத்தி அடைவித்தல் செய்ய மேலும் மேலும் அதற்கு அதிபதியாகிய ஒரு பதி வர்த்திப்பியா நிற்கிறது என்றாலும், அது இல்லை. இப்பதியே தற்காருண்யத்தினால் உண்டு பண்ணிக்

1 - இன்ப வடிவினனாய் எல்லாவற்றாலும் நிறைவு உடையவன், 2 - ஐந்தொழில், 3 - எங்கோ ஒன்று நிகழ்தல், 4 - குறையாத செல்வம், 5 - வளர்தல்

கொள்ளுகிறது என்றாலும், அன்றி ஆன்மாக்களே சகசமாய் உண்டாகா நிற்கிறது என்றாலும். உற்பத்தியே காட்டா நிற்றலால், ஆன்மாக்கள் நித்தியம் என்பது வரத்திரியும்.

இது அன்றியும், ஆன்மாக்கள் எண்ணிறந்தது என்னும் உரை ஆன்ம போதத்துக்கு எட்டா என்பது ஒழிந்து சிவத்திற்கும் அங்ஙனம் கூறுதல்கூடாது. அதற்கு அங்ஙனம் தானே எனின், ஒரோர் ஆன்மா பண்ணியிருந்துள்ள [1]சஞ்கித கர்மங்களுக்கு அளவு இல்லை ஆதலின், எண்ணிறந்த ஆத்மாக்கள் செய்த எண்ணிறந்த கர்மங்களையும் அதற்குக் கோரிக்கும் பலன்களையும் சர்வமுத்தியும் ஏக காலத்தில் அளவிடா நிற்கும் அப்பதிக்கு ஆன்மாக்களது தொகை தெரியாது என்னில், வகை கண்டவனுக்குத் தொகை காணப்படாது என்பது கூடாது. வினையும் அளவு அறுக்கப்படாது. அவர் அவர்க்கும் அவரவர் கர்மங்களுக்கும் அடையாளம் கண்டே கூட்டுவது என்னில் [2]சர்வஞ்ஞன் என்பது கூடாது.

எண்ணிறந்த பொருளை எண்ணிறந்தது. என்று அறிகிறதே சர்வஞ்ஞத்துவம் எனில், எண்ணிறந்தது என்பது ஆன்மலட்சணம் அன்று. பலமரம் கூடின் அது ஒரு சோலை என்பது போல் எண்ணிறந்தது என்பது ஆன்ம சமுதாயத்துக்கு உண்டானது. ஆன்மாவுக்கு லட்சணம் ஆனது சத்து, சித்து, நித்திய விபு என்னும் இலக்கணங்கள்.

இவை ஓர் ஆன்மாவிடத்தும் பல ஆன்மா இடத்தும் இருத்தல் போலே எண்ணிறந்தது என்னும் இலக்கணமும் அங்ஙனம் இருக்கவேண்டும்; அது கூடாமையால் [3]அசங்கியம் ஆன்ம லட்சணம் என்பது கூடாது. இது அன்றியும், மூவகை உயிர்களுக்கும் சிருட்டி காலத்தில் பதியினால் தனு கரணங்கள் கொடுத்து முடியுமோ முடியாதோ? முடியும் எனில் அளவு இல்லை என்பதே கூடாது. இது அன்றியும், வரத்தும் இல்லாமல் செலவும் உண்டாயிருக்கிற பொருள் சிலகாலம் அளவு படாவிட்டாலும் சில காலத்தில் அளவு பட்டுச் சில காலத்தில் ஒழியும் என்பதே யதார்த்தம் ஆதலால் செலவு உண்டாய் ஒழியாத பொருட்கு வரத்து உண்டு என்பது வரத் திரியும்.

ஆன்மாக்கள் நித்தியம் ஆதலால் பதியால் அளவுபடும் எனில், அளவு கண்டதற்கு முடிவு இல்லை என்பது கூடாது. ஆதலால்

1 - வினைத்தொகுதி, 2 - முற்றும் உணர்ந்தோன், 3 - வியாபகத் தன்மை

எவ்விதமும் பஞ்ச கிருத்தியத்துக்கு ஒழிவு தோன்றா நிற்கும். அங்ஙனம் அன்று ஆன்மாக்கள் எல்லாம் நித்திய சமுசாரியும் அநித்திய சமுசாரியும் ஆக இருப்பார்கள். அநித்திய சமுசாரிகள் எல்லாம் முத்தி அடைந்து போனாலும் நித்திய சமுசாரிகள் இருக்கையால் சிருட்டி ஆதி தொழில் ஒழியாது எனில், அநாதியே அநித்திய சமுசாரிகள் எல்லாம் முத்தி அடைந்து போய் நித்திய சமுசாரிகள் மாத்திரம் இருக்க வேண்டும். ஆதலால், இப்பொழுது முத்தி அடைவார் இல்லையாம் என்பது வரத் திரியும். உண்டாயிருத்தலின், அநித்திய சமுசாரிகளை இல்லை என்பது எங்ஙனம்? ஆதலால், சீவ பரங்களைத் துவிதம் என்று கூறுதல் கூடாது எனக் கொள்க.

துவித வாதத்துள் பந்தத்தை நித்தியம் என்பாரைப் பற்றி மேல் கூறுகின்றார்.

உதியா விருளை யுதித்தவை கூட்டிப்
பதிபந்தஞ் செய்யுமே லுந்தீபற
பதிசத்தி யென்னாமென் றுந்தீபற. 46

*உதியா இருளை உதித்தவை கூட்டிப்*
*பதிபந்தம் செய்யுமேல் உந்தீபற*
*பதிசத்தி என்னாம் என்று உந்தீபற.*

என்பது ஆன்ம பந்தமாய் இருந்துள்ள அசன்னியம் ஆகிய ஆணவ மலத்தை சன்னியம் ஆகிய மாயா காரியங்களால் முதல் பிரதிபந்தம் செய்வித்துப் பின்பு தனது ஞானசத்தியால் பிறிதிபந்தம் செய்யா நிற்கும் சிவம் எனில், அப்பொழுது அச்சிவத்திற்கு அசத்தன் ஆகுதல் வாரா நிற்கும். அதனால், பந்தம் நித்தியம் என்பது கூடாது என்றவாறு.

அஃது எங்ஙனம் எனின், யாது நித்தியம் அஃது அசன்னியம் அங்ஙனம் அசன்னியமாகிய ஓர் ஆணவ மலம் கண்ணுக்கு இருளும் செம்பில் களிம்பும் போல் அநாதியே ஆன்ம ஞான சத்தியைப் பிரிவறக் கலந்து மறைத்து நிற்கும் ஆயின், பிரகாசத்தோடு கூடிய கண்ணுக்கு இருளும் ரசகுளிகையுடன் கூடிய செம்பிற்குக் களிம்பும் இன்மைபோலும் நித்திய பூரண சுத்தமாய் இருந்துள்ள சிவத்தோடு கூடி நின்றுள்ள ஆன்மாவை அஞ்ஞானமா

1 - இருட்டு, 2 - சிறிது

வரித்தல் கூடாது. கூடும் எனில், சிவம் அஞ்ஞான விரோதி என்பது கூடாது. அது நிற்க. ஆணவ மலம் நித்தியம் ஆகின் முத்தி எங்ஙனம் கூடும்?

அது பிரதிபந்தப்படுதலின் முத்தி கூடும் எனில், அங்ஙனம் பிரதிபந்திப்பது யாது? மாயா காரியங்களினால் பிரதிபந்தம் எனில் அநாதியே அவை கூடி இருக்கவும் முத்தி எய்தாமையின் அது கூடாது. அங்ஙனம் அன்று, முத்தி காலத்தில் சன்னியம் ஆகிய சுதவதிட்ட சையோக மாயா காரியங்களினால் பிரதிபந்தம் எனில், அவை இரண்டும் சன்னியம் ஆதலால், யாது சன்னியம் அது அநித்தியம் என்று அவைகளுக்கு நட்டம் எய்தாநிற்கும். அப்பொழுது முத்தியினும் அஞ்ஞானம் [1]ஆவரியா நிற்கும். அங்ஙனம் அன்று. அவை இரண்டினாலும் சிவஞானம் ஆவரியாத அஞ்ஞானத்திற்குப் பிரதிபந்தம் வரும். அப்பொழுது சிவஞானம் ஆன்மாவிற்கு விடயமாம், அச்சிவஞானம் நித்தியம் ஆகையால் அஞ்ஞானத்திற்கு என்றும் பிரதிபந்தம் என்னில் சிவஞானம் அஞ்ஞானத்திற்கு விரோதியேயாம் ஆகில், அநாதியே முத்திவரும்.

அஃது இன்மையால், இங்ஙனம் பிரதி பந்தப்படுத்தும் என்பது கூடாது. அங்ஙனம் அன்று, அநாதியினாலே சிவஞானம் ஆன்மாவுக்கு விடயம் ஆகாமையின் முத்தி காலத்து ஆகுதலின், இங்ஙனம் பிரதிபந்தம் படுத்துதல் கூடும் ஆயின், சிவஞானமும் மாயாவலியின் ஆன்மாவிற்கு விடயம் ஆகுதலின் சூரியப் பிரகாசத்தில் கண்ணிற்கு விடயமான கடம் அப்பிரபை நீக்கத்து இருளைப் பிரதிபந்தம் செய்து பின்னும் விடயமாகுதல் கூடாமையின் மாயா நீக்கத்தில் ஆணவ மலத்தை அது பிரதி பந்தம் செய்குதல் கூடாது. அதனாலும் மாயாகர்மங்கள் இல்லாவிடில் ஆன்மாவின் ஆணவ மலத்தை நீக்குதல் கூடாது என்பதினாலும்.

சர்வ சத்தியும் உடைய பொருளுக்கு அசத்தன் ஆகுதல் வாரா நிற்கும். அதனால் பந்தம் நித்தியம் என்பது கூடாது என்றது எனக் கொள்க.

இங்ஙனம் திரிபதார்த்த நிச்சயம் பண்ணுவது ஒழிந்து இத்தசைக்கண் மனம் முதலாகிய மாயா காரியங்களைக் கொண்டு துவித அத்துவித [2]நிண்ணயம் சாதித்தல் கூடாது என்று மேல்வரும் செய்யுள் இரண்டாலும் கூறுகின்றார்.

1 - பற்று, 2 - வரையறை

பந்தாந்த மூன்றும் பகர்வதல் லாலிவை
சிந்தித் துரைக்கொணா துந்தீபற
சித்தமும் பெத்தமா லுந்தீபற. 47

*பந்தாந்தம் மூன்றும் பகர்வது அல்லால் இவை*
*சிந்தித்து உரைக்க ஒணாது உந்தீபற*
*சித்தமும் பெத்தமால் உந்தீபற.*

என்பது பரசீவ பந்தங்கள் என்று சொல்லப்பட்ட திரிபதார்த்தங்களையும் உண்டு என்பதே இந்நூலினது துணிவாயினும் அவற்றினை ஒன்றுக்கு ஒன்று பேதம் என்றும். அபேதம் என்றும், பேதா பேதம் என்றும், சமயிகள் கூறா நிற்பர். அவ்வுண்மை நிச்சயித்துக் கூறுதல் ஒருவருக்கும் முடியாது. நினைத்தற்குக் கருவி ஆகிய சித்தமும் மாயா காரியமாய் இத்தசைக் கண் சீவனுக்குப் பந்தமாய் விடுதலின் என்றவாறு.

அஃது எங்ஙனம் எனின், இத்தசையின் கண் நிச்சயிப்பது எல்லாம் மனத்தைக் கொண்டு ஆதலாலும், பரசீவ பந்தங்களின் அது உண்மை வாக்கு, மனத்துக்கு எட்டாது என்று சுருதி ஆதிகள் கூறுகையாலும் எனக் கொள்க.

மின்மினிச் சோதியால் வீடிருட் கூடுவான்
றன்மைபோன் மாயைகொ டுந்தீபற
தத்துவந் தேர்வதென் றுந்தீபற. 48

*மின்மினிச் சோதியால் வீடு இருள் கூடுவான்*
*தன்மை போல் மாயைகொடு உந்தீபற*
*தத்துவம் தேர்வது என்று உந்தீபற.*

என்பது, மிகுந்த [1]அந்த காரத்தின் கண் வழி காணாது மிகவும் வருந்திய ஒருவன் மின்மினி விளக்கத்தைக் கருவியாகக் கொண்டு தனது இல் இடத்தைக் கூடுவான் நினைத்துச் செல்வது போலும் பேரந்தகாரமாகிய அஞ்ஞான இருளில் மறைந்துள்ள சீவன் [2]கிஞ்சித்தாகிய மன விளக்கத்தைக் கொண்டு தனது உண்மையை விசாரிக்கத் துணிந்தது என்றவாறு.

*1 - இருட்டு, 2 - சிறிது*

இச் செய்யுள் இரண்டிற்கும் பிரமாணம், **திருக்கடைக் காப்பு,**

ஆட் பாலவர்க்கு அருளும் வண்ணமும்
ஆதிமாண்பும் கேட்பான் புகில் அளவு
இல்லைகிளக்க வேண்டா கோட்பாலனவும்
வினையும் குறுகாமை எந்தை தாட்பால்
வணங்கித் தலை நின்று இவை கேட்கத் தக்கார்.!

*(இறைவனின் ஆளானவர்களுக்கு இறைவன் அருள் செய்யும் அளவிற்கு எல்லையில்லை. இறைவனின் திருவடிகளை வணங்கியவர்களுக்குக் கோள்களும் வினைகளும் வரா)*

அன்றியும்,

ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டு உளன் எங்கள் சோதி
மாதுக்கம் நீங்கலுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கண் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே.

*(சுடர்விடும் சோதியனை, இறைவனைப் பற்றி வாழ்ந்தால் துன்பம் இல்லை)*

என்றும், **திருமந்திரம்,**

உரை அற்றது ஒன்றை உரைசெய்யும் ஊமர்காள்
கரை அற்றது ஒன்றைக் கரை காணலாகுமோ
திரை அற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
புரை அற்று நின்றான் புரி சடையோனே.

*(அலைகள் இல்லாத நீரைப்போல மனம் தெளிவார்க்குப் புரிசடையோன் குற்றமற்று நின்று உதவுவான்)*

என்றும், **திருவாசகம்,**

இன்று எனக்கு அருளி இருள் கடிந்து உள்ளத்து
எழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்புஅற நினைந்தேன்
நீயலால் பிறிது மற்று இன்மை
சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாம்
திருப்பெருந்துறை உறை சிவனே
ஒன்று நீ அல்லை அன்றி ஒன்று இல்லை
யார்உனை அறியகிற் பாரே.

*(மனதில் உதிக்கின்ற ஒளியை இறையருளால் அறிந்தால் துன்பம் இல்லை)*

அன்றியும்,

சொல்பதம் கடந்த தொல்லோன் காண்க
சித்தமும் செல்லாச் சேட்சியன் காண்க
நூல் உணர்வு உணரா நுண்ணியோன் காண்க.

*(சொற்பதம் கடந்த பழமையானவன்; மனமும் செல்லமுடியாத தொலைவினன் இறைவன்)*

என்றும், **தத்துவராயர்,**

ஆகியும் அழிந்தும் போகும் உற்பவத்
துன்பம் துடைத்துஇங்கு இன்பம் கொடுக்கத்
திரு உருப் புனைந்த குரவன் சொரூபன்
பொற்பதம் சூடிச் சிற்பத வீடு
கையில் கனிஎனக் காணார் ஐயோ
தர்க்க நெறியில் சார்வார் தர்க்கம்
சொல் அல்லது இல்லை ஆகும் சொல்லும்
மனன் அலது இல்லை. ஆகும் மனனும்
கனவு அஞ்ஞானக் காரியம் ஆகும்
அஞ்ஞானத்தால் ஆகிய இருள்நெறி
மெய்ஞ்ஞானத்தை விளக்குமாறு என்
இலது உளது ஏகம் அநேகம் என்பது
அலது இலை தர்க்கம் அறைவது இலது எனில்
இலது முத்தி எய்துதல் இன்பம்
மலடி மைந்தன் எய்துதல் நிலையாம்
உள்ளதும் முன்னே உள்ளது ஆதலின்
எள்ளறு முத்தி என்செய உள்ள
தன்னின் மாசு தான் ஒழித்திடுதல்
என்னின் ஏறிய மாசோ முன்னே
உள்ள மாசோ ஒழிப்பது என்னின்
விள்ளாமுன்னே உள்ளது ஆகின்
இடையோர் காலத்து என்னின் முத்தி
அடைவோர் திறத்தின் அடையும் பின்னும்
ஒழிவுஅறு பரம்பொருள் ஒன்றே ஆகின்
இழிவு பேறுஅது இல்லை விழைய

வேறே ஒருவன் உண்டு எனின் வேறு
கூறின் முத்தியில் கூடான் ஆகும்
இங்ஙனம் ஆன பின்னர்
எங்ஙனம் சொல்வார் இகல் சமயிகளே.

*(பிறவித்துன்பம் துடைக்க திருவுருவாய் அமைந்தவன் இறைவன். முத்தியை அடைய ஒழிவற்ற பரம்பொருளை அடைய வேண்டும்.)*

அன்றியும்,

பின்னா பின்னம் அதுஎனவே நின்று
பிணங்கா நிற்பர்கள் பேச்சிற்கும்
உன்னா நின்றிடும் மனனுக்கும் இவைஉடையான்
எனவரும் உணர்விற்கும்
முன்னா நின்றிடு சொரூப ஆனந்தனை
மொழிவான் அரிதுஎன முதுவேதம்
சொன்னால் அறிகிலர் அவனார் அருள்அடி
சூடாதவர் மதி கேடாயே.

*(வேறுபாடுடையவன் என்போருக்கும் இறைவனை நினையாதார் மனதிற்கும் அரிதானவன் என வேதங்கள் சொல்லின் அவன் அடி சூடாதவர் மதி கேடு நிறைந்தது)*

என்றும், **பிரமகீதை:**

வேதம் ஆகமம் புராணம்
மிருதிகள் வேறாம் மார்க்கர்
ஓதும் ஆகமங்கள் தர்க்கம்
ஒன்றோடு ஒன்று ஒவ்வா தாகும்
ஈதுஎலாம் ஒக்கப் பண்ணல்
ஆவது அன்று இதய துக்கம்
ஆதலால் அனைத்தும் விட்டுஇங்கு
அனைத்து மாம் சிவத்தைப் பார்ப்பான்.

*(மனதிலுள்ள துன்பத்தை நீக்கி இவ்வுலகில் அனைத்துமாக விளங்கும் சிவனை உணர வேண்டும்)*

அன்றியும்,

சம்புவின் அருளால் அன்றி மால்யானும்
சகல தேவதைகளும் அந்த

உம்பனை உணரோம் அருள்பெறும் பொருட்டே
ஓதிய யாவையும் உளவாம்
செம்பொருள் தன்னை அருளினால் ஒழியத்
தெரிவினால் தெரிகுவர் ஆக
நம்பும் மானுடவர் கையினால் நாற்றம்
அறிவரோ நாசியால் ஒழியே.

*(செம்பொருளாகிய இறைவனை அவன் அருளினால் அன்றி அறிய முடியாது)*

*என்றும்,* ***ஞானவாசிட்டம்,***

பேதம்உறு புந்தியே மாயை ஆகும் பெரிது
வருந்தியும் இதனைப் போக்க வேண்டும்
போதம் உறும் பேற்றினால் அன்றி மாயைப்
பொருநதியின் கரை தோன்றா பொருந்தத் தோன்றில்
ஏதம் அறும் அப்பதமே இறவா வீடாம்
இம்மாயை பிறப்பு இடம் ஏதுஎன்ன வேண்டாம்
சேதம் உறக் கொல்வழியேது என்று தேர்வாய்
சிதைவற்றால் இதன் இயல்பு தெரியும் அன்றே.

*(குற்றமற்ற இறைவன் பாதமே வீடு. மாயையின் பிறப்பிடம் எது என அறிய முயலுதல் தேவையில்லை)*

*என்றும்,* ***அஞ்ஞவதைப் பரணி:***

ஒன்றுஎன்று நின்றசில பலஎன்று நின்றசில
உபயத்து நின்ற சிலபேய்
அன்றுஎன்று நின்றுஅதனை ஆம்என்று சொல்லி
உடலகு இட்டு விட்ட சிலபேய்

*(நெஞ்சிலுள்ள தெய்வத்தை எண்ணி அறியமாட்டாமல் நிலையில்லாத தேகத்தில் இருக்கும்படி சில பேய்கள் தவ வேடங்கள் கொண்டன)*

*என்றும்,* ***சிவஞான சித்தியார்,***

பந்தமும் வீடு மாய பத பதார்த்தங்கள் அல்லா
அந்தமும் ஆதியில்லான் அளப்பு இலன் ஆதலாலே
எந்தைதான் இன்னன்என்றும் இன்னதாம் இன்னதாகி
வந்திடான் என்றும் சொல்ல வழக்கொடு மாற்றம் இன்றே.

*(அந்தமும் ஆதியும் இல்லாதவன், அளத்தற்கரியன் இறைவன். எம் தந்தை இவன் என்றும்,இன்ன பொருளாகி இவ்வாறு வந்திடான் என்று சொல்லும் வழக்கில் மாற்றம் இல்லை)*

என்றும், **நெஞ்சுவிடு தூது,**

பண்ணின் பயன்சுருதி ஆகமங்கள் பார்த்துஉணர்ந்து
நண்ண அரியதுஒரு நாடுஉடையான்.

*(இறைவன் வேதாகம அறிவால் மட்டுமே அறியக்கூடியவன் அல்லன்)*

என்றும், **சிவானந்த மாலை,**

இந்திரசாலம் காட்டும் அஞ்சனக்கண்ணோடு இருந்து
முந்த உலகம்காண மூளுவதாம்-சிந்தனையும்
சிற்றறிவும் நீக்கிஅருள் சேராது பாதிகொடு
தற்பரத்தைத் தேடும் அதுதான்.

*(உலகியல் சிந்தனைகளையும் உலகியல் தொடர்பான சிற்றறிவையும் நீக்கி, திருவருளில் அழுந்தி இறைவனை உணர முற்பட வேண்டும்)*

என்றும், **ஒழிவில் ஒடுக்கம்,**

மணிப் பாம்பு இருளின் மறைந்து இருக்கத் தேடும்
கணக்காம் தற்போதத்தைக் காட்டி-உணர்த்துகினும்
நீரில் கிணறும் நிழலும் யுத்தமும் போலாம்
ஆரித்தை நீக்கி இருப்பார்.

*(தன் நிழலை எதிராய்க் கருதி அதனோடு போராடும் ஒருவனைப் போல போதத்தை நீக்கிச் சிவத்தைக் கொள்வர்)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

இங்ஙனம் கூறிய உண்மையை அறிதல் பொருட்டு [1]மனோலய சாதகம் செய்ய வேண்டும்.
என்றும் மேல் கூறுகின்றார்.

ஆதலாற் பந்த மறுப்பான் மனோலய
சாதகஞ் செய்வனா லுந்தீபற
தற்பரந் தோன்றுமா றுந்தீபற 49

1 - மனம் ஒடுங்கும் பயிற்சி

*ஆதலால் பந்தம் அறுப்பான் மனோலய*
*சாதகம் செய்வனால் உந்தீபற*
*தற்பரம் தோன்றுமாறு உந்தீபற*

என்பது பெத்த தசைக்கண்ணே சீவாதிகளினது உண்மை தெரிதல் ஒருவருக்கும் கூடாமையால், அப்பந்தத்தை நீக்குதல் பொருட்டுச் சிவதரிசனம் வரும்படி மனோலய சாதகம் செய்ய வேண்டும் என்றவாறு.

இதன் கருத்துப் பந்த நீக்கத்தில் சிவதரிசனமும், சிவதரிசனத்தின் மனோலயமும் ஒரு தலையாக வேண்டப்படும் என்பது ஆயிற்று; மனோலயம் செய்ய வேண்டும் என்பதற்குப் பிரமாணம்; **திருமந்திரம்,**

மனமாயை மாயை இம்மாயை மயக்க
மனமாயை தான் மாயம் மற்றொன்றும் இல்லை
பினைமாய வேண்டா பிதற்றவும் வேண்டாதனை
ஆய்ந்து இருப்பது தத்துவம் தானே.

*(சிவனை மறவா மனத்தினரை மாயையும் வழிபடும். மனம் சிவத்தில் ஒடுங்கினால் மாயையும் ஒடுங்கி மாயும்)*

என்றும், **தேவிகாலோத்தரம்,**

கருத்து அடங்கின் முத்தி அது கைஅகலில் கட்டாகும்
விரித்த பொருள் இது என்ன அறிவுடைய மேதக்கோர்
திருத்தகு நல்அறிவாலே சித்தத்தைத் திறம்பாமல்
அருத்தியுடன் நிலைநிறுத்தும் அது அறிவின் பயனாமால்.

*(மாயை அடங்கினால் முத்தி கைகூடும்)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

சனன கருமங்களின் வித்தாய்த்
தருவை அசைக்கும் காற்றேபோல்
தினமும் உடலை அசைப்பதுவும்
சித்தம் இதனைத் தீர்வதுவே
அனக சகலத் தியாகம் அதாம்
அதுவே பரம ஆனந்தம்
வினவு பிற எல்லாம் மிகவும்
வெருவுகின்ற வெந்துயரே.

*(மரத்தை அசைக்கின்ற காற்றைப்போல நாளும் உடலை ஆட்டுவிப்பது மனம். இம்மனத்தில் உள்ள பற்றுக்களை நீங்குதலே முற்றுந் துறத்தலாகும்)*

என்றும், **பிரபுலிங்கலீலை,**

விரிந்த நெஞ்சம் கருவியாம்
விடயம் உணர விரியாமல்
ஒருங்கும் நெஞ்சம் கருவியாம்
தன்னை உணர ஒருங்காமல்
விரிந்த நெஞ்சம் உடையானை
விடாது பிறவி என்று உணர்க
ஒருங்கும் நெஞ்சம் உடையானை
உறாது பிறப்பு என்று உணர்கவே.

*(பற்றுமிக்க மனம் உடையவரைப் பிறவி விடாது. குவிந்த மனம் உடையவரைப் பிறவி தொடாது)*

என்றும், **மோகவதைப் பரணி,**

வீயுமோ கிளை வேர் அறாமல்
விடம்செய் மோகன் விவேகனால்
மாயுமோ உயர் மாயையாரும்
மனத்தினாரும் இருக்கவே.

*(வேர் காயாமல் கிளை காயாததைப் போல, பற்று ஒழியாத வரை மாயையும் மனமும் ஒடுங்காது)*

என்றும், **ஒழிவில் ஒடுக்கம்:**

குடையும் செருப்பும் கொடு நடப்பது அன்றிப்
படியும் விசும்பும் பரப்பு-இடைஆடும்
மாத்திரம் போலே சமயவாத மனம் போதாத
சாத்திரம் கற்று ஆர்வீடு உற்றார்.

*(வழிச்செல்பவன் ஆகாயமெங்கும் குடை பரப்பி பூமியெங்கும் தோல் பரப்பி நடத்தல் இயலாது. அதுபோல சடங்குகளும், சாத்திரங்களும் வீடு பேற்றினைத் தராது.)*

*மற்றும் வருவனவற்றால் காண்க.*

மனோலயம் உண்டாகவே திருவருள் தோன்றும் என்பதற்குப் பிரமாணம்: **திருக்கடைக் காப்பு:**

கள்ள நெஞ்ச வஞ்சகக் கருத்தைவிட்டு அருத்தியோடு
உள்ளம் ஒன்றி உள்குவார் உளத்துஉளான் உகந்தஊர்
துள்ளி வாளை பாய்வயல் சுரும்பு உலாவு நெய்தல்வாய்
அள்ளல் நாரை ஆரல்வாரும் அந்தண் ஆரூர் என்பதே.

*(வஞ்சகக் கருத்தை விட்டுவிட்டு விருப்பத்தோடு மனம் ஒன்றி இறைவனை நினைப்போர் உள்ளத்தில் இறைவன் உள்ளான்.)*

என்றும், **தேவாரம்,**

வெள்ளத் தார்விஞ்சை யார்கள் விரும்பவே
வெள்ளத்தைச் சடை வைத்த விகிர்தனார்
கள்ளத்தைக் கழியம் மனம்ஒன்றி நின்று
உள்ளத்தில் ஒளியைக் கண்டது உள்ளமே.

*(கள்ளத்தனமான எண்ணத்தை நீக்கி, மனம் ஒன்றி நின்ற உள்ளத்தில் ஒளியைக் காணலாம்)*

என்றும், **திருப்பாட்டு,**

குண்டலம் குழைதிகழ் காதனே என்றும்
கொடுமழு வாள்படைக் குழகனே என்றும்
வண்டலம்பும் மலர்க் கொன்றையன் என்றும்
வாய்வெருவித் தொழுதேன் விதி யாலே
பண்டைநம் பலமனமும் களைந்து ஒன்றாய்ப்
பசுபதி பதிவினவிப் பல நாளும்
கண்டலம் கழிக்கரை ஓதம் வந்துஉலவும்
கழுமல வளநகர்க் கண்டு கொண்டேனே.

*(குண்டலம், குழை திகழ் காதன், மழு, வாட்படைக் குழகன் என்று வாயால் சொல்லித் தொழுது வழிபட்டால் இறைவனைக் காணலாம்)*

என்றும், **பட்டணத்துப் பிள்ளையார்:**

இருக்கும் மருதினுக்குள் இமையோர்களும் நான்மறையும்
நெருக்கும் நெருக்கத்து நீளகத்தில் சென்று மீளஒட்டாத்து
இருக்கும் அறுத்து ஐவர் தீமையும் தீர்த்துச் செவ்வே மனத்தை
ஒருக்கும் ஒருக்கத்தின் உள்ளேமுளைக்கின்ற ஒண்சுடரே.

*(அலையும் ஐம்புலன்களால் வரும் தீமைகளை நீக்கி மனத்தை அடக்கினால் ஒளிமிக்க சுடரான இறைவன் தோன்றுவான்)*

என்றும், **அருணகிரிநாதர்,**

அராப்புனை வேணியன் சேய்அருள் வேண்டும்
அவிழ்ந்த அன்பால்
குராப்புனை தண்டையம் தாள்தொழல் வேண்டும்
கொடிய ஐவர்
பராக்குஅறல் வேண்டும் மனமும் பதைப்புஅறல்
வேண்டும் என்றால்
இராப்பகல் அற்ற இடத்தே இருக்கை
எளிது அல்லவே.

*(கொடிய ஐம்புலன்களும் அடங்கி மனமும் பதைபதைப்பற்று விளங்க இன்ப துன்பம் அற்ற இடத்தில் இருத்தல் வேண்டும்.)*

என்றும், **தத்துவராயர்,**

இசையான் அலன்எனை ஆளுடையான்
இந்தியங் களுடன்
அசையாத நெஞ்சு கொண்டு அன்பால்
நினைத்து அழியும் உடம்பின்
நசையானது இன்றிநலம் செய்வர்ஆயின்
நற்றாள் தலையின்
மிசையார வைத்து என்றும் மெய்யான
தன்னை வெளிப்படவே.

*(உறுதியான நெஞ்சம் கொண்டு அன்பால் நினைந்து அழியும் உடம்பினை வெறுத்து நலம் செய்தால் இறைவன் வெளிப்பட்டு நிற்பான்)*

என்றும், **தேவிகாலோத்தரம்,**

மருவிய பொருள்மேல் அன்பாய்
வானரம் போல் சரித்துத்
திரியும் அச்சித்தம் தன்னைத் திரித்துச்
சூனியத்தே நின்றால்
மருவினோர் பிறிதல் இன்றி வானவர்
அறிவுக்கு எட்டாப்
பொருவுஇலா நித்தசுத்தப் பொருளினை
அடைவர் அன்றே.

*(குரங்கினை போலத் திரியும் மனத்தை அடக்கினால் வானவரின் அறிவுக்கு எட்டாத நிகரில்லாத சுத்தப் பொருளினை அடையலாம்.)*

என்றும், **பகவத்கீதை,**

வேண்டல் வேண்டாமை இன்றி
மிகை செலாப் புலன்க ளாலே
மாண்ட போகங்கள் துய்ப்பான்
மனம் கலங்கு உறான் மற்றத்தால்
ஈண்டியதெளிவு உண்டாமால் தெளியவே
எல்லை இன்றிப்
பூண்ட நோய் நீங்கும் நீங்கப்புலன்நிலை
நிற்கும் அன்றே.

*(விருப்பு வெறுப்பின்றி அடங்கி நடக்கும் புலன்களால் இன்பங்களைத் துய்க்கலாம்.)*

என்றும், **பிரமகீதை,**

பரப்பினான் இந்தியங்களைப் பராக்குறப்
பரம்பரன் உள்ளாகி
இருத்தலால் அறிவு ஒண்கிலன் புறம்புஉள
இதரமே காண்கின்றான்
திருப்பிஞான நாட்டத்தினால் அப்பொருள்
தெரியவே பெறுந்தீரன்
ஒருத்தனே அவிநாசியாம் பர
ஒளியாய் அவன் ஒளிர்கின்றான்.

*(ஐம்புலன்களை முறையாகச் செலுத்தினால் இறைவன் அவனிடத்தில் ஒளியாக ஒளிர்வான்)*

என்றும், **பிரபுலிங்க லீலை,**

பொறியில் புறத்து மனம் செல்லில்
புலனே தோன்றியிடும் அகத்தில்
செறியில் கரணம் பரானந்த
சிவமே தோன்றும் சிவம்தோன்ற
அறிவில் பரந்த விடயமயம்
ஆகும் உலகம் தோன்றாமல்
பிறவித் துயரக் கடல்கடந்து
பேரின்பம் சார்குவர் என்று

*(ஐம்புலன்களும் புறத்தே செல்லாது உள்ளத்துள் அடக்கி நடப்பின் படிப்படியாக பிறவித் துயர் கடல் கடந்து பேரின்ப உலகை அடையலாம்)*

என்றும், **திருக்களிற்றுப் படியார்,**

அன்றிவரும் ஐம்புலனும் நீயும் அசையாதே
நின்றபடியே நிற்க முன்நிற்கும்-சென்று
கருதுவதன் முன்னம் கருத்து அழியப் பாயும்
ஒரு மகள் தன் கேள்வன் உனக்கு.

*(ஐம்புலன் வழிச் செல்லாமல் நிற்க உமைபாகன் முன்நிற்பான்)*

என்றும், **சிவானந்த மாலை,**

ஓயாமல் ஐம்புலன் சேர்வாயில் ஒடிஎறிந்து அங்கே
ஆயா மனத்தை அலைவறுத்து-மாயாதே
பண்டை அறிவு ஒழிந்து பண்டை அறிவாய்ப் பரத்தை
மொண்டு அழுந்திப் போவது முத்தி.

*(ஐம்புலன்களின் வழியில் செல்லும் மனத்தை நிறுத்தி இறையுணர்வில் அழுந்தி அடைவதே முத்தி ஆகும்)*

என்றும், வரும் மற்றும் வருவனவற்றால் காண்க.

மனோலயத்தில் தோன்றிய திருவருளால் பந்தம் நீங்கும் என்பதற்குப் பிரமாணம்: **திருவள்ளுவர்,**

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.

*(இறைவனுடைய திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர் பிறவியாகிய பெரிய கடலைக் கடக்க முடியும்)*

என்றும், **தேவாரம்,**

பொன்னுள்ளத் திரள் புன்சடை இன்புற
மின்னுள்ளத் திரள் வெண்பிறையாய் இறை
நின்னுள்ளத்து அருள் கொண்டுஇருள் நீங்குதல்
என்னுள்ளத்து உளது எந்தை பிரான்நீரே.

*(இறைவன் நின் உள்ளத்தில் அருள் கொண்டால் இருள் நீங்கும்)*

என்றும், **திருவாசகம்,**

என்புஉள் உருக்கி இருவினைமை ஈடுஅழித்துத்
துன்பம் களைத்து துவந்துவங்கள் தூய்மை செய்து
முன்பு உள்ளவற்றை முழுது அழிய உள்புகுந்த
அன்பின் குலாத்து இல்லை ஆண்டானைக் கொண்டு அன்றே.

*(இருவினைவலியை அழித்து, பிறவித் துன்பம் களைந்து பழவினைத் தொடர்பை நீக்கித் தூய்மை செய்பவன் இறைவன்)*

என்றும், **பட்டணத்துப் பிள்ளையார்,**

உற்பவம் துடைத்தல் நிற்பிடித்து அல்லது
பிறிதொரு நெறியும் இல்லை.

*(பிறப்பை நீக்க, இறைவனைப் பற்றுதல் அன்றி வேறொரு நெறி இல்லை)*

என்றும், **தத்துவராயர்,**

இதையாலயத்தில் இருப்பார் அறிய இரந்து உருகிப்
பதையாது இருப்பது என் பாவிநெஞ்சே பரனார் அருளால்
சிதையாது ஒழியில் சிலுகாய் விளையும் இச்சில்சமயக்
கதையால் மனக்கணக்கால் விடுமோ இக்கடும் பிறப்பே.

*(உள்ளமாகிய கோயிலில் இறைவனை நினைந்து கசிந்து உருகினால் பிறவி நீங்கும்)*

என்றும், **பிரமகீதை,**

இந்த வாக்கையில் இயம்பிய பரம்பொருள் அறியில்
அந்த மானுடன் மெய்யதாய் அபேதம் ஆகியநிர்த்
தொந்தமாம் பரம் அடைந்திடும் தோன்றிடாது ஆகில்
பந்தமாம் பவக்கடல் படும் பரகதி அடையான்.

*(இந்த உடலில் சொல்லப்பட்ட பரம்பொருள் பற்றி அறிந்தால் உண்மையாகி பற்றின்மை அடைவர்.)*

என்றும், **சிவானந்த மாலை,**

வெய்யோன் வரவரவே மெய்ந் நிழலும் தம் உளே
பைய ஒடுங்கும் பகுதிபோல்-ஐயன்

அருள்வந்து அணுகவே ஆணவ மாம் போதம்
மருளும் கெடும் போய் மறிந்து.

*(சூரியன் எழ ஒருவரது நிழலும் அவரது உடலில் அடங்குவது போல, இறைவன் அருள் அணுகவே ஆணவம் கெடும்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

மனோலயத்தால் பரத்தை உணர்ந்தோன் மற்றைய அனைத்தையும் உணர்ந்தோன் என்று மேல் கூறுகின்றார்.

உணர்ந்தோ ரனைத்துமா மோர்பொரு டன்னை
யுணர்ந்தோ ரனைத்துமென் றுந்தீபற
உள்ளங்கை நெல்லியீ துந்தீபற 50

*உணர்ந்தோர் அனைத்தும் ஆம் ஓர்பொருள் தன்னை*
*உணர்ந்தோர் அனைத்தும் என்று உந்தீபற*
*உள்ளங்கை நெல்லி ஈது உந்தீபற*

என்பது, தான் அன்றிப் பிறிதொரு பொருளும் இன்மையால் அனைத்தும் ஆன ஒரு பரம் பொருளையாவர் ஒருவர் உணர்ந்தார், அவரே எல்லாப் பொருள்களையும் ஒருங்கே உள்ளங்கையின் நெல்லிக் கனிபோல் ஐயம் திரிபுஇன்றிப் பிரத்தியட்சமாக உணர்ந்தோர் என்றவாறு.

இதற்குப் பிரமாணம்: **திருவாசகம்,**

பந்த விகார குணங்கள் பறிந்தும் அறிந்திடும் ஆகாதே
பாவனை ஆய கருத்தினில் வந்த பராவமுது ஆகாதே
அந்தம் இலாத அகண்டமும் நம்முள் அகப்படும் ஆகாதே
ஆதி முதல் பரமாய பரஞ்சுடர் அண்ணுவது ஆகாதே
செந்துவர் வாய்மட வார் இடர் ஆனவை சிந்திடும் ஆகாதே
சேலன கண்கள் அவன்திரு மேனி திளைப்பன ஆகாதே
இந்திர ஞால இடர்ப்பிறவித் துயர் ஏகுவது ஆகாதே
என்னுடை நாயகன் ஆகிய ஈசன் எதிர்ப்படும் ஆயிடிலே.

*(இறைவன் எதிர்ப்படுவானாயின் பிறவித்துன்பமானது விலகும்.)*

என்றும், **பட்டணத்துப் பிள்ளையார்,**

மங்கை பங்க கங்கை நாயகநின்

தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயைப் படலம் கீறித் தூய
ஞான நாட்டம் பெற்றனன் பெற்றபின்
நின் பெருந் தன்மையும் கண்டேன் காண்டலும்
என்னையும் கண்டேன் பிறரையும் கண்டேன்
நின்னிலை அனைத்தினும் கண்டேன் என்னை
நின்னைக் காணா மாந்தர்
தன்னையும் காணாத் தன்மை யோரே.

*(இறைவனின் பெருமையை அறியாதவர்கள் தன்னை அறியாத தன்மை உடையவர்கள் ஆவர்)*

என்றும், **திருவாய்மொழி:**

மனிதரும் மற்றும் முற்றும் மாயப் பிறவி பிறந்த
தனியன் பிறப்பு இலி தன்னைத் தடங்கடல் சேர்ந்த பிரானைக்
கனியைக் கரும்பினின் சாற்றைக் கட்டியைத் தேனை அமுதை
முனிவு இன்றி ஏத்திக் குனிப்பார் முழுது உணர் நீர்மையினாரே.

*(இறைவனை வழிபட்டுப் பாடி மகிழ்ந்து ஆடுபவர்கள் எல்லா அறிவும் கைவரப் பெறுவர்.)*

என்றும், **பிரம கீதை,**

எப்பொருள்களுக்கும் தோற்றமும் நிலையும்
இறுதியும் தன்கணே ஆகி
ஒப்பிட ஒன்றும் இன்றியே என்றும்
உள்ளதாய் உரைஉணர்வு இறந்த
அப்பொருள் நேரே அறிந்த போது எல்லாப்
பொருள்களும் அறிந்ததாம் அந்த
மெய்ப் பொருள் தானே எப்பொருள்களுமாய்
விளங்கலால் வேறு இலாமையினால்.

*(எப்பொருளுக்கும் முதலும் முடிவுமான மெய்ப்பொருள் இறைவனே)*

அன்றியும்,

ஈசனை அறிந்த அந்த இடத்திலே என்றும் எல்லாப்
பாசமும் நசித்தல் தானும் பணிஅறப் பவத்தின் தீர்வும்
காசுறும் அகிலமாய கங்குலின் கழிவும் தானே
ஆசுஅறும் அகண்டரூபி ஆகையும் அனைத்தும் எய்தும்.

*(இறைவனை அறிந்தால் பாசமும், பிறவியும் நீங்கும்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

மனோலய சாதனஞ் செய்யு நீர்மை மேற்கூறுகின்றார்

அந்நிட்டை நீயு மடைகுதற் கூனுயிர்ப்<br>
பின்னத்தை முன்னுணர்ந் துந்தீபற<br>
பேதைமை நீங்கிடென் றுந்தீபற 51

*அந்நிட்டை நீயும் அடைதற்கு ஊன்உயிர்ப்*<br>
*பின்னத்தை முன்உணர்ந்து உந்தீபற*<br>
*பேதைமை நீங்கிடுஎன்று உந்தீபற*

என்பது, பந்த நீக்கத்துக்கு ஏதுவான அந்த மனோலய நிட்டை கூடுதற்குப் பந்தத்தை முன்பு அறிந்து நீங்க வேண்டலின் [1]தேகேந்திரிய [2]அந்தக்கரணங்களை [3]நேதிநேதி என்று ஒன்று ஒன்றாகக் களைந்து தன் உண்மை காணுவதாகிய ஊன் உயிர் வேறுபாடு முன்பு உணர்ந்து உனது அறியாமையை நீங்குவாய் என்றவாறு

என்னுண்மையாவது இத்தேகத்தின் வேறு இல்லை, இத்தேகமே நான் என்று கூறா நிற்கும் மாணாக்கனை நோக்கித் தேகம் நீயல்லை என்று மேற்கூறுகின்றார்.

ஓயு மரணாந்த காலத் துருத்துவெந்<br>
தீயட லானுமிங் குந்தீபற<br>
தேகநீ தானல்லை யுந்தீபற 52

*ஓயும் மரணாந்த காலத்து உருத்துவெம்*<br>
*தீஅட லானும் இங்கு உந்தீபற*<br>
*தேகம் நீதான் அல்லை உந்தீபற*

என்பது, இளைத்தேன் பருத்தேன் என்று தேகத்தைச் சொல்லுதலினாலும் இதனுள் சோதிக்கும் இடத்தும் இதற்கு வேறாக ஓர் ஆன்மாவைக் காணாத படியினாலும் தேகமே யான் என்னில்,அது கூடாது. என் மாடு, என் வீடு என்கிற போது சொன்னவனுக்கு அவை வேறாய் இருத்தல்போல் என் உடம்பு

*1 - உடற் கருவிகள், 2 - அகக் கருவிகள், 3 - இது அன்று என்று மறுத்து*

என்றாலும் யோகிகள் கூடுவிட்டுக் கூடு பாய்தலினாலும் மரண காலத்தில் அக்கினி மிகவும் பற்றிக் கடத்தைப் போல் சுடுதலினாலும் தேகம் நீயல்லை; வேறே என்றவாறு.

அடலானும் என்ற உம்மையால் மற்றைய மறுதலையும் வருவிக்கப்பட்டது எனக் கொள்க.

*பிராண வாயுவும் ஆத்மா அல்ல என்று மேற்கூறுகின்றார்.*

உணர்வின்றி நாளு முறக்கத் தடைந்த
மணநுக ராதானு முந்தீபற
வாயுவு நீயல்லை யுந்தீபற 53

*உணர்வின்றி நாளும் உறக்கத்து அடைந்த*
*மணம் நுகராதானும் உந்தீபற*
*வாயுவும் நீயல்லை உந்தீபற*

என்பது, தேகத்திலே பிராணவாயு இருக்கின்றபோது இது குளிர்கிறது, இது சுடுகின்றது என்று அறிந்தும்அது நீங்கினபோது கடம்போலத் தேகம் சுடப்படுதலினாலே பிராணவாயுவே யான் என்னில் உணர்வின்றித் தினந்தோறும் நித்திரையில் அஃது இரா நின்றும் அப்போது அடைந்த கந்த ஆதியை உணராமையினாலும் பிராணவாயுவும் நீயல்லை என்றவாறு.

*இந்திரியங்கள் ஆத்மா அல்ல என்று மேற்கூறுகின்றார்.*

ஒன்றுணர் போழ்தொன் றுணராமை யானும்வே
றென்றுணர்ந் தோதலா னுந்தீபற
உணர்விந் தியங்களன் றுந்தீபற 54

*ஒன்றுஉணர் போழ்துஒன்று உணராமை யானும்வேறு*
*ஒன்று உணர்ந்து ஓதலால் உந்தீபற*
*உணர்வு இந்தியங்கள் அன்று உந்தீபற*

என்பது, [1]கந்தஆதியைக் [2]கிராணஆதி உணரா நிற்கின்றன.அவை அடங்கின நித்திரையிலே தேகமும் பிராணவாயுவும் இருக்கப் பாம்பு வரினும் [1]சத்துரு வரினும் அறியாமல் கிடத்தலால் [2]ஞானேந்திரியங்களே யான் என்னில்,

1 - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், 2 - மெய், வாய், கண், மூக்கு, செவி

இந்திரியங்களுள் ஒன்று உணர் போழ்து ஒன்று உணராமையாலும் ஒன்றை ஒன்று உணராமையாலும் ஒன்று அறிந்ததை ஒன்று அறியாமையாலும் அவைகளுக்கு வேறாய் ஒன்று இருந்து நான் கண்டேன், கேட்டேன் என்று கூறுதலாலும் கண்ணிற்குத் தீபம் போல உனக்கு [3]விசயகரணம் அல்லது அவைகள் நீயில்லை என்றவாறு.

ஒன்று உணர்போழ்து ஒன்று உணராமையானும் என்றமையால் துவக்கு இந்திரியமே ஆத்மா என்பாரையும் மறுத்தாராயினார். அஃது எங்ஙனம் எனில், [4]துவக்கு இந்திரியம் சரீரம் எல்லாம் [5]வியாபித்து இருத்தலின் இஃதே மற்றைய நான்கு கொள்கையின் நின்று [6]சத்தாதியை உணரா நிற்கின்றது எனில், அது கூடாது. அங்ஙனமாயின் ஐம்புலனும் ஒருங்கே உணர்தல் வேண்டும்; அஃது இன்மையால் துவக்கு இந்திரியமும் ஆத்மா அன்று என்று மறுக்கப்பட்டது எனக் கொள்க.

வாக்கு இந்திரியமும் ஆத்மா அல்ல என்று மேற்கூறுகின்றார்.

ஏனெனா வூமற்கு மியானென தென்றபி
மான மிருத்தலா னுந்தீபற
வாக்குநீ தானல்லை யுந்தீபற 55

*ஏன்னனா ஊமற்கும் யான்எனது என்றுஅபி*
*மானம் இருத்தலான் உந்தீபற*
*வாக்குநீதான் அல்லை உந்தீபற*

என்பது, இந்திரியங்கள் உணர்ந்ததை நான் கண்டேன், கேட்டேன் என்று வாக்கு இந்திரியம் கூறா நிற்கின்றது. தான் அறிந்ததைக் கூறும் அல்லது அறியாததைக் கூறாமையால் வாக்கு இந்திரியமே யான் என்னில் அது கூடாது. வாக்கில்லாத ஊமனிடத்தும் யான் எனது என்கிற [7]அபிமானம் இருத்தலால் அது வசன கரணமல்லது நீயல்லை என்றவாறு.

ஆங்காரமும் புத்தியும் மனமும் ஆத்மா அல்ல என்று மேற்கூறுகின்றார்.

---

*1 - பகைவர், 2 - அறிகருவிகள், 3 - உரிய கருவிகள், 4 - தோல் கருவிகள், 5 - பரவி, 6 - ஓசை முதலான ஐம்புலன்கள், 7 - கருத்து*

ஆங்கார நிச்சயித் தப்புத்தி பற்றலா
னோங்குள னான்மன முந்தீபற
ஒன்றுநீ யன்றிவற் றுந்தீபற 56

*ஆங்காரம் நிச்சயித்து அப்புத்தி பற்றலான்*
*ஓங்குஉள னான்மனம் உந்தீபற*
*ஒன்றுநீ அன்றுஇவற்று உந்தீபற*

என்பது, ஊமனுக்கும் யான் எனது என்கிற அபிமானம் இருத்தலால் இங்ஙனம் செய்வது அகங்காரம் ஆதலின் அதுவே யான் என்னில், அது கூடாது; ஒரு பொருளின்கண் நிச்சயம் இல்லாத இடத்து இஃது என்னது என்றும் யான் உடையேன் என்றும் அபிமானித்தல் கூடாமையால் அஃது உனக்குக் [1]கிரியா கரணம் அல்லது நீயல்லை. ஆயின் நிச்சயிப்பது புத்தியாதலால் அஃதே யான் என்னில் ஒரு பொருளின் கண்ணே பற்றுதல் இல்லாவிடத்து அப்பொருளை நிச்சயித்தல் கூடாமையால் அஃது உனக்கு [2]ஞான கரணம் அல்லது நீயல்லை. ஆயின் அங்ஙனம் செய்வது மனம் ஆதலின் அஃதே யான் என்னில் நெஞ்சு நினைவு எழாவிடத்து அஃது ஒன்றையும் பற்றுதல் இன்மையால் அஃது உனது [3]இச்சாகரணம் அல்லது நீயல்லை என்றவாறு

சித்தமும் ஆத்மா அல்ல என்று மேற்கூறுகின்றார்.

அறிவா னினைவு மடங்கலாற் சித்த
மறிவன் றசித்தாமென் றுந்தீபற
அறிவுன் னுருவமென் றுந்தீபற 57

*அறிவால் நினைவும் அடங்கலால் சித்தம்*
*அறிவன்று அசித்தாம் என்றுஉந்தீபற*
*அறிவுஉன் உருவம்என்று உந்தீபற*

என்பது,அங்ஙனம் நினைப்பது சித்தம் ஆதலால் அதுவே யான் என்னில், அது கூடாது; நெஞ்சின்கண் நினைவும் எழாமல் அடக்குவோர் உளராகலின் வேறே ஓர் அறிவு இருந்து கொண்டு சித்தத்தையும் அசைவின்றித் தடுத்தலால் அச்சித்தமும் நீயல்லை. இவை எல்லாம் யான் அலன் ஆகில் எனது உண்மை மற்று யாது என்னில் தத்துவ [4]அதீதமாகிய ஞானமே நினது வடிவம் என்றவாறு.

1 - தொழிற்கருவி, 2 - அறிவுக்கருவி, 3 - விழைவுக்கருவி, 4 - கடந்த

மேல் அவ்வாத்மாவினது [1]பரிபூரணம் கூறுகின்றார்.

எங்குமாய் முத்தியி லீசனோ டெய்தலான்
மங்கா வுயிர்விபு வுந்தீபற
மற்றைய கூறொணா துந்தீபற 58

*எங்குமாய் முத்தியில் ஈசனோடு எய்தலான்*
*மங்கா உயிர்விபு உந்தீபற*
*மற்றைய கூறுஒணாது உந்தீபற*

என்பது, அழிவின்றி வழங்கா நிற்கும் ஆத்மா பரமுத்தியில் பூரணமாகிய பரத்தோடு கூடிப் பூரணம் ஆகையால்அதனுக்கும் [2]மகத் பரிமாணம் அல்லது மற்றைய பரிமாணங்கள் கூறுதல் கூடாது என்றவாறு.

அஃது எங்ஙனம் எனில்,உள்ளது அன்றி இல்லது ஒரு காலும் உண்டாகாமையின் முத்தியில் [3]விபுத்துவம் உடைய ஆத்மா பந்தத்திலே அஞ்ஞானத்தினால் ஆர்ப்புஉண்டது ஆதலின் கருமத்தளவில் அணு பரிமாணமாயும் மத்திய பரிமாணமாயும் விளங்கா நிற்கும். உண்மை மகத்பரிமாணமே என்பது துணிவு என்றது எனக் கொள்க.

மேல் தன் உண்மை அறிதற்கு முன்பழகிப் போந்த வாசனைகளை நீக்கவேண்டும் என்று மேற்கூறுகின்றார்.

இந்தடை வானின் னியல்பை மறைத்தவப்
பந்தங்கள் போக்கநீக் குந்தீபற
பழவா தனையெலா முந்தீபற 59

*இந்தடை வால்நின் இயல்பை மறைத்தஅப்*
*பந்தங்கள் போக்கநீக்கு உந்தீபற*
*பழவாதனை எலாம் உந்தீபற*

என்பது, ஞான வடிவமாய் இருந்துள்ள நினது உண்மையைச் சற்றும் தெரிய ஒட்டாமல் அநாதியே மறைத்து நிற்கும் அஞ்ஞானாதி பாசங்களை வேரறக் களைதற்கு நின்னோடு பழகிப்போந்த சகல வாசனையும் பற்றறவிடுவாய் என்றவாறு.

1 - முழுமை, 2 - பேரளவு, 3 - கடவுள் தன்மை

இதற்கு உதாரணம் : **தேவிகாலோத்தரம்,**

மந்திரம் செபம் தியானம் பூசனை வணக்கம் வேண்டா
அந்தம்இலாத முத்தி உபாயமே அறிதல் வேண்டும்
சிந்தனை புறமே செல்லின் துயரமே திரிய மீட்கில்
பந்தமாம் துன்பம் நீங்கிப் பரமான இன்பம் சேர்வாய்?

*(சீவன்முத்தர் செபித்தல், தியானித்தல் முதலான தொழில்களைச் செய்ய வேண்டாம். பரமுத்திக்குரிய சாதனத்தையே பயில வேண்டும். அறிவு புறத்துச் செல்லாமல் அகத்தில் செலுத்தினால் மேலான இன்பம் அனுபவிப்பர்)*

என்றும், **பிரமகீதை,**

சதுர்மறை ஒழிந்த வாதனை பொல்லாத
    தர்க்க வாதனை உலகத்தின்
மதமுறு சமய வாதனை தாரம்
    மக்கள் சுற்றத்தின் வாதனையும்
இதம்உறு பொருளில் வாதனை தேகேந்
    தியம் மனம் புத்தி நற்பிராணன்
முதல வாதனையும் வித்தைவாதனையும்
    முடிவில் போகத்தில் வாதனையும்

*(மறை நூல்கள் தவிர செல்வம், குடும்பப்பற்று புலனழுக்கு முதலானவற்றால் வரும் துன்பங்கள், இறைவனை, திருநீற்றினை இகழ்தலால் வரும் துன்பங்கள், தீய செயல்களால் வரும் தீவினைகள் மேலான அத்துவித குணத்தை விலக்குகின்ற பகைகள் ஆகும்.)*

அன்றியும்,

ஏறு உடைச்சிவனை திருநெடுமாலை இகழும்
    வாதனையும் வேதத்தில்
கூறிடும் ஞான சாதனமாகக் கொள்ளும்
    உத்தூள புண்டரத்தை
மாறுடன் இகழும் வாதனை பாவவாதனை
    யாவும் மானுடர்க்கு
வேறுஅடும் பரமாத்துவித ஞானத்தை விலக்கிடு
    விரோதி விண்ணவரே?

*(வீடுபேற்றினை விரும்புவன் இத்துன்பங்களிலிருந்து நீங்கினால் நிலையான அத்துவித ஞானியாகலாம்)*

அன்றியும்,

ஆதலால் வீடு அதனில் ஆசை உள்ளோன்
அதின் மிகவும் தாற்பரியன்ஆகிமுன்னம்
ஓதும் வாதனைகள் எல்லாம் இகந்து எப்போதும்
உற்ற பரமஅத்துவித ஞானியாவான்
வேத வேதாந்தங்கள் உரைக்கப்பட்ட மேலான
அத்துவித ஞானமாகு
நாதனாம் பிரமத்தை நவில லாமோ
நாமௌனத்து இருப்பதலால் நாகத்தீரே

*(வீடுபேற்றினை விரும்புவோர் உலக இன்ப துன்பங்களிலிருந்து நீங்கி ஞானம் பெற்று இறைவனை அடைவர்.)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

மறுகு வாதனைகள் தீர்ந்த மௌனத்தை ஒழிய வேறோர்
உறுகதி நல்லதில்லை உணர்வன உணர்ந்தது ஆகும்
துறுதிசை பத்தும் சுற்றி மீண்டதாம் தொல்லை ஞாலத்து
அறுதியாம் உண்மை கண்டோர் சிலர் நின்றோர் அவத்தில் மாய்வோர்

*(துன்பங்கள் தீர்த்த மௌனம் தவிர வேறு ஒரு நல்ல கதியில்லை. இதனை உணராதார் துன்பத்தில் அழிவர்)*

என்றும், **சிதம்பரபுராணம்**

அன்றி உரைக்கு அரும் அனந்த கோடிபிறப்பு
இடைக்கருமம் ஆற்றினாலும்
துன்றுஅரிது பரகதியைச் சைமினிவ
வேதாந்தச் சொற்கள் தேர்ந்து
நன்றிதரு பொருள்தெளிவாம் சிவஞானம்
சிவன்அருளால் நண்ணின் முத்தி
ஒன்றல் எளிது ஆதலினால் மூது உணர்வால்
இதற்குஏற்ற உறுதிஓர்வாய்

*(பல பிறப்புக்களில் இறைவனை அடைதற்குரிய செயல்கள் செய்தாலும் மேலான கதியினை அடைதலரிது. நூல்களுள் தேர்ந்துரைத்த சிவஞானத் தெளிவைச் சிவன் அருளால் அடைந்து முத்தியினை எளிதில் பெறலாம்)*

என்றும், **சிவஞானதீபம்,**

சாத்திரம் புத்தகம் பூசைசமயம் மதம் தருக்கம்
தந்திரம் மந்திரம் யோகம்தவம் விரதம் சீலம்
ஏத்தரிய பாவனை எண்சித்திகளே முதலாம் எப்பயனும்
முத்தி விலக்கு எனஒருசொல் அதனால்
தீர்த்தவன் மெய்த்தேசிகனாம் அவன் அருளால் அகலாச் சித்தமலம்
அறுத்து உலகில் தீமை நன்மை செயினும்
வாய்த்த கதிரவன் செயல்போல் இசைந்து இசையாது ஒழுகும்
வண்மையரே மெய்ஞ்ஞான உண்மை நிலையினரே

*(சரியை முதலான நான்கும், எண் சித்திகள் மட்டும் முத்தியைத் தராது. ஆகவே ஞானாசிரியர் அருளால் மலம் நீங்கி விருப்பு வெறுப்பு இன்றி நடக்கும் தன்மையுடையவரே ஞானநிலையினை உடையவர்கள்)*

என்றும்,**சிவானந்தமாலை,**

பூசனையும் வாசனையும் புத்தகமும் சாத்திரமும்
வாசகமா மந்திரமும் தந்திரமும் - நேசம்
இறக்கின்ற சிந்தனையும் எல்லாம் பொருளை
மறப்பென்று மாணா மதி

*(பூசனை போற்றுதல், நூலறிவு, சாத்திர அறிவு, முரண் சிந்தனை ஆகியன மட்டும் உண்மையான அறிவு தரா.)*

என்றும், **ஒழிவில் ஒடுக்கம்,**

கிரியை கிளைத்துவந்து கேட்டவர்க்குச் சும்மா
திரியச் சுகம்விளைத்த சீமான் - குருவன்றிச்
சற்றே பதைப்பைத் தரினும் சகம்படைக்கக்
கற்றானும் காலனுமாம் காண்

*(முக்கரணக் கிரியைகளை வெறுத்து ஞானத்தை விரும்பியவர்களுக்கு, மௌனமாயிருக்கும்படி பேரின்பத்தை உண்டாக்கியவர் ஞானகுரு ஆவார்.)*

அன்றியும்,

சுகஅதீதம் வேண்டித் தொழில் செய்வோம் என்றால்
நகாரோ துயில்வார் நடந்தோ - விகாரம் எனச்

சாத்திரமும் பூசைச் சமாதிகளும் சார்போதக்
கோத்திரம்காண் மாயைக் குழாம்

*(கிரியைகளை மட்டுமே பின்பற்றுவது நடந்து கொண்டே உறங்குவது போன்றதாகும்.)*

என்றும், **வள்ளல் வாக்கு,**

வார்த்தையால் அர்ச்சனையால் மந்திரத்தால் பாவகத்தால்
சாத்திரத்தால் தந்திரத்தால் தர்க்கத்தால் ஊத்தைஉடல்
உற்பவமும் ஓயாதுஇங்கு உன்ஆணை மாணவக
தற்பரமும் கிட்டாதுதான்

*(சொல், அருச்சனை, மந்திரம், சாத்திரம், தந்திரம் முதலானவற்றால் மட்டுமே இப்பிறப்பு ஒழியாது.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

வாதனைகள் எல்லாம் நீங்கிய மாணாக்கனுக்குச் சமாதி கூடுதற்கு ஆசனம் மேற்கூறுகின்றார்.

ஒட்டற முத்தித் தடையா யுளவெலாம்
விட்டனை யேலினி யுந்தீபற
மேவொண் சுகாசனத் துந்தீபற 60

*ஒட்டுஅற முத்தித் தடையாய் உளஎலாம்*
*விட்டனையேல் இனி உந்தீபற*
*மேவுஒண் சுகஆசனத்து உந்தீபற*

என்பது, முத்திவிலக்கு என்று இங்ஙனம் கூறப்படும் சகல வாசனையும் மாசுஅற ஒருங்கே நீத்தனையாயின் மேற்சமாதி கூடுதற்கு அனுகூலம் ஆகியது யாதொரு சுக ஆசனம் அவ்வாசனத்தைப் பொருந்துக என்றவாறு.

இதற்கு உதாரணம், **பகவத்கீதை**

தலையும் கழுத்தும் உடம்பும் இவை
செவ்வே தளராதே இருக்கும்
நிலையில் இருந்து கண்களைத்தன்
மூக்கின் [1]நுதிமேலே நிறுத்தி

1 - நுனி

அலையும் கடல்போல் காமமும் மெய்ப்
பயமும் தன்னை விட்டுஅகல
உலையும் மனம் உள்அடங்களனை
உணர்ந்தேஇருக்கும்அது யோகம்

*(உடலை நேராக வைத்து கண் பார்வையை மூக்கின் நுனிமேல் நிறுத்தி, காமம், மயக்கம், வெகுளி நீக்கி பின் மனத்தினை உள்ளடங்கச் செய்து இறைவனை இடைவிடாது நினைத்தல் யோகமாகும்)*

என்றும், **பிரமகீதை,**

தக்க ஞானத்தைத் தான்பெறல் பொருட்டுத்
தனிஇடம்தனை அடைந்துஇதய
துக்கம் மேவாமல் சுகாதனத்து இருந்து
தோள்தலை கழுத்து உடம்பு இவைநேர்
ஒக்குமாறு இருத்திப் பூதிகொண்டுஇந்த
உடம்பை உத்தூளனம் பண்ணி
மிக்கவாய்வரும் இந்தியங்களை எல்லாம்
விடயமேல் எழாவகை விலக்கி

*(ஞானம் பெறுதற்கு, தனித்த இடத்தில் அமர்ந்து சுகாசனத்தில் இருந்து தோள் தலை முதலான உறுப்புக்களை நேராக இருத்தித் திருநீற்றினைப் பூசி ஐம்புலன்களை அடக்கினால் ஞானம் பெறலாம்)*

என்றும், **அமுதசாரம்,**

செவ்வே உடலும் கழுத்தும் சிரமும்உற
எவ்வா தனத்தே இருந்துஎவர்க்கும் கைவந்தால்
வாதம் முதல்நோய் நலியா மதியுடையோர்
ஆதனம் என்பது அது

*(உடல் உறுப்புக்களை நேராக இருத்தி எந்த ஆசனத்தில் யாருக்கு யோகம் பொருந்துகிறதோ அவர்களுக்கு வாதம் முதலான நோய்கள் வாரா)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

மேல் இச்செய்யுள் தொடங்கி உண்மை நிட்டைக் கூறுகின்றார்.

வாங்கிப் பொறியைந்து ணின்ற மனந்தன்னை
நீங்கா தகத்திருத் துந்தீபற
நினைவு மெழாமலென் றுந்தீபற 61

*வாங்கிப் பொறிஐந்துள் நின்றமனம் தன்னை*
*நீங்காது அகத்துஇருத்து உந்தீபற*
*நினைவு எழாமல்என்று உந்தீபற*

என்பது, ஐம்பொறிகளோடு கூடித் சத்தாதி விசயங்களைக் கவராநிற்கும் மனத்தினை அவற்றினை விட உள்ளே வாங்கிப் பின்பு அவற்றின் வழி போகாமல் நெஞ்சிலே வைத்து அவ்விசய வாசனைகளும் எழாதபடி அடக்கவேண்டும் என்றவாறு.

இதற்கு உதாரணம், **அப்பர் தேவாரம்,**

பொறிப் புலன்களைப் போக்குஅறுத்து உள்ளத்தை
நெறிப்படுத்து நினைந்தவர் சிந்தையுள்
அறிப்புறும் அமுதாயவன் ஏகம்பம்
குறிப்பினால் சென்று கூடித் தொழுதுமே?

*(பொறி வழி உள்ளத்தைச் செலுத்தாது நன்னெறிப்படுத்தி சிந்தனையுள் பொருந்தும் திருஏகம்பனைக் கூடிச்சென்று வழிபடுதல் வேண்டும்)*

என்றும், **திருவாய்மொழி,**

புலன் ஐந்து மேயும் பொறி ஐந்து நீங்கி
நலம்அந்தம் இல்லதோர் நாடு புகுவீர்
அலமந்து ஈய அசுரரைச் செற்றான்
பலமுந்து சீரில் படிமின் ஓவாதே

*(ஐம்புலன்களுக்கு ஆட்படாமல் வீடுபேற்றினை விரும்பி இறைவனிடம் அன்பு கொண்டு அவனது நற்குணங்களில் மூழ்குங்கள்)*

என்றும், **பகவத்கீதை**

வாங்கி ஐம்பொறி நின்ற மனத்தனை
நீங்கிடா வகை நின்னுள் இருத்தியே
தீங்கி யாவையும் சிந்தை செயாமையாம்
பாங்கியாது அதுவே பயில் வாய்அரோ?

*(தீமைகளை எண்ணாமல் ஐம்பொறி வழிநின்ற மனந்தனை நெஞ்சினுள் நிறுத்தினால், தீமைகள் பற்றாது)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

மனமணி பேதச் சேற்றின் மறைந்து ஒருவருக்கும் தோன்றா
கனமுறு விவேக நீரால் கழுவினால் சித்தி காட்டும்
வினவுறு விவேக அன்பால் மெய்ம்மையை மதியால் கண்டு
சினமுறு பொறியை வென்று தீர்வரும் பிறவி தீர்வாய்?

*(மனம் அறியாமை எனும் சேற்றில் மூழ்கினால் உண்மை ஞானம் தோன்றாது. ஞானநீரினால் கழுவினால் இறைவனது அருளனுபவம் பெறலாம்.)*

என்றும், **பிரபுலிங்க லீலை**

இந்தியம் ஓரொன்றா விட்டிடின் மற்றை ஒன்றுசாரும்
முந்திய மனம் அழிப்ப முற்றுப்போம் அணிய பாம்பின்
ஐந்தலை களினுள் ஒன்றை அரிந்திடின் மற்றுஒன்று ஆலம்
சிந்திடு மிடறு அரிந்தால் தீர்ந்திடும் ஒருங்கு மாதோ?

*(ஐந்து தலைப்பாம்பின் கழுத்தை அரிந்தால் விடம் கக்காது. அது போல ஐம்பொறி ஆசைகளை வேறோடு களைய வேண்டும்.)*

என்றும், **சிவானந்த மாலை,**

பூதம் சுழலும் பொறிபுலன் அந்தக் கரணம்
போதம் கழித்துநாள் போக்காதே - போதச்
சிறையா நிறைவுஅகலச் சின்மயன் நேயத்தே
நிறையா நிறைவாகி நில்

*(பொறி, புலன், அந்தக் கரணம் ஆகியவற்றைப் பெரிதென எண்ணி வாழ்நாளை வீணாகப் போக்காதே. உண்மையான இறையன்பில் சிந்தையைச் செலுத்துக)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

பதைத்தெழா துள்ளம் புதைப்பாய் பதைக்கில்
வதைப்பாயங் கங்கேயென் றுந்தீபற
மாயு மனப்பேயென் றுந்தீபற 62

*பதைத்து எழாது உள்ளம் புதைப்பாய் பதைக்கில்*
*வதைப்பாய் ஆங்குஅங்கே என்று உந்தீபற*
*மாயும் மனப்பேய் என்று உந்தீபற*

என்பது, சித்தத்தைச் சற்றும் அசையாத வண்ணம் அடக்கக் கடவாய். அங்ஙனம் அடங்காது அசைந்து ஒரு பொருளைப் பற்றுமாயின், பற்று முதிர்ந்து நிச்சயிப்பதற்கு முன் விவேகத்தால் உடனே அழித்து முன்நின்ற நிலையே நிற்கக்கடவாய்; அப்பொழுது அலகை போல் உழலா நிற்கிற மனம் இறந்திடும், என்றவாறு.

இதற்கு உதாரணம், **தேவிகாலோத்தரம்,**

பற்றினால் சலிக்கும் உள்ளம் பற்றாமல் பண்ணிக்கொள்க
நிற்றல்இன்று எனினும் தத்தம்நிலையினில் நிறுத்திக் கொண்டால்
பெற்றனம் என்று பேணிப் பின்னைப் பேராமல் காக்கும்
நற்றவர் அன்றி இந்த உலகினில் அல்லார் யாரோ?

*(நில்லாத மனத்தை நிலைப்பெறுமாறு செய்வோர் நல்தவத்தர்)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

எந்த எந்த வாதனைகள் இதயத்து எழுந்த அவைஎல்லாம்
அந்த அந்த இடத்துஅழிக்கின் அதுவே மாயைக்கு அழிவாகும்
முந்து போக பேதம்என மொழிந்த இருவாதனை விட்டு
வந்த பாவ அபாவம்கண் மாற்றி விகற்பம் அறமகிழ்வாய்

*(துன்பங்கள் எங்கு எழுகிறதோ அதனை அழித்தால் அது மாயைக்கு அழிவாகும். போகம் பேதம் நீக்கி இறைவனோடு ஒன்றவேண்டும்)*

அன்றியும்,

எங்கே எங்கே மனம்ஓடி
  இளையோர் என்ன வீழ்ந்து அழுந்தும்
அங்கே அங்கே நின்றுஎழுப்பி
  அகண்ட அறிவின் அடைவிப்பாய்
சங்கே தமதாய் இவ்வாறு
  சாதித்து உளமா மதகரியை
எங்கு ஏதமறத் தளைத்துஎல்லா
  விசாரத் தாலும் வீடுஅணைவாம்?

*(மனத்தை விழாமல் எழுப்பி மெய்ஞான அறிவில் செலுத்தினால் உள்ளமாகிய மதயானையை அடக்கி வீட்டினை அடையலாம்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

அசைவறச் சித்த மடங்குமேற் பின்ன
ரசையாமற் காத்திடென் றுந்தீபற
அறிவால் வருந்தியு முந்தீபற 63

*அசைவுஅறச் சித்தம் அடங்குமேல் பின்னர்*
*அசையாமல் காத்திடுஎன்று உந்தீபற*
*அறிவால் வருந்தியும் உந்தீபற*

என்பது, அசைவு ஒழியாத சித்தம் யாதொரு காலத்து அசைவு ஒழிந்து அடங்குமாயின் பின்னர் அசையாதபடி அதன்கண் அசைவு பிறப்பித்தற்கு உரியன எவையேனும் அவற்றை அறிவினது வீரப்பாட்டால் அக்கணமே நீக்கித் திடசித்தம் பண்ணிக்கொள் என்றவாறு.

இதற்கு உதாரணம், திருவள்ளுவர் :

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்

*(வினைக்கண் திண்மையுடையவராயின் தாம் எண்ணிய பொருள்களை எண்ணியவாறே அடைவர்)*

அன்றியும்,

துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை

*(துன்பம் மிகுதியும் வரினும் தளராது இறுதியில் இன்பம் தரும் வினையை உறுதியுடன் செய்தல் வேண்டும்)*

என்றும், **தேவிகாலோத்தரம்,**

ஆராத சித்தம் யாதோர் காலத்தில் அடங்குமானால்
பேராமல் வருந்திக் காத்துப் பின்னைச் சிந்தனைகள் சென்று
சாராமல் வல்லவாறு தடுத்துச் சார்வான எல்லாம்
சேராமல் மயக்க நீக்கித் திரமாகச் செய்து கொள்வான்

*(மனம் அடங்கும் காலத்தில் அதனைக் காத்து அறியாமையை நீக்கி நிலைபெறச் செய்தல் வேண்டும்)*

என்றும், ஞானவாசிட்டம்

வருந்தி முயன்று மனம்தன்னை
மாற்றி இல்லை உண்டுஎன்னாது
இருந்த பதத்தில் இருந்திடுவாய்
இடர்தீர் செல்வம் இடரின்றிப்
பொருந்தல் வேண்டும் மனம் வென்றால்
புவன மூன்றும் துரும்பாகும்
திருந்த இனிது என்றனவெல்லாம்
தீதாய்த் தோன்றின் மனம்ஆளும்

(மனதினை நிலையான இடத்தில் நிற்கச் செய்தால் மூவுலகும் துரும்பாகும். இனியன அனைத்தும் தீயனவாகத் தோன்றினால் மனம் அடங்கி விடும்)

என்றும், நாலடி நானூறு

ஊக்கித்தாம் கொண்ட விரதங்களுள் உடையத்
தாக்கரும் துன்பங்கள் தாம்தலை வந்தக்கால்
நீக்கி நிறூஉம் உரவோரே நல்லொழுக்கம்
காக்கும் திருவத் தவர்

(தவ வாழ்வை இடையூறுகளின்றி, குறைவு இல்லாது நிறைவு செய்யும் மனவலிமையுடையவர்களே துறவறம் சிறக்க வாழும் சிறந்த பண்புடையவர்களாவர்)

என்றும், அருட்பிரகாசம்

கடைதரு தீப்புகை கால்வருத்
தம்கொடு கைநெகிழ்ந்து
விடின்அவிந்து ஆக்க ஒணாத்துயர்
எய்தலின் எம்பொறிவாய்ப்
படர்தரு சித்தம் ஒருகால்
அடங்கில் பினைப்படராத்
தடைசெயல் வேண்டும் படர்ந்தால்
எவர்பின் தடுப்பவரே

(சித்தம் அடங்கின பின்னர் மீண்டும் அது பற்றுக்களில் செல்லா வண்ணம் அடக்குதல் வேண்டும்.)

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

ஆங்கறி யாமையுஞ் சாரா தறிவொடுந்
தூங்குவாய் நாளுமென் றுந்தீபற
தோன்றும் பரம்பொரு ளுந்தீபற 64

*ஆங்கு அறியாமையும் சாராது அறிவொடும்*
*தூங்குவாய் நாளும் என்றுஉந்தீபற*
*தோன்றும் பரம்பொருள் உந்தீபற*

என்பது, விகற்ப உணர்வாகிய சித்தசலனம் அற்று இருந்துள்ள அவ்விடத்து அறியாமையாகிய கேவலமும் பொருந்தாமல் உன்னுடைய சுபாவ அறிவோடும் கூடி இரவும் பகலும் இடைவிடாது [1]சாதகம் செய்வாயாகில் அங்ஙனம் உனக்கு மேலாகிய பரம்பொருளே தோன்றும், என்றவாறு.

இதற்கு உதாரணம், **திருமந்திரம்,**

அறிவு அறியாமை இரண்டும் அகற்றிச்
செறி அறிவாய் எங்கும்நின்ற சிவனைப்
பிறிவு அறியாது பிரான்என்று பேணும்
குறி அறியாதவர் கொள் அறியாரே

*(அறிவு அறியாமை எனும் இரண்டினையும் கடந்து பொறிவழிச் செல்லாமல் நிற்பவன் மேலோன்)*

அன்றியும்,

பொங்கும் இருள்நீக்கும் புண்ணியக் கூத்தனை
எங்குமாய் நின்றுஆடும் ஏகம்பக் கூத்தனைக்
கங்குல் பகலினும் காணாத கூத்தனை
இங்குஎன் இடமாக யான் கண்டவாறே

*(அறியாமை இருள் நீக்கும் புண்ணியக் கூத்தனைக், கேவல சகல நிலையில் காண இயலாதவனை பயிற்சியால் என்னுள் கண்டேனே)*

என்றும், **பட்டணத்துப் பிள்ளையார் பாடல்**

சினந்தனை அற்றுப் பிரியமும் தான்அற்றுச் செய்கைஅற்று
நினைந்ததும் அற்று நினையாததும் அற்று நிர்ச்சிந்தனாய்
தனந்தனியே இருந்து ஆனந்த நித்திரை தங்குகின்ற
அனந்தலில் என்று இருப்பேன் அத்தனே கயிலாயத்தானே

1 - பயிற்சி

*(சினமழிந்து செயல்களற்று நினைத்தலும் மறத்தலும் இன்றி, தூயவனாய்த், தனித்திருந்து பேரின்ப நித்திரையில் ஆழ்ந்து கிடப்பதற்கு கயிலாய மலையினை வணங்க வேண்டும்)*

என்றும், **தேவிகாலோத்தரம்,**

நித்திரையும் பராக்கினையும் நீக்கிச் சித்தம்
ஒருநிலையும் நீங்காமல் நிறுத்திக் கொண்டால்
சித்தம் ஒரு பொருளினையும் சேராது ஆகிச்
சேரும்வகை சேராமல் செல்ல நின்று
மத்தமன முதலாய அவத்தை ஒன்று
மருவாத வகைநிற்கும் அதுவே ஆகும்
முத்திநெறி என்றும் மறைஇடை விடாது
முறைஇடவும் ஆகமங்கள் மொழியும் காணே

*(சுத்தமாகிய நிலையைப் பற்றினால் மனம் ஒரு பொருளையும் பற்றாது. அத்தகு சுத்தநிலையே முத்திக்கு வழி என்று அருள் நூல்கள் கூறும்.)*

என்றும், **திருவுந்தியார்,**

இரவுபகல் இல்லா இன்பவெளி ஊடே
விரவி விரவிநின்று உந்தீபற
விரைய விரையநின்று உந்தீபற

*(அறிவும், அறியாமையுமாகிய நிலையிலிருந்து விடுபட்டு இறைவனின் திருவருளைக் கூட வேண்டும்.)*

என்றும், **சிவஞானசித்தியார்,**

அறியாமை அறிவு அகற்றி அறிவின் உள்ளே
அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து
குறியாதே குறித்து அந்தக்கரணங்களோடும்
கூடாதே வாடாதே குழைந்து இருப்பை ஆகில்
பிறியாத சிவன்தானே பிறிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதம்எலாம் தானாய்த் தோன்றி
நெறியாலே அவைஎல்லாம் அல்ல வாகி
நின்றுஎன்றும் தோன்றிடுவன் நிர்ஆதாரனாயே

*(இருவகைப் பாசங்கள், அந்தக் கரணங்கள் இவை இறைவன் அருளால் நீங்கும்.)*

என்றும், **திருவம்மானை,**

**உற்ற மறப்புநினைப்பு அற்றேன் காண்அம்மானை**
**ஓவாத சித்தத்தே ஒத்தேன் காண்அம்மானை**

*(நினைப்பும் மறப்பும் நீங்கினால் நிறைவான சித்தத்தை அடையலாம்.)*

என்றும், **ஒழிவில் ஒடுக்கம்,**

**அறிவாய்இரீர் மயக்கம் ஆகாது அசையில்**
**விறிசாய் விடாதோ விகற்பம் - பிறியாத்**
**தராசுநிலை போலே சமாதிவரின் ஞான**
**இராசன்நுமக்கு ஒப்பார் எவர்**

*(தராசு முள் போன்று மயக்கமும், விகற்பகமும் அன்றி அசைவற்று இருந்தால் சமாதி நிலை அடையலாம்)*

என்றும், **மோகவதைப்பரணி,**

**ஆங்கு உணராமையும் உணர்வும் ஆகியகோள் அறஇருந்து**
**தூங்கினர்காண் சுகம் அடைவார் சும்மேலோ சும்முலக்காய்**

*(உணர்வும் உணராமையும் அற்ற இடம் சுகம் தரும்)*

அன்றியும்,

**நீங்குதல் இல்லா அறிவே நிகழ்ந்தக்கால் விழிப்பதுவும்**
**தூங்குதலும் உண்டாமோ சும்மேலோ சும்முலக்காய்?**

*(நீங்குதல் இல்லாத அறிவு இன்பமும் துன்பமும் அற்ற உணர்வினை தரும்)*

அன்றியும்,

**ஒழித்தே உள்ளம் உணர்வுஅடைய ஒழியா**
**ஒருவன் வரும்அளவும்**
**விழித்தே உறங்கும் விளங்கிழையீர்**
**மேவும்கபாடம் திறமினோ?**

*(எங்கும் நீக்கமற நிற்கும் இறைவன் வருமளவும் அறிதுயில் கொள்ளும் பெண்களே! உங்கள் கதவுகளைத் திறவுங்கள்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

அந்தப் பரத்தோ டிரண்டற் றயிக்கமா
மந்தநன் னிட்டையே யுந்தீபற
அத்து விதவீடென் றுந்தீபற 65

*அந்தப் பரத்தோடு இரண்டற்று அயிக்கமாம்*
*அந்த நன்னிட்டையே உந்தீபற*
*அத்துவித வீடுஎன்று உந்தீபற*

என்பது, அங்ஙனம் சுத்த அவத்தையில் தோன்றிய பரத்துடன் காண்பானும் காட்சியும் இன்றி வேறறக் கலந்து நிற்கும் அந்தச் சிறப்பினையுடைய நிட்டையே அத்துவிதமாகிய முத்தியெனப்படும் என்றவாறு.

இதற்கு உதாரணம், **திருமந்திரம்,**

குறியாக் குறியினில் கூடாத கூட்டத்து
அறியா அறிவில் அவிழ்ந்துஏக சித்த
நெறியாம் பரானந்தி நீடுஅருள் ஒன்றும்
செறியாச் செறிவைச் சிவம்என லாமே

*(அவனறிவே கண்ணாகக் கொண்டு மேலான நந்தியினது அருளுடன் ஒன்றுபட்டு, தான் என ஒன்றின்றிக் கலந்திருத்தலே சிவத்தன்மை எய்தலாகும்.)*

அன்றியும்,

நித்தம் பரனோடு உயிருற்று நீள்மனம்
சத்த முதல்ஐந்து தத்துவம் தான்நீங்கிச்
சுத்தம் அசுத்தம் தொடரா வகைநினைந்து
அத்தன் அவன்பால் அடைதல் சித்தாந்தமே

*(உயிர் இடைவிடாது சிவனோடு பொருந்தி மனம் ஐம்புலன்களின் உண்மையை அறிந்து, சுத்த அசுத்த மாயைகள் பற்றாவகை எண்ணி, முழுமுதற்பொருளை அடைதல் சித்தாந்த நெறியாகும்)*

என்றும், **கந்தர் அலங்காரம்,**

போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பும் உள்ளும்
வாக்கும் வடிவும் முடிவும் இல்லா ஒன்று வந்துவந்து

தாக்கும் மனோலயம் தானே தரும்எனைத் தன்வசத்தே
ஆக்கும் அறுமுகவா சொல் ஒணாது இந்த ஆனந்தமே

*(இன்ப துன்பங்கள் அலைபோல் வந்து தாக்குகிறது. முருகப் பெருமான் 'யான்' எனும் உணர்வினை அழித்து இன்பநிலை அளிக்கின்றார்.)*

என்றும், **கந்தர் அனுபூதி,**

ஆனா அமுதே அயில்வேல் அரசே
ஞானா கரனே நவிலத் தகுமோ
யான்ஆகிய என்னை விழுங்கி வெறும்
தானாய் நிலை நின்றது தற்பரமே

*(யான் எனும் செருக்குடன் இருந்த உயிரை முருகப் பெருமான் பரமாகி நின்ற நிலையை வழங்குகின்றான்)*

அன்றியும்,

வானோ புனல்பார் கனல் மாருதமோ
ஞானோ தயமோ நவில்நான் மறையோ
யானோ மனமோ எனைஆண்ட இடம்
தானோ பொருளாவது சண் முகனே?

*(ஆகாயம், நீர், ஐம்பூதங்கள், ஞானத்தோற்றம், நான்மறைகள், மனம் என்ற எதுவும் மெய்ப்பொருள் அல்ல. இறைவனே மெய்ப்பொருள் ஆனவன்.)*

என்றும், **திருவாய்மொழி,**

நன்றாய் ஞானம் கடந்துபோய்
நல்இந்திரியம் எல்லாம் ஈர்த்து
ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும்பாழ்
உலப்பில் அதனை உணர்ந்து உணர்ந்து
சென்றுஆங்கு இன்பதுன்பங்கள் செற்றுக்
களைந்து பசையற்றால்
அன்றே அப்போதே வீடுஅதுவே
வீடு வீடாமே

*(உயிர் ஐம்புலன் இன்பங்களையும் கடக்க வேண்டும். இறைவன் உயிரை விட வேறுபட்டது என உணர்ந்து பற்றுக்கள் நீங்கப் பெற்றால் உயிர் வீடுபெறும்)*

என்றும், **பகவத்கீதை**

யாது ஒன்று இந்தப் புலன்அறியா அளவில்
இன்பமாய் இருக்கும்
யாதுஒன்றினைச் சென்று அடைந்தோர்கள்
பின்னை அதனின் இரண்டுஆகார்
யாது ஒன்றினைப் பெற்றவர் இதனின் மிக்கது
ஒப்புஉண்டு என்னார்
யாதுஒன்று இந்த அறிவிற்கே அறிவாய்
நிற்கும் அதில்நின்றோர்

*(எப்பொருளினைச் சென்று அடைந்தவர்கள் அதனில் இரண்டாகாது ஒன்றாகவே நிற்பர். அப்பொருளுக்கு ஒப்பானது மிக்கது ஒன்று உண்டு என்று எண்ணமாட்டார்கள்)*

என்றும், **பிரமகீதை,**

சுழுத்தி அதனில்துயர் துவக்கும் உடல்தன்னின்று
எழுப்பியுள தன்வடிவினால் இறையை எய்துற்று
அழுத்தமுற யாவன் அதுவாகும் அவன்எங்கும்
முழுத்தியுள தற்பரம் ஆகி முடிவுற்றான்

*(சுழுத்தியில் நிற்கும் பொழுது உயிர், உடல் துயர் உறும். துரியாதீதத்திற்கு உயிர் செல்லும் பொழுது இறைவடிவு எய்தும். உயிர் எதனை அழுத்தமாக நினைக்கிறதோ அதுவாகும்.)*

என்றும், **பிரபுலிங்கலீலை,**

ஞேய ஞான ஞாதிரு எனும்இவை பலநிற்கும்
ஆயின் வேறறு முத்திஅன்று அதுசகமாம் என்று
ஏயுமாறு இதுஅது எனும்சுட்டிலா இயல்பை
மாயை மாறிய தேவிபால் அருளினன் வள்ளல்

*(அறியப்படும் பொருள், அறிவு, அறிபவன் என வேறுபட்டு நிற்கும் நிலை உலகியல் ஆகுமே தவிர முத்தி நிலை ஆகாது.)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

முடிவுகனவு அஞ்ஞானம் இல்லாநீள்
துயில்அவாம் உம்மை ஆகி

அடர்தரு ஞாதிரு ஞானஞேயம் எழுந்து
ஒடுங்கும் இடம்அதுவே ஆகும்
திடவிசும்புஅன் றாய்இருந்தும் விசும்பான
நிலைஅதுவாம் சித்தம் புந்தி
படர்மனம் போய்த் தாவரம் போல் பெறும் உள்ளறிவு
ஒப்பாம் அப்பரம ரூபம்

*(அறியப்படுபொருள், அறிவு, அறிபவன் எனும் மும்மை நிலை நீங்கி, மனம் புத்தி சித்தம் ஆகிய பாச அறிவு நீங்கப்பெற்று மெய்யறிவு பெறின் ஒப்பற்ற பரமரூபம் வெளிப்படும்.)*

என்றும், **சிவப்பிரகாசம்,**

பொற்புறு கருவி யாவும் புணராமே அறிவிலாமைச்
சொற்பெறும் அதீதம் வந்து தோன்றாமே தோன்றி நின்ற
சிற்பரம் அதனால் உள்ளச் செயல் அறுத்திட உதிக்கும்
தற்பரம் ஆகி நிற்றல் சாக்கிர அதீதம் தானே

*(தன்முனைப்பு ஒழியத் தோன்றும் சிவபரம்பொருளொடு நிற்றல் நனவில் மேல்நிலை எனப்படும்)*

என்றும், **சிவநெறிப் பிரகாசம்,**

ஞானமுடன் ஞேய ஞாதிரு என்னும் மூன்றும்
நாடாமல் தான் அதுவாய் நண்ணியிடல் தானே
ஊனமிலா உன்மனைக்கு மேலான முத்தி
உற்றதுநின் மலதுரிய அதீதம்என உரைப்பர்
ஆனஇதே சுத்தமா முத்தியாகும்
அன்றிவேறு உரைக்கும் முத்திஅவைகள் எல்லாம்
ஈனமா முத்தியது தன்னை எல்லாம்
இயம்புவாம் அறிந்து அதனை இசையா வாறே?

*(அறிவு, அறியப்படுபொருள், அறிபவன் எனும் மூன்றையும் பிரித்துக் காணாமல் தானதுவாய் பொருந்தியிருப்பது குற்றமிலா முத்தி என்பர். இது சுத்தமா முத்தியாகும். ஏனையன எல்லாம் ஈனமாமுத்தியாகும்)*

என்றும், **திருவம்மானை,**

சத்திய மானது சத்தே காண்அம்மானை
தற்போதம் போன இடம் தற்பரமே அம்மானை

*(உண்மை எக்காலத்தும் நிலைத்து நிற்பது. தான் எனும் உணர்வற்ற இடம்இறைநிலை ஆகும்)*

என்றும், **சிவானுபூதி விளக்கம்,**

எரிசுத்தம் கொண்ட இரும்புபோல் எங்கும்
பரிசுத்தம் ஆன பராபரமே ஆனதே

*(நெருப்பிலிட்ட இரும்பு தூய்மையாக இருப்பது போன்று இறையருளால் தூய்மை பெற்ற உயிரே மேலான நிலையை அடையும்)*

என்றும், **நெஞ்சொடு மகிழ்தல்,**

நீரொடுதண் ணாலிவிண்டு நீரான வாறேபோல்
ஊரொடுபேர் இல்லானோடு ஒன்றினாய் நெஞ்சமே

*(நீரொடு ஆலங்கட்டி,சேர்ந்து நீரானது போன்று ஊர்,பேர் இல்லாத இறைவனோடு நெஞ்சம் ஒன்றியது)*

என்றும், **சிவானந்தமாலை,**

மித்தைஉடல் கட்டுஅறுத்து மெய்அருளாய் மெய்ஒழிக்கும்
தத்துவமும் கேவலமும் சார்வுஅகற்றிச் சுத்தத்
தனியாகித் தானும்போய்த் தற்பரமாய் விட்டால்
செனியான் இதுசத் தியம்

*(இழிந்த உடற்கட்டு அறுத்து மெய்யறிவு வழி நின்று தத்துவ சார்வும் கேவலநிலையும், நீங்கி சுத்த நிலை அடைந்த நிலையில் தானும் நீங்கி, தற்பரமாய் விட்டபின் பிறப்பு இல்லை.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

எம்மதத் தோரெவ் வகைநிட்டை சொல்லினுஞ்
சம்மத மேயெமக் குந்தீபற
தற்போத மாய்க்குமே லுந்தீபற 66

*எம்மதத் தோர்எவ் வகைநிட்டை சொல்லினும்*
*சம்மதமே எமக்கு உந்தீபற*
*தற்போத மாய்க்குமேல் உந்தீபற*

என்பது, இங்ஙனம் கூறியது ஒழிந்து பின்னும் [1]நானாவிதமாக முத்தி நிட்டைக் கூறுவாரும் உளர். யாதொரு சமயி கூறிய யாதொரு நிட்டையேனும் ஆத்மாவினது தற்போதத்தைக் கெடுத்துச் சிவத்தோடு இரண்டறக் கலப்பிக்குமாயின் அந்நிட்டைகளும் எமக்கு அவிரோதமே என்றவாறு.

இதற்கு உதாரணம், **சிவானந்தமாலை**

நாலாய நற்பதமும் நல்ல அவுத்திரியும்
மாலாய தந்திரமும் மந்திரமும் - மேலாய
சிற்போத உண்மை தெரிசனமும் எல்லாம்உன்
தற்போத நட்டம் எழத்தான்

*(சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் ஆகிய பரமுத்திகளும் ஔத்திரிய தீக்கையும் மந்திரமும் தந்திரமும் மெய்ஞானக் காட்சியும் ஆகிய இவை எல்லாமும் தற்போதம் ஒழிந்தால் கிட்டும்)*

என்றும், **வீராகமம்,**

வேத ஆகமமும் தீக்கை விதிகளும் சரியை ஆதி
மேதகு பாத நான்கும் மிகுபத முத்தி நான்கும்
தீதின் மாணவக மற்றும் செப்பிய அனைத்தும் உன்தன்
போத நீறாக நாதன் புந்திசெய்து அமைத்த வாமே

*(மறைகள் ஆகமங்கள் தீக்கை விதிகள் சரியை முதலியன, பதமுத்தி, பரமுத்தி என்னும் நான்கும் ஆகியன தற்போதத்தை நீக்குவதற்கு இறைவன் அருளியனவாம்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

நானற்ற போதத்தே நானான முத்தியை
நாளெங்ங னஞ்சொல்வ துந்தீபற
நான்மறைக் கெட்டாதென் றுந்தீபற 67

*நான்அற்ற போதத்தே நான்ஆன முத்தியை*
*நான் எங்ஙனம் சொல்வது உந்தீபற*
*நான்மறைக்கு எட்டாதுஎன்று உந்தீபற*

என்பது, காண்பானும் காட்சியும் இறந்து அத்துவிதமாகிய

1 - நால் விதமாக

[1]பரசுக அதீதத்தை இவ்வண்ணம் இருந்தது என்று இங்ஙனம் கூறுவது எங்ஙனம் அந்நிலை [2]வேதஅதீதம் ஆதலின் என்றவாறு.

இதற்கு உதாரணம், **திருமந்திரம்,**

முகத்துக்கண் கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்துக்கண் கொண்டு பார்ப்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோடு ஆடிய
சுகத்தைச் சொல்என்றால் சொல்லுமாறு எங்ஙனே

*(அறிவுக் கண்ணால் காணப்படும் மெய்ப்பொருளை முகக்கண்ணால் காணலாம் என்று கூறுதல் தகாது. அகக்கண் கொண்டு பார்ப்பதே ஆனந்தமாகும்).*

எனறும், **தேவாரம்,**

மைப்படிந்த கண்ணாளும் தானும் கச்சி மயானத்தான்
வார்சடையான் என்னின் அல்லால்
ஒப்புடையன் அல்லன் ஒருவன்அல்லன் ஓரூரன்
அல்லன் ஓர்உருவன் இல்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும் அவனருளே
கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன்
என்று எழுதிக் காட்ட ஒணாதே

*(இறைவனின் திருவருளைக் கண்ணாகப் பெற்றுக் காணில் அவருடைய இயல்புகளைக் காணலாமே என்று மற்றைப் பொருள்கள் போல் இவ்வகையன் இந்நிறத்தன் இன்னவடிவினன் என்று எடுத்துக்காட்ட இயலாது)*

என்றும், **திருவாய்மொழி,**

நின்ற ஒன்றை உணர்ந்தேனுக்கு அதனுள் நேர்மை அதுஇதுஎன்று
ஒன்றும் ஒருவர்க்கு உணரலாகாது உணர்ந்து மேலும் காண்பரிது
சென்று சென்று பரம்பரமா யாதும் இன்றித் தேய்ந்தற்று
நன்று தீதுஎன்று அறிவுஅரிதாய் நன்றாய் ஞானம் கடந்ததே

*(உயிர் ஒப்பற்றது. உயிர், இறைவனின் தன்மை என்று அறியாதவர்கள் எத்துணை ஞானம் பெறினும் உள்ளபடி அறியாதவர்களே. மேன்மேலும்*

---

*1 - பேரின்பத்தின் மேல்நிலை, 2 - மறைகள் கடந்த*

*ஒன்று உயர்ந்ததாய் நுண்ணியதாய், தொடர்பற்றதாய் நன்மை தீமை என்று பிரிக்க இயலாததாய் பொறிகளுக்கு எட்டாததாய் உள்ளது)*

என்றும், **பிரமகீதை,**

ஒழிவிலாப் பரமயோகியர் அனுபவம் உள்ளவாறு
உரைத்திட எனக்கோர்
வழிபெறேன் நெடுமால் மகேசன் மாமுனிவர்
வானவர் உரைத்திட மாட்டார்
விழிமிகும் சிவனால் விஞ்சையாஞ் சிவையால்
விளம்பவும் படாதது விளம்பு
மொழிஎலாம் வந்து மோனபாவத்தே
முடியும் அந்நிலம் இதே முடிவு

*(யோகியர் பெற்ற சிவானுபவத்தை உள்ளவாறு உரைக்க எனக்கு வழியில்லை. நெடுமால், மகேசன், மாமுனிவர், வானவர், சிவன், உமை உரைத்திடார். அனுபவ மோன ஞானத்தால் தான் அறிய முடியும்)*

என்றும், **நித்தியானந்த தரிசனம்,**

மோகித்த காமத்தின்கண் முயற்சியில் சுகமும் தண்ணீர்
தாகித்த தாகந்தான் தரிசனம் உந்தாகித்தோன் அறிவது அல்லால்
ஏகத்த பொருள்அதாகி இடைவிடாது அமுதம் ஊறும்
போகத்தை நுகர்வது அல்லால் போதத்தால் புகலலாமோ

*(காமச்சுவையும் தண்ணீர் வேட்கையும் அவற்றை அனுபவித்தவர்களே உணரமுடியுமன்றி, அறிவிக்க இயலாது)*

என்றும், **சிவானந்த மாலை,**

சொல்லுவான் சுட்டுவான் போனசுக அதீதத்தைச்
சொல்லுவாய் என்றால்என் சொல்லுகேன் புல்லிவிடா
அண்மைக்கும் சேய்மைக்கும் அப்பாலாம் அத்துவித
உண்மைக்கோர் உத்திரம் உண்டோ

*(அண்மைக்கும் சேய்மைக்கும் அப்பாலாய் இருக்கும் அத்துவித உண்மையை உரைக்க இயலாது)*

என்றும், **திருவம்மானை,**

உண்டுதேக்கிட்டு எங்கும் ஒன்றானேன் அம்மானை
உண்மைக்குஓர் உத்திரந்தான் இல்லைகாண் அம்மானை

*(இறைவன் திருவருளில் திளைத்து ஒன்றான உண்மையினை அறிவிக்க இயலாது)*

என்றும், **ஒழிவில் ஒடுக்கம்,**

சத்தாதி தத்துவம்போய்த் தானும்எதிரும் கழன்றால்
சித்தாந்த வேதாந்தச் செம்மையிலே - முத்தி
அநிர்வசனம் இன்பம் அதீதம் எனில் ஆங்கே
பினம் இடுதல் கன்மம் பிளாய்

*(தத்துவங்களையும் தான் எனும் உணர்வையும் நீங்கி நிற்கும் இன்பத்தை சித்தாந்தம், வேதாந்தம் முதலான தத்துவங்களும் உரைக்க இயலாது.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

பெத்தர்க் கொருசிவ மின்மையிற் பேரருண்
முத்தர்க் குலகுமின் றுந்தீபற
முழுதுஞ் சிவமாத லுந்தீபற 68

*பெத்தர்க்கு ஒருசிவம் இன்மையில் பேரருள்*
*முத்தர்க்கு உலகும் இன்று உந்தீபற*
*முழுதும் சிவமாதல் உந்தீபற*

என்பது, பெத்தர் ஆயினோர்க்கு உலகமே அன்றிச் சிவம் தோன்றாது; அதுபோலும் பேரருளினை நீங்காத முத்தர் ஆயினோர்க்குச் சிவமே அன்றி உலகம் தோன்றாது; அச்சிவத்தை அன்றி வேறொரு பொருளும் இன்மையால் என்றவாறு.

இதற்கு பிரமாணம், **பிரமகீதை,**

தன்னில் வேறிலா மையில்பர முத்தியில்
  தனது புத்தியினாலே
அன்னியங்களாய்த் தோற்றும் ஆபாசர்க்கும்
  பரபதம் அறிகின்றான்
முன்னம் எப்படி மூடமாம் தசையில்தன்
  மோகத்தால் எலாம்பந்தம்
என்ன உற்றனன் முத்தியும் அப்பரிசு
  இருக்கும் அதுஇயல் போகம்

*(உயிர் முத்திக்கு முன்பு மோகத்தால் பந்தத்தை அறிந்தது போன்று பரமுத்தியில் பரம்பொருளினை அறியும்)*

என்றும், **சிவப்பிரகாசம்,**

அகம்புறம் எனஇரண்டால் அருச்சனை புரியும்இந்தச்
சகம்தனில் இரண்டும்இன்றித் தமோமயம் ஆகி எல்லாம்
நிகழ்ந்திட மகிழ்ந்துவாழும் நீர்மையார்போல ஞானம்
திகழ்ந்துஅகம் புறம்எனாத செம்மையோர் நன்மையோரே

*(சீவன் முத்தர், அகம் புறம் என்று பிரித்தறியாது சிவபரம் பொருள் ஒன்றிலேயே அழுந்தி பேரின்பத்தில் திளைப்பர்)*

என்றும், **அறிவானந்த சித்தியார்,**

பெத்தனைச் சேதிக்க என்றே மொழிய இப்பேருலகம்
இத்தனையும் இறும்என்று தனக்குஇல்லை எனும் அதுபோன்று
அத்தன்சொல் ஒன்றில் எனைமாயச் சேதிக்க அன்றுஎனக்குச்
சித்தம் அயலுலகு எல்லாம் இறந்ததுஎன் செப்புவதே

*(உயிர் பெத்தநிலையில் சிவத்தைக் காணாது இறையருளால் முத்தியில் சிவத்தையன்றி உலகத்தைக் காணாது.)*

என்றும், **சிவானந்த மாலை,**

நின்செயல்அற்று எப்போதும் நம்முடனே நிற்குநிலை
உன்செயல்அற்று ஓதியிட உற்றுக்கேள் - என்சுவடுஅங்கு
ஒன்றும்அற ஒன்றுஆகி ஒத்துஉடனால் பந்தத்தில்
நின்றதுபோல் முத்தியிலும் நில்

*(உயிர் பெத்த நிலையில் இறை சுவடு சிறிதும் இன்றி தனது செயலாகவே நின்றது போன்று முத்தியில் உயிர் தனது செயலற்று இறைசெயலாக நிற்கும்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

**எல்லாஞ் சிவமேயென் றெண்ணினு நின்போத**
**மல்லாலஃ துண்மையன் றுந்தீபற**
**ஆங்கது நீங்கிடென் றுந்தீபற** 69

*எல்லாம் சிவமேஎன்று எண்ணினும் நின்போதம்*
*அல்லால் அஃது உண்மைஅன்று உந்தீபற*
*ஆங்குஅது நீங்கிடுஎன்று உந்தீபற*

என்பது, உள இல என்பன எல்லாப் பொருள்களும் சிவமே எனக் காணும் இடத்தும் காண்பதும் நின்போதம் ஆதலின் அதுவும் உண்மையன்று; எவ்விதத்தேனும் நின்போதம் எழாமல் அடக்குதலே உண்மைநிட்டை என்றவாறு.

ஆங்கதும் என்ற உம்மையால் நானாவிதமாகி எழாநிற்கும் ஆத்ம போதம் எல்லாம் அடங்குக என்பதாயிற்று.

இதற்கு உதாரணம், **சிவானந்த மாலை,**

பற்றில்இழப்பாய் அகலும் பார்க்கில்இவன் உண்டாகும்
முற்றுஉணரில் வேறாகும் ஒன்றும் எனில் - முற்றும்
பிறியாப் பொருள்பிறியும் பேசும்உரைக்கு எட்டாக்
குறியாக் குறியாம் குறி

*(உலகப் பொருள்களைப் பற்றும் பொழுது மெய்யறிவு, அகன்று யான் எனும் பற்று உண்டாகும். மெய் அறிவு உள்ள காலத்தில் வேறு வேறானவை ஒன்றாகத் தோன்றும்)*

அன்றியும்,

கண்ட அறிவு கடமே எனில் அதமம்
கண்டு அழித்துக் காணாமை காணும் அது - கொண்டுஉணரின்
மத்திமமே அந்தவகுப்பு ஒன்றும் காணாதது
உத்தமமாம் என்றே உணர்

*(சுட்டறிவினால் பகுத்துக் காணாது மெய் அறிவால் ஒன்றே என உணர்வது சிறப்பு ஆகும்)*

என்றும், **ஒழிவில்ஒடுக்கம்,**

கட்டிய நாண்விட்டாலும் [1]கந்துஅகலாக் கன்றுகளைத்
தட்டிப் புறப்படுத்தும் தன்மைபோல் - ஒட்டுஒழித்து
நின்றால்போல் நீசிவமாய் நில்என்று நீக்கம்அறுத்து
ஒன்றாக்கில்ஒன்று இரண்டாகும்

*1 - கட்டுத்தறி*

*(தும்பை விடினும் தறியை விட்டு நீங்காத கன்று போன்று பற்றுக்கள் நீங்கி சிவத்துடன் ஒன்றாக்கினாலும் உயிர் தனித்து நிற்கும்)*

அன்றியும்,

குரங்கை நினையாது இரும்என்று கூறத்
திரும்பி அதுவே தியானம் - வரும்கதைபோல்
நீசிவமாய் நில்என்றாய் நீங்கிஅதுவா நினைந்து
[1]மாய்வை அதுவன்றோ மலம்

*(சிவமயமாய் நிற்பது அறியாது வருந்துவாய், வருந்தச் செய்வது மலம் ஆகும்.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

பாவனா தீத நினைவின்மை யுண்டெனிற்
பாவனை யாகுமென் றுந்தீபற
பன்னூற் கருத்துமீ துந்தீபற

*பாவன அதீத நினைவின்மை உண்டெனில்*
*பாவனை ஆகும்என்று உந்தீபற*
*பன்னூல் கருத்தும்ஈது உந்தீபற*

என்பது, பாவனைக்கு அதீதமாகிய உண்மைநிட்டை யாதென்னில் உன்னுடைய நினைவுஇறந்து நின்றஇடம். அஃது ஒரு சற்று உண்டேனும் அதுவே பாவனை என்று சொல்லப்படும். எல்லா நூல்களினது துணிவும் இதுவே என்றவாறு.

இதற்குப் பிரமாணம், **சிவப்பிரகாசம்**

பாவிக்கின் மனாதி வேண்டும் பயனிலை கரணநீத்துப்
பாவிப்பன் என்னில் என்னை பழுதுள பாவகத்தால்
பாவிக்க ஒண்ணான் என்று பாவிப்பன் என்னில் நீயென்
பாவிக்க வேண்டா ஆண்ட பரன்அருள் பற்றினோர்க்கே

*(பரம்பொருளின் அருள் பெற்றவர்க்குப் பாவனையால் பாவிக்க வேண்டாம். அவ்வருளே பரம்பொருளை அடையச் செய்யும்)*

என்றும், **ஒழிவில் ஒடுக்கம்,**

---

1 - வருந்துவை

[1]குறங்கு குத்திக்கொண்டு குரோக்கை கத்திக்கூட்டை
மறந்தழைத்தால் தூக்கம் வருமோ - வெறும்கெடுவீர்
தன்னை அழித்துஎழுந்த சச்சிதா னந்தத்தை
உன்னில் ஒழித்துவிடா தோ

*(உயிருக்குள் ஒழிந்திருக்கும் சச்சிதானந்தத்தை ஒழித்து விடாமல் பாதுகாக்க வேண்டும்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

ஒன்றிய கேவல மென்றே யுனத்தகுந்
துன்றிரு ளொன்றிலா துந்தீபற
சுத்த மிதாயதென் றுந்தீபற 71

*ஒன்றிய கேவலம் என்றே உனத்தகும்*
*துன்று இருள் ஒன்று இலாது உந்தீபற*
*சுத்தம் இதுஆயது என்று உந்தீபற*

என்பது, சகலகரணங்களும், ஆத்மபோதமும் அடங்கினவிடத்துத் தோன்றா நிற்கும் சுத்த அவத்தையும் உயிர்களுக்குச் சகசமாயுள்ள கேவல அவத்தை என்றே எண்ணப்படும். அக்கேவலத்திற்கு உண்டாகிய பேரிருள் ஒன்றும் இன்மையின் இது சுத்த அவத்தை என்னும் பேருடைத்து என்றவாறு.

இதற்குப் பிரமாணம், **கந்தர் அலங்காரம்,**

வரைஅற்று அவுணர் சிரம்அற்று வாரிதி அற்றச்செற்ற
புரைஅற்ற வேலவன் போதித்தவா பஞ்சபூதமும்அற்று
உரைஅற்று உணர்வுஅற்று உடல்அற்று உயிர்அற்று உபாயமற்றுக்
கரைஅற்று இருள்அற்று எனதுஅற்று இருக்கும் அக்காட்சியதே

*(புறப்பற்று அகன்று சமாதி நிலையின் அருங்காட்சியானது தன்னை இழந்த நலமாக அமைந்தது)*

என்றும், **மோகவதைப்பரணி,**

யாதுமாய் அறிவுஇறந்த இருள்ஒன்றும் இலதே
யாதுமாய் அறிவுஇறந்த ஒளிஒன்றும் உளதே

---

*1 - துடை*

*(அறிவினைக் கடந்த இருள் இல்லை. அறிவினைக் கடந்த ஒளி உண்டு)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

வாங்கிப் பொறிஐந்தும் என்ற செய்யுள் தொடங்கி இச்செய்யுள் காறும் உண்மை நிட்டை கூறினார் எனக் கொள்க.

இங்ஙனம் கூறிய உண்மை நிட்டைக்குள் இருந்தும் [1]துவிதபாவனை தோன்றுமாகில் அஃது ஒழிந்து முன்னிலை கூடுதற்கு மேலும் ஓர் உபாய நிட்டை கூறுகின்றார்.

பாவனா தீதம் பதியா விடத்தேக
பாவனை பற்றிநின் றுந்தீபற
பழுத்தா லொழித்திடென் றுந்தீபற 72

*பாவன அதீதம் பதியா இடத்துஏக*
*பாவனை பற்றிநின்று உந்தீபற*
*பழுத்தால் ஒழித்திடுஎன்று உந்தீபற*

என்பது, முற்கூறிய சகசநிட்டை பதியாவிடில் அங்ஙனம் தோன்றிய நினைவு அனேக பாவனைகளைப் பற்றி மயங்காமல் எல்லாப் பாவனைகளும் தன்னுள் அடங்குவதாகிய ஓர் ஏக பாவனையைப் பற்றி நின்று அப்பாவனை முதிர்ந்து மற்றொரு பாவனையும் தோன்றாத இடத்து அதனையும் மெள்ள மெள்ள நீக்கவே முன்கூறிய உண்மை நிட்டைக் கூடும் என்றவாறு.

பழுத்தால் ஒழித்திடு என்றது மேற்கூறுவனவாகிய உபாய நிட்டைகளுக்கும் ஒக்குமெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், **திருவாசகம்,**

அளவிலாப் பாவகத்தால் அமுக்குஉண்டு இங்குஅறிவின்றி
விளைவுஒன்றும் அறியாதே வெறுவியனாய் கிடப்பேனுக்கு
அளவிலா ஆனந்தம் அளித்துஎன்னை ஆண்டானைக்கு
அளவிலா வானவரும் தொழும்தில்லை கண்டேனே

*(எல்லையில்லாத எண்ணங்களால் அழுந்தி அறிவற்றிருந்தால் தில்லை இறைவனைக் காணலாம்)*

1 - இரண்டு அற்ற நிலை

என்றும், **ஞானவாசிட்டம்,**

பொய் அதாம்உயற் கொம்பினைப் பற்றவும்
போக்கவும் நினைப்பார்ஆர்
ஐயனே பரபோத பூரணத்திலே
அயல்ஒன்று வருமாறு என்
பொய்யது ஆகிய அனேக பாவனையினைப்
பொருந்தல்புன் பிறப்பாகும்
ஐயம் இன்றிய ஏகபாவனையினில்
அழுந்துதல் பவம்தீர்தல்

*(பொய்யாகிய பல பாவனையை அடைதல் அற்பப்பிறவியாகும். ஐயமில்லாத ஒன்றான பாவனையில் அமிழுதலே பிறவி நீக்குதலாம்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

பழுத்தால் ஒழித்திடு என்பதற்குப் பிரமாணம், **திருவள்ளுவர்,**

சார்பு உணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றுஅழித்துச்
சார்தரா சார்தரு நோய்

*(பொருள்களின் தன்மைகளை மெய்யுணர்வின் மூலம் அறிந்து அவற்றின் மேல் பற்றின்றி நடந்தால் துன்பங்கள் சாரமாட்டா)*

என்றும், **சிவதருமோத்தரம்,**

நீங்கினர் இந்தஉண்மை நிலையினை நெஞ்சம்தன்னில்
தாங்குக சகளம் தன்னைச் சங்கரன் தன்னை உன்னி
நீங்குக சகளம் தன்னை முன்னையில் நிலையில் நீடித்
தூங்குக திரியில் பின்னும் சகளமா தரிக்கை சூழ்ந்தே

*(சமாதியை விட்டு நீங்கும்போது, உருவநிலையில் சிவனை உள்ளத்தில் தியானம் செய்க. தியானத்தை விட்டு நீங்கினால் முன்போல் சமாதியைப் புரிக. அதனை நீக்கினவிடத்துப் பின்பும் திருவுருவைத் தியானம் செய்க)*

என்றும், **திருக்களிற்றுப்படியார்,**

பற்றினுள் பற்றைக் துடைப்பதுஒரு பற்றுஅறிந்து
பற்றிப் பரிந்துஇருந்து பார்க்கின்ற - பற்றுஅதனில்

பற்றுவிடில் அந்நிலையே தானே பரமாகும்
அற்றம்இது சொன்னேன் அறி

*(உலகப் பற்றினை நீக்குவதற்கு உரிய துணை திருவடி ஞானமே என்பதனை அறிந்து உயர் பொருளில் பற்றுக் கொள்ள வேண்டும்.)*

அன்றியும்,

சார்புஉணர்ந்து சார்புகெட ஒழுகின் என்றமையால்
சார்புஉணர்வு தானே தியானமுமாம் - சார்பு
கெடஒழுகின் நல்ல சமாதியும் ஆங்குஏதப்
படவருவது இல்லைவினைப் பற்று

*(உலகியல் சார்புகளை ஒழித்து உண்மை அறிவது தியானமாகும். உலகியல் சார்பு நீங்கி தன்முனைப்பு அற்றுப் போனால் அது உயர் சமாதியாகும். இந்நிலை அடைந்தோர்க்கு வினைத்துன்பம் இல்லை)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

ஏகபாவனை இது என்று மேற்கூறுகின்றார்.

பாராதி யெட்டுமப் பாலுமெப் பாலுமா
யோர்சோதி யேநின்ற துந்தீபற
உன்னுவே றில்லையென் றுந்தீபற 73

*பார்ஆதி எட்டும் அப்பாலும் எப்பாலுமாய்*
*ஓர்சோதியே நின்றது உந்தீபற*
*உன்னுவேறு இல்லைஎன்று உந்தீபற*

என்பது, [1]பிருதிவியாதி அட்டமூர்த்தமும் அவற்றினுக்குப் பரமாகி உள்ளனவும் பின்னும் வாக்கு மனத்திற்கு எட்டுவனவும் எட்டாதனவுமாய் விரிந்து நிற்பது ஒரு சோதியே வேறொரு பொருளும் இல்லை என்று பாவனை பண்ணுவாய் என்றவாறு.

இதற்குப் பிரமாணம், **திருமந்திரம்,**

தானே கடன்மலை ஆதியுமாய் நிற்கும்
தானே திசையொடு தேவருமாய் நிற்கும்
தானே உடல்உயிர் தத்துவமாய் நிற்கும்
தானே உலகில் தலைவனும் ஆமே

1 - நிலம் முதலான எண்திரு உரு

*(சிவபெருமான் கடலும் மலையும் பத்துத்திசையும் தேவரும் உடலும் உயிரும் ஏனையதத்துவங்களுமாய் உளன்)*

அன்றியும்,

எங்கும் திருமேனி எங்கும் சிவசக்தி
எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம்
எங்கும் சிவமாய் இருத்தலால் எங்குளங்கும்
தங்கும் சிவன்அருள் தன்விளை யாட்டே

*(எங்கும் சிவமாயிருத்தலால் எல்லாச் செயலும் சிவனின் திருவிளையாடல்கள்)*

என்றும், **திருக்கடைக்காப்பு,**

பட்டு இசைந்தஅல்குலாள் பாவையாள்ஓர் பாகமா
ஒட்டு இசைந்தது அன்றியும் உச்சியாள் ஒருத்தியாக்
கொட்டு இசைந்த ஆடலாய் கூடல் ஆலவாயிலாய்
எட்டிசைந்த மூர்த்தியாய் இருந்தவாறுஇது என்னையே

*(மாதொரு பாகனும் கங்கையைக் கொண்டவனும் என்திருவுருவாக உளன்)*

அன்றியும்,

அரிய காட்சியர் ஆய்த்த மதம்கைசேர்
எரியர் ஏறுஉகந்து ஏறுவர் கண்டமும்
கரியர் காடுஉறை வாழ்க்கையர் ஆயினும்
பெரியர் ஆர்அறிவார் அவர் பெற்றியே

*(காட்சிக்கு அரியவராக எரிசேர் அங்கையினராக ஏற்றினராக, பெரியராக இறைவன் காட்சி கொடுக்கின்றான்)*

என்றும், **தேவாரம்,**

அருந்தவர்கள் தொழுதுஏத்தும் அப்பன் தன்னை
அமரர்கள்தம் பெருமானை அரனை மூவா
மருந்து அமரர்க்கு அருள்புரிந்த மைந்தன் தன்னை
மறிகடலும் குலவரையும் மண்ணும் விண்ணும்
திருந்துஒளிய தாரகையும் திசைகள் எட்டும்
திரிசுடர்கள் ஓரிரண்டும் பிறவும் ஆய

பெருந்தகையைப் பெரும்பற்றப் புலி ஊரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே

*(அரிய தவத்தினர் தொழும் இறைவனை, எல்லாப் பொருட்களின் வடிவமாய் உள்ள புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளாகும்)*

அன்றியும்

மாலாகி நான்முகனாய் மாபூதமாய் மருக்கமாய்
அருக்கமாய் மகிழ்வும் ஆகிப்
பாலாகி எண்திசைக்கும் எல்லை ஆகிப்
பரப்பாகிப் பரலோகம் தானே ஆகிப்
பூலோக புவலோக சுவலோ கமாய்ப்
பூதங்களாப் புராணன் தானே ஆகி
ஏலாதன எல்லாம் ஏல்விப் பானாய்
எழும்சுடராய் எம்அடிகள் நின்றவாறே

*(இறைவன் திருமாலாகவும், நான்முகனாகவும் எண்திசையாகவும், மூவுலகமாகவும், பூதங்களாகவும், புராணனாகவும் எழுஞ்சுடராகவும் நின்று விளங்குகின்றான்)*

என்றும், **திருப்பாட்டு**

ஊனாய் உயிர்ஆனாய் உடல்ஆனாய் உலகுஆனாய்
வானாய் நிலன்ஆனாய் கடல்ஆனாய் மலைஆனாய்
தேனார் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர் அருட்துறையுள்
ஆனாய் உனக்கு ஆளாய்இனி அல்லேன் எனலாமே

*(ஊனாய், உயிராய், உலகமாய், வானாய், நிலனாய் நிற்கும் இறைவனுக்கு நான் அடியவன் அல்லேன்)*

அன்றியும்,

கார்க்குன்ற மழையாய்ப் பொழிவானைக்
கலைக்குளலாம் பொருளாய் உடன்கூடிப்
பார்க்கின்ற உயிர்க்குப் பரிந்தானைப்
பகலும் கங்குலுமாகி நின்றானை
ஓர்க்கின்ற செவியைச்சுவை தன்னைஉணரும்
நாவினைக் காண்கின்ற கண்ணை
ஆர்க்கின்ற கடலை மலைதன்னை
ஆரூரானை மறக்கலும் ஆமே

*(மழையாய் கருணை பொழிபவன், உயிர்களுக்கு இரங்குபவன், பகலும் இரவுமாய் நிற்பவன் திருவாரூர் இறைவனை மறவாது வணங்க வேண்டும்)*

என்றும், **திருவாசகம்,**

நிலநீர் நெருப்புஉயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோடு எண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்
உலகுஏழ் எனத்திசைப் பத்துஎனத் தான்ஒருவனுமே
பலவாகி நின்றவா தோள்நோக்கம் ஆடாமோ

*(இறைவன் எண் வகைப் பொருளாகவும், ஏழுலகங்களாகவும், பத்துத் திசைகளாகவும், பல பொருள்களாகவும் நின்றுளான். அவன் பெருமையைப் பாடுவோமாக.)*

அன்றியும்,

வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு
மெய்மையும் பொய்மையும் ஆயினார்க்கு
சோதியுமாய் இருள் ஆயினார்க்குத்
துன்பமுமாய் இன்பம் ஆயினார்க்குப்
பாதியுமாய் முற்றும் ஆயினார்க்குப்
பந்தமுமாய் வீடும் ஆயினார்க்குப்
ஆதியும் அந்தமும் ஆயினார்க்கு
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே

*(வேதமும் வேள்வியும் மெய்ப்பொருளும் பொய்ப் பொருளும் ஒளியும் இருளும் இன்பமும் துன்பமும் பாதியும் பந்தமும் ஆதியும் அந்தமும் ஆன இறைவனுக்குச் சுண்ணப் பொடியினை இடிப்போமாக)*

என்றும், **பொன்வண்ணத்து அந்தாதி,**

அலையார் புனல்அனல் ஞாயிறு அவனி மதியம் விண்கால்
தொலையா உயிர்உடம்பு ஆகிய சோதியைத் தொக்குமினோ
தலையால் சுமந்தும் தடித்தும் கொடித்தேர் அரக்கன் என்னே
கலையாள் ஒருவிரல் தாங்ககில் லாவிட்ட காரணமே

*(வலிமையான இராவணன், இறைவனின் ஒரு விரல் அழுத்தத்தைத் தாங்காது ஒழிந்த காரணம் எண் பொருளாக விளங்கும் இறைவனைக் கூடி அடைந்தது ஆகும்.)*

பெருந்தகையைப் பெரும்பற்றப் புலி ஊரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே

*(அரிய தவத்தினர் தொழும் இறைவனை, எல்லாப் பொருட்களின் வடிவமாய் உள்ள புலியூரானைப் பேசாத நாள் எல்லாம் பிறவா நாளாகும்)*

அன்றியும்

மாலாகி நான்முகனாய் மாபூதமாய் மருக்கமாய்
அருக்கமாய் மகிழ்வும் ஆகிப்
பாலாகி எண்திசைக்கும் எல்லை ஆகிப்
பரப்பாகிப் பரலோகம் தானே ஆகிப்
பூலோக புவலோக சுவலோ கமாய்ப்
பூதங்களாப் புராணன் தானே ஆகி
ஏலாதன எல்லாம் ஏல்விப் பானாய்
எழும்சுடராய் எம்அடிகள் நின்றவாறே

*(இறைவன் திருமாலாகவும், நான்முகனாகவும் எண்திசையாகவும், மூவுலகமாகவும், பூதங்களாகவும், புராணனாகவும் எழுஞ்சுடராகவும் நின்று விளங்குகின்றான்)*

என்றும், **திருப்பாட்டு**

ஊனாய் உயிர்ஆனாய் உடல்ஆனாய் உலகுஆனாய்
வானாய் நிலன்ஆனாய் கடல்ஆனாய் மலைஆனாய்
தேனார் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர் அருட்துறையுள்
ஆனாய் உனக்கு ஆளாய்இனி அல்லேன் எனலாமே

*(ஊனாய், உயிராய், உலகமாய், வானாய், நிலனாய் நிற்கும் இறைவனுக்கு நான் அடியவன் அல்லேன்)*

அன்றியும்,

கார்க்குன்ற மழையாய்ப் பொழிவானைக்
கலைக்குஎலாம் பொருளாய் உடன்கூடிப்
பார்க்கின்ற உயிர்க்குப் பரிந்தானைப்
பகலும் கங்குலுமாகி நின்றானை
ஓர்க்கின்ற செவியைச்சுவை தன்னைஉணரும்
நாவினைக் காண்கின்ற கண்ணை
ஆர்க்கின்ற கடலை மலைதன்னை
ஆரூரானை மறக்கலும் ஆமே

*(மழையாய் கருணை பொழிபவன், உயிர்களுக்கு இரங்குபவன், பகலும் இரவுமாய் நிற்பவன் திருவாரூர் இறைவனை மறவாது வணங்க வேண்டும்)*

என்றும், **திருவாசகம்,**

நிலநீர் நெருப்புஉயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோடு எண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்
உலகுஏழ் எனத்திசைப் பத்துஎனத் தான்ஒருவனுமே
பலவாகி நின்றவா தோள்நோக்கம் ஆடாமோ

*(இறைவன் எண் வகைப் பொருளாகவும், ஏழுலகங்களாகவும், பத்துத் திசைகளாகவும், பல பொருள்களாகவும் நின்றுளான். அவன் பெருமையைப் பாடுவோமாக.)*

அன்றியும்,

வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு
மெய்மையும் பொய்மையும் ஆயினார்க்கு
சோதியுமாய் இருள் ஆயினார்க்குத்
துன்பமுமாய் இன்பம் ஆயினார்க்குப்
பாதியுமாய் முற்றும் ஆயினார்க்குப்
பந்தமுமாய் வீடும் ஆயினார்க்குப்
ஆதியும் அந்தமும் ஆயினார்க்கு
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே

*(வேதமும் வேள்வியும் மெய்ப்பொருளும் பொய்ப் பொருளும் ஒளியும் இருளும் இன்பமும் துன்பமும் பாதியும் பந்தமும் ஆதியும் அந்தமும் ஆன இறைவனுக்குச் சுண்ணப் பொடியினை இடிப்போமாக)*

என்றும், **பொன்வண்ணத்து அந்தாதி,**

அலையார் புனல்அனல் ஞாயிறு அவனி மதியம் விண்கால்
தொலையா உயிர்உடம்பு ஆகிய சோதியைத் தொக்குமினோ
தலையால் சுமந்தும் தடித்தும் கொடித்தேர் அரக்கன் என்னே
கலையாள் ஒருவிரல் தாங்ககில் லாவிட்ட காரணமே

*(வலிமையான இராவணன், இறைவனின் ஒரு விரல் அழுத்தத்தைத் தாங்காது ஒழிந்த காரணம் எண் பொருளாக விளங்கும் இறைவனைக் கூடி அடைந்தது ஆகும்.)*

என்றும், **திருப்புகழ்,**

அதல விதலமுதல அந்தத் தலங்கள்என அவனி
  எனஅமரர் அண்டத்து அகண்டம் என
அகில சலதி என எண் திக்கில்
  விண்டு என அங்கி பானு
அமுத கதிர்கள்என வந்தத்து மந்திரம் என அறையும்
  மறைஎன அருந்தத்து வங்கள் என
அணுவில் அணு என நிறைந்திட்டு நின்றதுஓர்
  பரப்பிர காசம்

*(கீழ், நடு மேல் உலகங்களாகவும் எண் பொருளாகவும், இறைவன் திகழ்கின்றான். மந்திரங்கள், மறைகள், தத்துவங்கள், எனவும் அணுவுக்குள் அணு எனவும், நிறைபொருளாய் இறைவன் நின்றுளான்)*

என்றும், **திருவாய்மொழி,**

ஏகமூர்த்தி இருமூர்த்தி மூன்றுமூர்த்தி பலமூர்த்தி
ஆகிஐந்து பூதமாய் இரண்டு சுடராய் அருவாகி
நாகம் ஏறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனேஉன்
ஆகமுற்றும் அகத்தடக்கி ஆவிஅல்லன் மாய்த்ததே

*(ஒரு பரம்பொருளாய், முக்கடவுளாய், நான்கிறையாய் இன்பத்திற்கும் புண்ணியத்திற்கும் முதல்வனாய், அடியார்கள் அகம் விரும்பும் அருமையானவனுமாய் இறைவன் தோற்றம் அமைகிறது.)*

அன்றியும்,

துன்பமும் இன்பமும் ஆகிய செய்வினையாய்
  உலகங் களுமாய்
இன்பம்இல் வெந்நரகு ஆகிஇனிய நல்வான்
  சுவர்க்கங் களுமாய்
மன்பல் உயிர்களுமாகிப் பல பலமாய
  மயக்குகளாய்
இன்புறும் இவ்விளையாட்டு உடையானைப் பெற்று
  ஏதும் அல்லல் இலேனே

*(இன்ப துன்பங்களுமாய் காரணமான வினைகளும் உலகமும் நரகமும் சுவர்க்கமும் மாயச் செயல்களுமாய் இருந்து திருவிளையாடல் செய்யும் இறைவனைப் பெற்றால் துன்பம் இல்லை)*

என்றும், **தத்துவராயர்,**

மாற்றங் களும் மனனும் வினை யாவையும் அற்று அந்தவான்
காற்றுஅங்கி நீர்நிலன் முற்றும் அவற்றுள்கலந்து நின்ற
நாற்றம் சுவைஒளி ஊறுஓசையும் நண்ணும் இவ்வுலகில்
தோற்றங்களும்சொரூப ஆனந்தநாதர் சுடர் வடிவே

*(உலகியல் மாற்றங்கள் ஏதுவாகிய மனனும் அதன்வழி நிகழும் வினைகளும் அவற்றிக்குக்காரணமாகிய ஐம்பூதங்களும் உலகின் தோற்றங்களும் இறைவனின் ஒளிவடிவமாகும்)*

என்றும், **தேவிகாலோத்தரம்**

ஆனநிலை யாவுடைய பூதங்கள் அனைத்துநான்
ஏனையவை யாவைஉள அவையுநான் தூல நுண்மை
ஆனஎவை அவையும் அலேன் எனை அறியில் அறிவோர்க்கு
ஞானம் ஒன்றும் என்னுருவ நானே எவ் வுயிர்க்கு உறவும்

*(பூதங்களனைத்தும் ஏனையவும் இறை. எல்லாமாய் விளங்குதல் தூலநிலையாகும். இவையன்றி ஏனையன விளங்குதல் சூக்குமநிலை அறிந்தார் அறியாதார் முதலான உயிர்கட்கும் உறவாய் இருப்பவனும் இறைவனே)*

அன்றியும்,

ஒன்றுடனும் தோய்வு இல்லான் ஒத்தார்மிக் கார்இல்
லான்உலகம் இல்லான்
நின்றநினை வுக்கு எட்டான் நித்தன் காணப்படான்
நெஞ்சுள் நிற்பான்
பொன்று பிறப்புஇலி முதலான் அறிவின் நிட்களன்
பழையோன் பொருள்கள் இல்லோன்
என்று நினைந்து அடிக்கடியும் பிரமம் என நோக்குதலே
இயல்பு அதாமே

*(நினைவிற்கு எட்டாத இறைவன், முதன்மை அறிவினன் இத்தகு இறைவனை இடைவிடாது சிந்தித்துத் தன்னைச் சிவமாகக் காண்டலே சீவன்முத்தர் இயல்பாகும்)*

என்றும், **சிவதருமோத்தரம்**

**சராசரத்து அமலன் நீங்காத் தன்மையன் ஆதலாலே**
**சராசரம் அமலன்மேனி என உணர் தக்கோர் தாமும்**
**சராசர உயிர்க்குத் தாயாம் சங்கரன் உலகம் சார்ந்து**
**சராசரம் ஒடுங்கும் போது தற்பரன் தாளும் சார்வார்**

*(அமலனாகிய இறைவன் நீங்காது உளன். உலகம் இறைவன் மேனி என்று உணருகின்றவர் தாம், இறைவன் உலகம் சார்ந்து ஒடுங்கும் போது இறைவன் திருவடி சார்வார் என்றவாறு)*

என்றும், **பகவத்கீதை,**

**மண்ணும் நீரும்எரி தீயும் வாயும்அவ்**
**வானினோடு மனம் புந்தியும்**
**எண்ணும் நீர்மைகளின் யான்எனும் பதமும்**
**என்னும் எட்டும் இவை அன்றியே**
**பண்ணும் நீர்மைகளின் மேலதாய் உலகில்**
**யாவையுங்கொடு பரித்துடன்**
**கண்ணும் நீடுயிரு மாகி என்னுடைய மாயை**
**நிற்பதுகை வேலினோய்**

*(ஐம்பூதங்களும் அவற்றொடு மனமும் புந்தியும் யான் எனும் பதமும் ஆகிய எண்பொருள்களன்றி உலகியல் பொருள்களும் உயிர்ப் பொருள்களுமாகி என்னுடைய மாயை நிற்கிறது என்றவாறு)*

அன்றியும்,

**யாவன் ஒருவன் எனைஎல்லா உயிர்கள்**
**இடையும் என் இடையே**
**மேவஎல்லா உயிர்களையும் வேறா**
**காதே மெய்காண்பான்**
**தேவர் பகைமுன் செகுத்தோனே அவன்யா**
**தேனும் செய்துஇடினும்**
**ஆவஅவன் ஆகின்றேன் யான் அது**
**நீயேதும் ஐயுறேல்.**

*(எவன் ஒருவன் இறைவனை எல்லா உயிர்களிடத்தும் காண்கிறானோ அவனே இறைவன் ஆவான்.)*

என்றும், **பிரமகீதை,**

உலகம் யாவும் உயிர்பலவும்
நானே சிறிதும் வேறில்லை
அலகில் அறிவால் ஆய்ந்து இடினும்
மாயா இடத்தும் அருத்தம் இதே
திலக மாயா மறை துணிந்து
திகழ்த்தும் பொருளும் இதுஎன்றன்
இலகும் தன்மை அனுபவமும்
இதிலோர் ஐயம் உளது அன்றால்

*(இறைவன் எல்லா உலகங்களாகவும் உயிர்களாகவும் கலந்து நிற்கின்றான்.)*

அன்றியும்,

அங்கிதலை வாய்விவி தமானமறை பானு
திங்கள் விழி எண்திசைகளும் செவிகள் வாயு
தங்கும் உயிர் தன்இதயமே சகலமும் கால்
இங்குஅவனி சங்கரன் இருக்கும் வடிவுஈதால்

*(சூரிய சந்திரன் எண்திசைகள் முதலாக அனைத்தும் இறைவன் சங்கரனின் வடிவங்கள்)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

திக்கும் காலமும் முதலிய வசத்துறு
சிறுவடிவு அறத்துன்பம்
தொக்கவன் அவற்றான் மறையாமலே
சூக்கமாய் நொய்தாகி
மிக்க சோதியாய் அனைத்துமாய் ஒன்றுமாய்
மெய்யறிவு ஒன்றேயாம்
தக்க இந்நிலை நில்என உரைத்தனன்
தலைமையாம் உபதேசம்

*(நுண்மையாகியும், சோதியாகவும் எல்லாமாகியும் இருப்பது தத்துவஞானமான ஒன்றேயாகும்)*

அன்றியும்,

கிஞ்சில் ஆகி விரிந்துசகத் திரளாய்க் கிளைத்த இவைஎல்லாம்
விஞ்சு பிரமமே அறிவு பிரமம் இம்மே தினிபிரமம்
பஞ்ச பூதம் பிரமம்நாம் பிரமம் நமது பகை பிரமம்
தஞ்ச நட்புக்கிளை பிரமம் சங்கராதி நிச்சயமே

*(விரிந்தும் கிளைத்தும் உலகத் திரட்சியாகவும் அறிவும் உலகமும் ஐம்பூதங்களும் பகையும் நட்பும் சுற்றமும் ஆகவும் இருப்பன யாவும் பிரமம் ஆகும்)*

என்றும், **திருவுந்தியார்,**

எட்டுக் கொண்டார்தமைத் தொட்டுக்கொண்டே நின்றார்
விட்டார் உலகம் என்று உந்தீபற
வீடே வீடாகும் என்று உந்தீபற

*( எண் திருவுருவாக விளங்கும் இறைவனை இடைவிடாது வழிபடுவோர்க்கு உலகப் பொருள்களிடம் நினைவு செல்லாது. இவ்வுலகில் வீடு பேறு அடைந்தவர்களாவர்)*

அன்றியும்,

சொல்லும் பொருள்களும் சொல்லாதனவும் அங்கு
அல்லனாய் ஆனான்என்று உந்தீபற
அம்பிகை பாகன் என்று உந்தீபற

*(சொல்லும் பொருள்களாகவும் சொல்லாதனவாகவும் இறைவன் விளங்குகின்றான்)*

என்றும், **திருக்களிற்றுப்படியார்**

ஈறாகி அங்கே முதல்ஒன்றாய் இங்கு இரண்டாய்
மாறாத எண்வகையாய் மற்று இவற்றின் வேறாய்
உடனாய் இருக்கும் உருவுடைமை ஒன்றும்
கடனாய் இருக்கின்றான் காண்

*(ஒடுக்கும் காலத்தில் சிவம் ஒன்றே ஆகவும் மீளத் தோன்றும் காலத்தில் சக்தியும் சிவமும் என இரண்டாகி நிற்கும். இறைவன் வேறாகியும் உடனாகியும் உளன்)*

அன்றியும்,

அவனே அவனிமுதலாய் ஆயினானும்
அவனே அறிவாய் நின்றானும் - அவனேகாண்
ஆணாகிப் பெண்ணாய் அலியாகி நின்றானும்
காணாமை நின்றானும் கண்டு

*(இறைவன், உயிர்களின் வினைக்கு ஏற்ப துணையாகியும், உயிர்களுடன் கலந்து நிற்கும்போது உயிர்களால் காண இயலாதும் ஆகும்)*

என்றும், **சிவஞானசித்தியார்,**

உலகமே உருவமாக யோனிகள் உறுப்பு அதாக
இலகுபேர் இச்சாஞானக் கிரியையுள் கரணமாக
அலகிலா உயிர்ப்புலன்கட்கு அறிவினை ஆக்கி இயைந்து
நலமிகு தொழில்களோடு நாடகம்நடிப்பன்நா தன்

*(இறைவன், எண்ணற்ற உயிர்களிடத்து அறிவுக்கு அறிவாய் நின்றுணர்த்தி, அதி சூக்குமத் தொழில்களையும் திருவிளையாடலாக செய்தருள்வான்)*

என்றும், **சிவஞானதீபம்,**

அத்துவா வடிவாம்எம் இறைமுடிதான் கலைகள்
ஐந்தாகும் சாந்தி முதலானநான்கு உரமாம்
வித்தை முதன்மூன்று இரண்டாம் பிரதிட்டாதி உந்தி
வியன்பாத நிவர்த்தியதா மிளிர் துவக்கு அக்கரங்கள்
வைத்த புவனங்கள் மயிர் மந்திரங்கள் நெய்த்தோர்
வளம்திகழும் பதங்கள் அரும்தசையாகும் மதித்த
தத்துவங்கள் சுக்கிலமோடு அத்தி நிணம்மூளை
சத்திகள்தாம் நேத்திரம் மூவைந்தாம் இத்தகையே

*(மந்திரம், பதம், வண்ணம், புவனம், தத்துவம், கலை என்னும் அத்துவா (வழி) வடிவில் இறைவன் திகழ்கிறான். இறைவனுக்கு ஐந்து கலைகள் உறுப்புக்களாக விளங்குகின்றன.)*

அன்றியும்,

அனுக்கிரகம் சதாசிவன் தான் நாதத்தால் உள்ளத்தில்
அருமறைப்புச் சிந்தைஎனில் விந்துவினான் மகேசன்
துனித்த மனத்து உருத்திரன்தான் மகாரத்தால் அழிக்கும்
துழாய் முடியோன் புத்தியின் நின்று உகாரத்தால் அளிக்கும்

பணிப்பதும் ணகாரத்தால் அலங்காரம் பொருந்திப்
படைத்திடுவன் ஓங்காரப் படிவமுறையுமாம் அதனால்
அனைத்து உலகும் இலிங்கமய மாம்எவையும் இதுவே
ஆக்கி அளித்து அழித்துமறைத்து அனுக்கிரகம் செயுமே

*(இறைவன் படைத்தல் ஆகிய ஐந்து தொழில்களை ஐந்து மூர்த்திகளாய் நின்று செய்கிறான்.)*

என்றும், **சிவானுபூதி விளக்கம்,**

எட்டு உருவம் என்றும் இறை உருவம் என்னும்அது
சிட்டா மறையும் சிவாகமும் செப்பியதே

*(இறைவன் வடிவம் எண் உருவம் என்று மறைகளும் ஆகமும் செப்புகின்றன)*

அன்றியும்,

பத்துத்திசையும் பதின்நால்உலகும் விடத்து
அத்திக் கரைபுரளும் சாகரமே அல்லவோ

*(திசைகள் பத்தும், உலகு பதினாங்கும் கரைபுரளும் அருட்கடலே இறைவன்)*

என்றும், **நெஞ்சுவிடுதூது,**

பாரும் திசையும் படர்ஒளியாலே நிறைந்தான்
தூருந் தலையும் இலாத் தோன்றலான் - வேராகி
வித்தாகி வித்தின் முளையாகி மேவுதனுச்
சத்ஆதி பூதங்கள் தானாகிச் - சுத்த
வெறுவெளியாய்ப் பாழாய் வெறும்பாழுக்கு அப்பால்
உறு பொருளாய் நின்ற ஒருவன்

*(இறைவன், இயங்கும் இயங்காப் பொருள்களுக்கும் வேராகவும், வித்தாகவும் விதைவழி உருவாகும் விளைவாகவும் உளன்.)*

என்றும், **காசிகாண்டம்,**

ஐம்பெரும் பூதம்ஆகி அவற்றுஉறு குணங்களாகி
ஐம்பொறி ஆகிஅந்தக் கரணமாய் அறிவுமாகி
ஐம்பெரும் கருமம்ஆகி அனைத்தினும் தோய்ந்தும் தோயா
ஐம்பெருங் கடவுள்ஆகும் ஆதி நின்னடிகள் போற்றி

*(ஐந்து பூதங்கள், குணங்கள், பொறிகள், அந்தக் கரணங்கள், ஐந் தொழில்கள் என்றாகியும் எல்லாவற்றிலும் கலந்திருந்தும் ஐந்து பெருந்தேவர்களாக விளங்குவது முதற்கடவுள்)*

அன்றியும்,

உயிர்ப்புஅரு மறைகளோ இவ்
 உலகெலாம் செய்ய பொன்தாள்
பயிர்ப்புஅறு நிலநின் சென்னி
 பரம ஆகாயம் ஆகும்
வியப்புறு சுழிகொள் உந்தி
 நடுவெளியாகும் மெய்யின்
மயிர்த்தொகை அனைத்தும் எண்ணில்
 வான்தருக் குலங்க ளாமால்

*(மறைகள் இறைவன் திருவடி ஆகாயம் சென்னி, நடுவெளி உந்தி, மெய்யின் மயிர்த் தொகை மேகங்கள் ஆகும்.)*

என்றும், **பெரியபுராணம்,**

ஆயினும் பெரியார் அவர் என்பது
மேய இவ்வியல்பே அன்றி விண்முதல்
பாய பூதங்கள் பல்லுயிர் அண்டங்கள்
ஏயும் யாவும் இவர்வடிவு என்றதாம்

*(காட்சியுள் அடங்காத பெருமையுடையர். விண் முதலாகப் பரந்த ஐம்பூதங்களும் பல உயிர்களும், அண்டங்களும் இன்னும் உள்ள யாவையும் இறைவன் வடிவாகும்.)*

என்றும், **திருவம்மானை,**

பார்த்த இடம்எல்லாம் பரமேகாண் அம்மானை
பாராமல் இந்நாளும் பாழ்பட்டேன் அம்மானை

*(எங்கு பார்க்கினும் பரம்பொருளே! பரத்தைப் பாராதவன் பாழ்பட்டவன் ஆவான்)*

என்றும், **நெஞ்சொடு மகிழ்தல்,**

மண் இறந்து நீர்இறந்து வளிஇறந்து தீ இறந்து
விண் இறந்து நின்றதிலே மேவினையே நெஞ்சமே

*(நெஞ்சம், ஐம்பூதங்களைக் கடந்து நின்ற இறைவனிடத்தில் பொருந்தியது)*

அன்றியும்,

பார்த்த இடந்தோறும் பரந்த பரந்து எஞ்ஞான்றும்
கோத்திருந்த பாழ்தனிலே குடியிருந்தாய் நெஞ்சமே

*(பார்த்த இடம் தோறும் விரிந்து பரந்த இறைவனிடத்தில் எப்பொழுதும் வெளியிலே நெஞ்சம் குடியிருந்தது)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

அட்ட மூர்த்தமும் சிவமே என்று வேதாதிகள் கூறினும் உலகின்கண் வரைந்து நீக்குவனாகிய தீயனவற்றையும் அங்ஙனம் காணுதல் கூடுமோ? என்பாரைப் பற்றி மேற்கூறுகின்றார்.

உதித்தச் சிவத்தோடேய்ந் துள்ளதேன் மாயை
யதற்கன் னியமென்னா ருந்தீபற
அதினன்கு தீதியா துந்தீபற 74

*உதித்தச் சிவத்தோடு ஏய்ந்து உள்ளதேன் மாயை*
*அதற்கு அன்னியம் என்னார் உந்தீபற*
*அதில்நன்கு தீதுயாது உந்தீபற*

என்பது, சகத் காரணமாகிய மாயை நித்திய பூரணம் ஆகிய சிவத்தின் இடத்திலே நின்று தோன்றி அதனையே கலந்து கொண்டிருத்தலால் அச்சிவத்திற்கு அம் மாயையே அன்னியம் என்று சொல்லார் அறிவுடையோர் ஆதலின் மாயையில் உண்டாகிய புவன கோடிகளின் ஓரொரு [1]பதார்த்தங்களை இது நன்று இது தீது என்று கூறுதல் கூடாது. அவையும் சிவமே ஆதலின் என்றவாறு.

அஃது எங்ஙனமெனின்? மாயையைச் சிவத்திற்குப் பேதம் என்றும், அபேதம் என்றும் கூறுவார் உளராயினும் முத்தி தசையில் அனைவர்க்கும் அபேதம் என்பதே உண்மை அஃது எப்படி என்னில்? பேதமென்று காண்பார்க்கும் சுத்த சித்தாகிய பொருள் பூரணன் ஆகையால் வேறொரு மாயை உண்டாயினும் அவனிடத்து நின்றும் தோன்றி அவனையே கூடி நிற்பது அல்லது

1 - பொருள்

அன்னியமாய்த் தோன்றுதற்கும், நிற்றற்கும் இடம் இன்மையாலும் உப்பளத்தில் கனலில் [1]பரிசன வேதியாதியிற் கூடிய [2]திருணாதிகள் தத்தம் தன்மை கெட்டு அவற்றினது தன்மையாய் விளங்குதலின் மாயையும் சிவமேயாய் விளங்கா நிற்பதாதலின் அச்சிவத்தின் கண்ணே தோன்றா நிற்கிற ஓசையாதி விசயங்களை இது நன்று இது தீது என்று பற்றுதல் விடுதல் கூடாது. கூடுமேல் பூரண நிட்டையும் கூடாது. இது அன்றியும் ஒரோரு கால தேசங்களில் நிருமல பாவனை பற்றித் தீயனவற்றையும் நல்லவெனக் காணாநிற்கிற அபரிச்சின்ன நிட்டைகளும் கூடாது. கால தேசங்களும் அவைகளில் காணப்படுகிற பொருளும் மாயையாதலின், இதுவன்றியும் நன்மை தீமைகளாய் விளங்கா நிற்கும் புவன போகங்கள் [3]தம்ம அதீனமாகிய தனுகரணங்களை அடைவது ஒழிந்து [4]நிரவயவனாகிய ஆத்மாவைப் பற்றாமையாலும், ஒருவன் தனக்கு அன்னியமாகப் பற்றிய சரீரத்தினும் இகழப்படுபொருள் வேறு இன்மையாலும் ஒருவகைப் பொருளே பேதம் தோன்றுதல் சீவகற்பனை ஆதலினாலும் [5]கற்பனாரகிதமாகிய பூரண நிட்டைக்கு அஃது இல்லை என்றதெனக் கொள்க.

மாயாப் பிரபஞ்சம் எல்லாம் சிவத்தில் தோன்றி ஒடுங்குதலின் அம்மாயையும் சிவத்திற்கு அன்னியம் ஆகாது என்பதற்குப் பிரமாணம், **தேவிகாலோத்தரம்,**

புறன்அகம் கீழ்மேல் பக்கம் புணர்வதுஓர் பொருளும் இல்லை
திறன்உடைய உருவம் எல்லாம் தானாகித்தேகம் இன்றாய்
அறன்முறை அடங்கு ஞான யோகினால் அறியப்பட்ட
விறன்மலி ஞான ஆனந்த மேன்மையால் விளங்கா நிற்கும்

*(சீவன் முத்தனுக்குப் பசு, பாசங்களோடு கூடாது, பதியில் அடங்கி நிற்றலால் நிகழும் ஞானயோகத்தால் அறியப்பட்ட ஞான முடிவே மேம்பட்டு விளங்கும் என்பதாகும்)*

அன்றியும்,

கன்மபலம் ஏதும் இலை சுபாவமே காணுங்கால்
தொன்மை உலகு உயிரில்லை தோன்றுவது எலாம் அசத்து
நன்மையினைத் தோற்றுவித்துப் பற்றிலதாய் நணுகரியது
என்ன அறிந்தான்? உலகும் இலதாகிச் சுத்தனுமாம்

---

*1 - பொன் செய்யும் மூலிகை, 2 - புல் முதலியன, 3 - தம் சார்பாகிய, 4 - உடல் நீங்கிய தன்மை, 5 - கற்பனை கடந்த*

*(உயிரின் உண்மைத் தன்மையறிந்த சீவன் முத்தன் சிவத்தோற்றம் ஒன்றே கண்டு, யான் எனும் பற்றின்றிச் சிவன் போல் நிருமலனாய் விளங்குவன்)*

என்றும், **பிரமகீதை,**

எப்பொருளு மாயையினால் எனச்சிலவர் இயம்புவர் கண
மெய்ப்பரமன் தனைஒழிய வேறொருமாயையும் இல்லை
ஒப்பரிய பரன்ஒழிய ஒருமாயை உண்டாகில்
அப் பரன்தன் பெருமைக்கு அதுநேரே அழிவன்றோ

*(எல்லாப் பொருளும் மாயையினால் தோற்றுவிக்கப்பட்டன என்று சிலர் கூறுவர். இறைவனன்றி வேறு ஒரு மாயை உண்டெனின் அவன் பெருமைக்கு இழுக்கு ஆகும்.)*

அன்றியும்,

ஒழிந்தது ஒரு பொருள்இல்லை உள்ளது எல்லாம் அவனேமுன்
கழிந்த பொருள் மேலும் வரக்கடவ பொருள்தானும் அவன்
மொழிந்தனன் இனிப் பலவிச்சை அவிச்சை எனும் முற்றும் அவன்
இழிந்த பிறப்பு அறவேறோர் வழிஇல்லை இவன்ஒழிய

*(இறைவனைத் தவிர வேறு ஒரு பொருள் இல்லை. கழிந்த பொருளும் உள்ள பொருளும் வருகின்ற பொருளும் இச்சையும் அவிச்சையும் இறைவனே. அவனின்றி ஒரு வேறு ஒரு பொருள் இல்லை)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

நானாவாம் பணதிகளுள் நண்ணுகினும் ஒருமையே
நண்ணும் கல்போல்
ஆனாத சகங்களை உள் அடக்கினும் வேற்றுமை மேவாது
அறிவு ஒன்றே யாம்
கானார் பங்கயம் எல்லாம் வேறு அன்றிக் கன்மயமாம்
கணக்கே போல
வானார் சிற்சொரூபத்தைப் பிரியாத தன்மயமாம்
வையம் எல்லாம்

*(உலகங்களை அகத்தில் அடக்கி இருந்தாலும் வேறுபாடு பொருந்தாமல் சித்ஒன்றேயாகும்)*

அன்றியும்,

நனிமெய்யாய் மாயைஇலது என்று இவ்வாறு நாடுவாய்
ஞானியாய் ஞானம் பெற்றால்
துனிசெயுமீது உளமாயை அறிதிஅன்றே துகள்இலா
நற்போதம் தோன்றும் மட்டும்
பனிமாயை இல்லைஎன என்சொல்லாலே பழுதில்லா
அறுதியுறப் பற்றி நிற்பாய்
புனிதம் உறுபிரமமே எல்லாம் என்று புந்தியிற்கண்டு
ஓர்முத்தி பொருந்தினோரே

*(தூய பரபிரம்மமே பலவாகத் தோன்றுகின்றது என்று கண்டவர்கள் உண்மை முத்தியில் பொருந்தினர்)*

என்றும், **சிவானுபூதி விளக்கம்,**

பதிபசு பாசப் பரப்பு அறிந்து பார்க்கப்
பதிபசு பாசப் பரப்பாய் இருந்ததே

*(இவ்வுலகு முப்பொருள்களின் விளக்கமாக உள்ளது.)*

அன்றியும்,

பார்த்தேன் உலகப் பரப்புஎல்லாம் பார்த்த அளவில்
பேய்த்தேர் போல் இல்லையாப் பேரறிவு கண்டனமே

*(உலகப் பரப்பைப் பார்த்து பேரறிவாகிய இறைவனின் விரிந்து பரந்த தன்மையை உணரலாம்)*

என்றும், **திருவம்மானை,**

மெய்யானது ஒன்றுமே மெய்யானது அம்மானை
மெய்யன்றி மற்றெல்லாம் மித்தைகாண் அம்மானை

*(இறை ஒன்றே மெய், மற்றது எல்லாம் பொய் ஆகும்)*

என்றும், **சிவானந்த மாலை,**

எங்குஞ் சிவம் ஒழிய இல்லைஅவன் தன் ஆணை
அங்கம் திரள்கருவி ஆணவமாம் - பொங்கும் இருள்
மைசெய்த மாமாயை மாயைவினை மற்று அனைத்தும்
பொய்பொய்பொய் பொய்பொய்பொய் பொய்

*(எங்கும் சிவம் ஒழிய வேறில்லை. அவன் ஆணைத்திரள் கருவி ஆணவம், மாமாயை, மாயை, வினை மற்றும் அனைத்தும் பொய்)*

என்றும், **காசிகாண்டம்,**

கானல் இடைத் தெண்ணீருங் கயிற்றினில் வாள்அரவும் அலை
கடலில் பட்ட
கூன்முதுகு இப்பியில் தோன்றும் வெள்ளியும் அம்முதல் உண்மை
குறிக்கில் தீரும்
ஆனவைபோல் நினைஅறியில் தோன்றும்சகம் அனைத்தும் நில்லாது
அழியும் ஆற்றால்
தேன் அவிழ் பூங்கடுக்கைஅணி செல்வன் நினது அறைகழல்தாள்
சென்னி சேர்ப்பாம்

*(இறைவனின் இலக்கணம் அறிந்தால் காணுகின்ற உலகமுழுதும் இறைவனன்றி வேறு இல்லை என்பது அறியலாம்.)*

என்றும், **தத்துவராயர்,**

உலகமாம் தோற்றம்போய் ஓர்ஒளியாய் நேரே
இலகினாய் என்கண்ணினில் கண்புலன் ஒழித்துக்
கையால் தடவினர்க்குக் காண்கின்ற ஓவியங்கள்
பொய்யாய்ச் சுவரானால் போல்

*(ஞானமில்லாதவன் இவ்வுலகை ஒளிவடிவமாய் காணான். ஞானமுடையவனே உலகை ஒளிவடிவமாய் காண்பான்)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

பிரபஞ்சம் எல்லாம் சிவமே ஆதலின் இப்பிரபஞ்சத்தின் கண்ணே தோன்றிய பொருள்களில் யாதொன்றையும் இது நன்று இது தீது இது என்று பற்றுதல் விடுதல் கூடாது என்பதற்குப் பிரமாணம் : **திருக்கடைக்காப்பு,**

குற்றம்நீ குணங்கள்நீ கூடல் ஆலவாயிலாய்
சுற்றம்நீ பிரானும்நீ தொடர்ந்து இலங்குசோதிநீ
கற்றநூல் கருத்தும்நீ அருத்தம்இன்பம் என்றுஇவை
முற்றும்நீ புகழ்ந்துமுன் உரைப்பது என்முகம்மனே

*(குற்றம், குணங்கள், சுற்றம், தலைவன், சோதி, கற்ற நூல் கருத்து, இன்பம் எனும் இவை முழுதும் இறைவனே)*

என்றும், **திருவாசகம்**

கூறும் நாவே முதலாகக் கூறுங்கரணம்
எல்லாம் நீ
தேறும் வகைநீ திகைப்பும்நீ தீமை நன்மை
முழுதும் நீ
வேறோர் பரிசுஇங்கு ஒன்றில்லை மெய்ம்மை உன்னை
விரித்துரைக்கின்
தேறும் வகைஎன் சிவலோகா திகைத்தால்
தேற்ற வேண்டாவோ

*(நா முதலாக எல்லாக் கருவிகளும் நன்மை தீமை என்பனவும் முழுதும் இறைவன்.)*

என்றும், **பொன்வண்ணத்தந்தாதி,**

தவனே உலகுக்குத் தானேமுதல்தான் படைத்த எல்லாம்
சிவனே முழுதும் என்பார் சிவலோகம் பெறுவர் செய்ய
அவனே அடல்விடை ஊர்தி கடல்இடை நஞ்சம் உண்ட
பவனே எனச்சொல்லுவாரும் பெறுவர்இப் பாரிடமே

*(வருந்துவதற்குக் காரணமாகிய இல்வாழ்க்கைப் பற்றை ஒழித்தால், இறைவன் நமது தீமைகளை அழிப்பான்)*

என்றும், **தத்துவராயர்,**

நிகழ்கின்ற எல்லாமும் நின்மலமே ஆனால்
இகழ்கின்ற வேறுதான் யாதோ - புகழ்புஇன்றி
நாடப் படாளங்கள் நாயனார் சீர்பாதம்
சூடப் படாதார் தம் சொல்

*(உலகில் நிகழ்கின்ற அனைத்தும் நின்மலனாகிய பரம் பொருளாலேயே நடைபெறுகிறது)*

அன்றியும்,

யாது ஒன்று நீயன்றி இல்லாத பின்பு இங்கு இவற்றை நன்று
தீதுஎன்பது எங்கள் சிவக்கனியே செய்ய வேண்டுவது
மாது ஒன்றிய நின்திருமேனி கொண்டு இங்ஙன் வந்தஇந்தப்
போது ஒன்றிய கழலே வழுவாது புகழ்விப்பதே

*(இறை அன்றி யாதொரு பொருளும் இல்லை. ஆகவே நன்மை தீமை எல்லாம் இறை செயலே.)*

என்றும், **பகவத்கீதை**

நன்றே ஞான அருமறையோன் அன்னாய் அந்நாய்
இறைச்சி தனைத்
தின்றே உழலும் அவனியானை யாவென்று அறிந்த
திறத்தெல்லாம்
அன்றே என்னாதாம் என்னாது அறிவாய் நின்ற
எனை எங்கும்
ஒன்றேயாகக் காண்பான் இவ் வுடம்போடு இருந்தே
உடம்பு அறுப்பான்

*(வேறுபாடு இன்றி அனைத்தையும் ஒன்றாகக் காண்பவன் உடம்போடு இருந்தாலும் உடற்பற்று அறுத்தவனாகக் கருதப்படுவான்.)*

என்றும், **பிரமகீதை**

போதம் அதாகித் தோன்றும் பொருள்எலாம் சிவமேஆக
ஏதம் இல் அறிவால் காண்பான் எவன்அவன் உண்மை கண்டான்
தீது இலாச் சிவம்அன்று என்றுசிறிது ஒன்றைச் சிந்தைசெய்வோன்
பேதமாம் மருளின்மேய பித்தன்என்று அறியல் ஆவான்

*(எல்லாப் பொருள்களிலும் சிவத்தைக் கண்டவன் மெய்ப் பொருளை உணர்ந்தவன். சிவத்தைக் காணாது பொளுளாகக் கண்டவன் பித்தனாவான்)*

அன்றியும்,

சிவன்இது அன்றே என்று சிறிது ஒன்றைச் சிந்தை செய்யும்
அவன் அறிவுடையோர்தம்பால் அதமன் என்று அறியப் பட்டான்
உவமை ஒன்று இல்லாஈசன் தனை இகழ்ந்து ஒழுகுவானும்
பவம்அதில் என்று மேவும் பசுஎனப் படுகின்றானும்

*(சிறு தெய்வங்களைச் சிந்தை செய்வோன் அறநெறி அற்றவன். சிவனாகக் காணாது வேறு இறைவனை ஒழுகுவான் பிறவியில் சுழலும் உயிராவான்.)*

அன்றியும்,

தீதெனும் பொருள்கள் நன்றெனும் பொருள்கள்
செய்யலாவன செயப்படாத
ஏதமாம் உடலம் இந்தியம் பிராணன் இசைமனம்
புத்தி ஆங்காரம்
தீதுஅறு காமம் கோபமே முதலாம் தீயன
சாந்தி தாந்திகளே
ஆதியா நலங்கள் அடையவும் தானே
ஆகியே தோன்றும் மெய்யருளால்

*(நல்லன, தீயன, செய்வன, செய்யாதன, உடல் கருவிகள், காமம், சினம் முதலான தீயன யாவும் இறைவன் அருளே)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

மேனியில் புறத்தின் உள்ளின் மேலொடுகீழில் திக்கில்
வானில் வையகத்தில் எங்கு நானன்றி மற்றொன்று இல்லை
யானிலா இடமும் இல்லை எனது இடத்து இலாதும் இல்லை
தான்இகழ் பொருள் வேறில்லை சச்சிதானந்தம் என்றான்.

*(எங்கும் இறைவன் அன்றி வேறு பொருள் இல்லை. அவனன்றி ஓரிடமும் இல்லை. அவனிடத்து இல்லாத பொருளும் இல்லை)*

அன்றியும்,

மேவல் உற்ற போகத்தில்
விருப்பும் வெறுப்பும் எனக்கு இல்லை
யாவது எய்தும் அதுவருக
யாது போகும் அதுபோக
பாவம் மிகும்இவ் அஞ்ஞானப்
பகைவனாலே விவேகம் எனும்
ஏவம் இல்லாப் பொருள் எல்லாம்
இழந்தேன் உணர்வால் அவை பெற்றேன்

*(எது வருமோ, அது வரும். எது போகுமோ அது போகும். அஞ்ஞானம் எனும் பகைவனால் ஞானத்தை இழக்கக்கூடாது.)*

என்றும், **மோகவதைப் பரணி,**

சத்தமாதிகளும் எலாம் தற்சொரூபமான பரி
சுத்தமாய் விட்டதுகாண் சும்மேலொ சும்உலக்காய்

*(ஓசை முதலான அனைத்தும் இறைவனே ஆவான்)*

என்றும், சிவானுபூதி விளக்கம்,

வெறுப்பு விருப்பு என்று வேறு உரைத்தால் எந்தை
உறுப்பில் குறையாதோ உணர்வுடையோர் சொல்லுவரோ

*(விருப்பு, வெறுப்பு கடந்தவன் இறைவன்)*

அன்றியும்,

வேண்டலும் வேண்டாமலுமாய் மேவு வினைப்பயனாம்
ஆண்டகையோடு உற்ற அனுபூதி ஆனதே

*(உயிர்களுக்கு வினைப்பயன் ஊட்டுகின்ற இறைவனோடு பொருந்துவது அனுபூதியாகும்)*

அன்றியும்,

எல்லாஞ் சிவமென்று இருக்கு மொழியும் உரை
அல்லாமல் வேறு உண்டாமோ

*(எல்லாம் சிவமாய் இருக்கும் என்று மறைகள் கூறும்)*

என்றும், **திருவருட்பயன்,**

உள்ளும் புறம்பும் ஒரு தன்மைக் காட்சியருக்கு,
எள்ளும் திறம் ஏதும் இல்

*(அகமும் புறமும் ஒரு தன்மையாய் காண்பவர்க்கு எதனையும் இகழ்தல் தோன்றாது)*

என்றும், **நெஞ்சோடு மகிழ்தல்**

உள்ளும் புறம்பும் உவட்டாத ஆனந்தக்
கள்அருந்தி நின்ற களிப்பு என்கொல் நெஞ்சமே

*(அகத்தும் புறத்தும் சலிப்படையாத ஆனந்தமாகிய தேனினை அருந்திய களிப்பினை சொல்ல இயலாது.)*

என்றும், *அருட்பிரகாசம்*

நெளியும் புழுவும் மலமும்
  பொதி ஊழலும்நிமல
ஒளியின் வடிவென வேவேதம்
  ஓதுதல் ஓர்ந்தும் உண்மை
தெளியும் பரிசிலனாய் சிவம்
  அன்றிது என்னை ஒன்றை
எளிஒன்றினைப் புகழ்வோனையும்
  ஞானி எனப்படுமே

*(அனைத்தும் பரம்பொருளின் வடிவு என்று மறை ஓதும். இதனை உணராதவர் சிவத்தை உணர இயலாது)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

இந்நிட்டைக்கண் யான் பிறரென்னும் விகற்பங்களே தோன்றுமாயின் அவற்றினை நீக்க உபாயம் மேற்கூறுகின்றார்.

தோன்றுமேல் யான்பிறர் தோன்றுஞ் சுகாதிக
டோன்றாம னில்லுயிர்க் குந்தீபற
சுதந்திர மின்மைதேர்ந் துந்தீபற 75

*தோன்றுமேல் யான்பிறர் தோன்றுஞ் சுகாதிகள்*
*தோன்றாமல் நில்லுயிர்க்கு உந்தீபற*
*சுதந்திரம் இன்மை தேர்ந்து உந்தீபற*

என்பது, இங்ஙனம் கூறிய நிட்டைகள் நின்றும் யான், பிறரென்னும் விகற்பங்கள் தோன்றுமாயின் சுக துக்க ராகத் [1]துவேசமென்னும் இருவகைத் துவந்துவங்களும் கூடவே தோன்றா நிற்கும். அவ்விகற்பங்கள் தோன்றாதபடி எல்லா உயிர்கட்கும் சுதந்திரமின்மை தேர்ந்து உன்னையும், பிறரையும் காணாமல் நிற்பாய் என்றவாறு.

தோன்றாமல் நில்லை என்றமையால் அந்நிலை நிற்கவே சுகாதிகளும் தோன்றாது பூரண நிட்டையும் கூடுமென்பது ஆயிற்று. அஃது எங்ஙனமென்னின் எல்லாச் சீவர்களுக்கும் தனுகரணங்களைக் கூடாத விடத்து அறிவு உதியாமையால் அவர்கள் தாமே அவற்றினை கூடுகைக்குச் சத்தி

*1 - பகை*

இல்லாமையினாலும் அவைகள் உயிர்களைக் கூடாத இடத்துப் [1]பிரேரகம் இன்மையவாகிய சடமாதலாலும், தாமே கூடாதவற்றினை கூட்டி உயிர்க்கு அறிவை விளக்குவான் சிவனே. நானும், பிறரும் சுதந்திரர் அல்லமென்று ஒருவன் சுகதுக்கங்கள் தோன்றின இடத்தெல்லாம் தன்னையும் பிறரையும் காணாமல் சிவனையே கண்டு நிற்கவே அச்சிவன் மீது இவனுக்குப் பிரியாப் பிரியங்கள் தோன்றுவது இன்மையால் பூரணநிட்டை கூடுமென்றது எனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், **தத்துவராயர்,**

புகழ்ந்தென் புகழ்அல்ல சொல்லி ஒன்றாகப்
புவியில் உள்ளோர்
இகழ்ந்து என்எனை அவர்என் செய்கில் என் இனி
யாவையு மாய்த்
திகழ்ந்து எங்கணும்தன் செயல்அன்றி இன்மையைத்
தேற்றிச் சிந்தை
நிகழ்ந்து இங்குஎனை இன்று நீங்காமல் நின்மலன்
நின்றனனே

*(இறைவன் என்னை நீங்காது இருப்பதால் தனித்தன்மை இல்லாதவனானேன். எனவே உலகோர் என்னைப் புகழின் இகழ்ந்து என்ன?)*

என்றும், **சிவப்பிரகாசம்,**

மருவிய பொறியில் ஒன்றுமாபூதம் ஐந்தில் ஒன்றும்
கருவிகள் நான்கும் நீங்காக் கலாதிகள் ஐந்துங்கூடி
ஒருபுலன்நுகரும் இந்த ஒழுங்குஒழிந்து உயிரும் ஒன்றைத்
தெரிவுறாதுஅவன் ஒழிந்தத் திரள்களும் செயல் இலாவே

*(ஐம்பொறிகளில் ஐம்பூதங்களில் ஒன்றும் அகக்கருவிகள் நான்கும் கலை முதலிய ஐந்தும் கூட உயிர் ஒரு பொருளை நுகரும். இம்முறை விடின் உயிர் ஒன்றும் அறியாது.)*

அன்றியும்,

தனக்கென அறிவிலாதான் தானிவை அறிந்து சாரான்
தனக்கென அறிவிலாத வாயில் தானறியா சாரத்

1 - இயக்கம்

தனக்கென அறிவிலாதான் தத்துவ வன்ன ரூபன்
தனக்கென அறிவானால் இச்சகலமும் நுகருந்தானே

*(தனக்கென்று அறிவில்லாத உயிர், தத்துவங்களைக் கூடாது. உயிரிடத்து இறைவன் அகக்கருவிகளைக் கூட்டாது, அவற்றுடன் கூடிநின்று அனைத்தும் நுகர்வான்.)*

என்றும், **சிவநெறிப் பிரகாசம்,**

தன்மை முன்னிலை படர்க்கை மூன்று விதத்தாலே
சாரும் உயிர்க்கு அறிவிப்பன் இறைவன் அதில் தன்மை
தொன்மையதா ஞானத்தைத் தடுத்திடும் ஆணவத்தை
துறந்து எவையும் உள்ளபடி தோற்றுவித்தல் உளத்தே
நன்மையுடன் தீமையினை அவரவரால் அறிய
நல்குவது முன்னிலையாம் நரகசொர்க்கம் ஆதிப்
பன்மையதாம் பரலோகம் பாவ புண்ணியத்தின்
பலம் அதனை நூலினால் உணர்த்திடுகை படர்க்கை

*(இறைவன் தன்மை, முன்னிலை, படர்க்கை எனும் மூவகையில் அறிவிப்பான்)*

என்றும், **சிவஞானதீபம்,**

சத்தமுதல் விடயத்தைப் பகுத்தறிதல் அவித்தை
தக்கதொழிற்படுத்திடுதல் ஈசர் தொழில் ஞானம்
ஒத்தது சாதாக்கியமாம் சத்திநசை உறவே
உருசிப்பித்து இடுதல் சிவந்தற் செயல் பண்ணுவிதாம்
தத்துவ நால் ஒன்பதுவும் சடமென விட்டு அகன்றே
தான்அறிவு ஆகாமல் அறியாமையும் ஆகாமல்
அத்தன் உணர்த்திட உணரும் அறிவுயிரென்று அருளால்
அறிந்து எவையும் இறை செயலென்று உன்செயல் விட்டு அகலே

*(சுத்தவித்தை, மகேசம், சாதாக்கியம், சக்தி, சிவம் எனும் சிவதத்துவங்களின் செயல்கள் எல்லாம் இறைவன் செயல்களால் நிகழ்வன)*

என்றும், **உண்மை விளக்கம்,**

**அக்கரங்கட்கு எல்லாம் அகரஉயிர் நின்றால்போல்**
**மிக்க உயிர்க்கு உயிராய் மேவினாம் - எக்கண்ணும்**

நில்லா இடத்து உயிர்க்கு நில்லாது அறிவுஎன்று
நல் ஆகமம் ஓதும் நாடு

*(அகரமாகிய உயிர்எழுத்து எல்லா எழுத்துக்களையும் இயக்குவது போன்று இறைவன் உயிர்களை இயக்குகின்றான்.)*

என்றும், **திருவருட்பயன்,**

ஊன்அறியாது ஒன்றும் உயிர்அறியாது ஒன்றும்இவை
தான் அறியாது ஆர்அறிவார் தாம்

*(உடம்பும் உயிரும் திருவருள் அறிந்து அறிவித்தாலன்றி எதனையும் தாமாக அறியாது)*

என்றும், **சைவசமய நெறி,**

உண்டோ அதீதத்து உணர்வு உதிக்க யாம் உளத்தில்
கொண்ட குறிப்பின்றி விளங்கும்

*(ஆன்மா தான் செய்த வினையை அறிந்து அனுபவிக்கும்.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

எல்லாத் துவந்தவமும், உடலைப்பற்றி வருவதால் அதனது காவலைக் கைவிடல் வேண்டுமென்று மேற்கூறுகின்றார்.

படைப்பாதிக் கீச னதிகாரி பற்றா
துடற்காவ னீவிடுத் துந்தீபற
ஓவா தவனைநோக் குந்தீபற 76

*படைப்பு ஆதிக்கு ஈசன்அதிகாரி பற்றாது*
*உடற்காவல் நீவிடுத்து உந்தீபற*
*ஓவாது அவனைநோக்கு உந்தீபற*

என்பது, அனைத்துயிருக்கும் இத்தசைக்கண் உண்டாகிய சரா்சரத் தேகங்களும், அவற்றினைப் பற்றி வருகிற சுக துக்க போகமும் அத்தேகங்களினது நீக்கமும், உணர்வைப் பற்றி வருகிற மயக்கமும் தெளிவும், ஊழின் வலித்தன்மை யாதிகளாலே கூட்டிச் சிவனே ஐந்தொழில்களையும், பண்ணாநிற்கிற அதிகாரி ஆதலின் யாது ஒன்றின் கண்ணும் யான் பிறர் அதிகாரி என்குதலையும், யான்

இந்த உடலைக் காக்கின்றேன் என்னும் அபிமானத்தையும், பற்றறக் கைவிட்டுச் சுதந்திரனாகிய பரனையே ஒழியாது நோக்குவாய் என்றவாறு.

உடற்காவல் கைவிடு என்றமையால், அதனைக் கைவிடவே அதன்கண் பற்றிவரும் இருவகைத் [1]துவந்தமும் கூடவே நீங்கும் என்பதாயிற்று.

இதற்கு பிரமாணம், **திருமந்திரம்,**

எவ்விடத்தும் தம் பணியின்மை கண்டுளோர்
எவ்விடத்தும் பணிஈசன் பணி என்றே
அவ்விடத்தை ஐங்கருமத்தால் அறிதலால்
உவ்விடத் தோருக்கு ஓர் உபாயம் இல்லையே

*(எப்பணியும் தன்பணி அன்று என எண்ணி, எல்லாம் ஈசன் பணியே என்று நினைபவரும் அந்நினைவையும் ஒழிக்க வேண்டும்.)*

என்றும், **தேவாரம்,**

நம் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம்பைத் திருக் கரக் கோயிலான்
தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணி செய்து கிடப்பதே

*(எந்தப் பலனையும் நோக்காது பணி செய்யும் கடப்பாடு உயர்ந்தது)*

என்றும், **திருப்பாட்டு,**

தேனைக் காவல் கொண்டு விண்ட
கொன்றைச் செழுந் தாராய்
வானைக் காவல் கொண்டு நின்றார்
அறியா நெறியானே
ஆனைக் காவில் அரனே பரனே
அண்ணா மலையானே
ஊனைக் காவல் கைவிட்டு உன்னை
உகப்பார் உணர்வாரே

*(இந்த உடலைக்காக்கும் எண்ணத்தை கைவிட்டு இறைவனை நினைக்கும் எண்ணத்தை வளர்க்க வேண்டும்)*

1 - தொடர்பு

என்றும், **திருவாசகம்,**

நாயிற் கடையா நாயேனை நயந்து
நீயே ஆட்கொண்டாய்
மாயப் பிறவி உன்வசமே வைத்திட்டு
இருக்கும் அதுவன்றி
ஆயக் கடவேன் நானோ தான் என்ன
தோ இங்கு அதிகாரம்
காயத்து இடுவாய் உன்னுடைய கழல்கீழ்
வைப்பாய் கண்ணுதலே

*(இறைவன்பால் நம்மை ஒப்புவித்து அவன் ஆணைவழி அருளிய வண்ணம் நடப்பது உயிர்களின் கடமையாகும்.)*

என்றும், **குகை நமசிவாயர் பாடல்,**

ஐயா மரப்பாவை ஆடுவதும் சூத்திரிதன்
கைவாசியோ பாவை கற்றதோ - வெய்யவினை
என் இச்சையோ அருணை ஈசா படைத்து அளிக்கும்
உன் இச்சை அன்றோ உரை

*(உயிர்களின் கொடிய வினைக்குக் காரணம் உயிர்களின் விருப்பமோ? உயிர்களைப் படைத்துக் காப்பாற்றும் இறைவன் விருப்பமோ? உரைப்பாய்)*

அன்றியும்,

நீயே படைத்த உடன் நீ காப்பை காவென்ன
நாயேனுக்கு என்பொறுப்பு நாயகனே ஆயுமறைச்
சீர்கேட்கும் சோணகிரிச் சீமானே வைத்தவனை
நீர் கேட்குமோ மரங்கள் நின்று,

*(மரம் வைத்தவன் தண்ணீர் ஊற்றுவது போல, இறைவன் படைத்த உடலை அவனே காப்பான்.)*

என்றும், **தேவிகாலோத்தரம்,**

கடைபடும் உலகியல் தன்னைக் காண்குறீஇ
உடையவர் எனைஇலை யானுடையார் இலை
அடையவும் எனக்குஇலை யானும் அன்னதே
நடைஇது நிலைஎனின் தமியன் நான்அரோ

*(உலகில் உடைமையாக உடையது எதுவும் இல்லை. இறைவன் ஒன்றிலும் தோய்வின்றித் தனித்தவனாய் விளங்குவன்.)*

என்றும், **சிவபோகசாரம்,**

அன்றே அனாதி அமைத்தபடி அல்லாது ஒன்று
இன்றே புதிதாய் இசையுமோ - என்றும்
சலியாது இயற்றுவான் தன்னையே நோக்கி
மெலியாது இருந்து விடு

*(முதல்வன், உயிர்களுக்கு உடம்பைப் படைத்த அன்றே ஏனையனவும் படைத்தளித்தான் . உயிர்களிடம் கொண்ட கருணையால் சலிப்பின்றி செய்யும் இறைவன் செயலைக்கண்டு கவலையின்றி இருப்பாயாக)*

என்றும், **உப்பை**

கண் நுழையாக் காட்டில் கடுமுள் மரத்துக்கும்
உண்ணும் படிதண்ணீர் ஊட்டுவார் - எண்ணும்
நமக்கும் படி அளப்பார் நாரியோர் பாகர்
தமக்குத் தொழில்ஏது தான்

*(அம்மை அப்பரே உலக உயிர்களுக்குப் படியளப்பார்.)*

என்றும், **உறுவை,**

சண்டப்பைக்குள் உயிர்தன் தாய்அருந்தத் தான் அருந்தும்
அண்டத்து உயிர்பிழைப்பது ஆச்சரியம் - மண்டி
அலைகின்ற அன்னாய் அரன் இடத்தில் உண்மை
நிலைகண்டு நீ அறிந்து நில்

*(தாய் அருந்தும் உணவு கருப்பையில் உள்ள உயிர்க்கு உணவாவது போன்று உலக உயிர்களுக்கு தாயாகி இறைவன் வாழ வைக்கிறான்.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

ஊழின் வழியால் வரும் இன்பதுன்பங்களை யாவரு ஒருவரேனும் அனுபவியாது நீங்குதல் கூடாது என்று மேற்கூறுகின்றார்.

இரும்பூ ரணனின் மலன்வினை யெல்லா
மொருங்குணர்ந் தூட்டுமே லுந்தீபற
உண்ணா தொழிப்பதா ருந்தீபற 77

*இரும்பூ ரணநின் மலன்வினை எல்லாம்*
*ஒருங்கு உணர்ந்து ஊட்டுமேல் உந்தீபற*
*உண்ணாது ஒழிப்பது யார் உந்தீபற*

என்பது, மகத்துவமாகிய பூரணத்தையும் நிருமலன் ஆகையால் சுதந்திரத்தையும் முழுது உணர்தலையும், உடைய பரமேசுவரன் பல்லுயிர்களது வினைகளையும் அதற்கேற்ற தனுவாதிகளையும் ஏககாலத்து உணர்ந்து ஊட்டுமாயின் அவ்வினைப் பயன்களை அனுபவியாது நீங்குவது யாவரால் ஆவது என்றவாறு.

அஃது எங்ஙனமெனில், அனைத்து உயிர்க்கும் தத்தம் உபாய தந்திரத்தால் துன்பத்தை நீங்கி இன்பத்தைக் கூட வேண்டும் என்பது துணிவு ஆதலின் பகவான் உணர்ந்து கூட்டா நிற்கும் இன்ப துன்பங்களை ஒருவன் பற்றுதல் விடுதல் செய்வான் நினைத்தல் பழுது. அங்ஙனம் அன்று, எல்லா வினைகளும் சிவனே கூட்டுகின்றானோ அவனை அறியாமல் வரும் இன்ப துன்பங்களை நீங்க வேண்டாவோ? எனில் அப்பொருளுக்குக் [1]கர்த்திருத்தவமும், [2]சர்வஞ்ஞுத்துவமும் உண்டென்பது கூடாது. அங்ஙனம் உண்டாயினும் அப்பொருள் அறிந்து கூட்டா நிற்கும் இன்பத்தைக் கைப்பற்றித் துன்பத்தை உபாயத்தால் நீங்கி விடுவேன் எனில், அப்பொருள் பூரணன் ஆகையால் நீங்குதற்கு இடமே இல்லை. அங்ஙனமாயினும் அப்பொருளை அன்றி எழுவகைத் தோற்றத்தும், ஓரொரு சீவர்களால் வரும் இடையூறுகளை என் உபாயத்தினாலே நீக்கிக் கொள்வேன் எனில், எல்லா உயிர்களையும் கன்மத்து அளவில், இயக்கும் சுதந்திரன் சிவனேயாதலின், அவனையன்றி உனக்கும், பிறர்க்கும் இயங்குதல் கூடாது. இவ்வாறு சுதந்திர ஈனராகிய உன்னையும், பிறரையும் சுதந்திரராகப் பாவித்தல் [3]சிவ தூசணம் ஆதலின் சனன மரணங்களை ஒருக்காலும் நீங்குதல் கூடாது. ஆதலால், யாதோரிடத்தும் சிவத்தையே கண்டு யான் பிறரென்று காண்குதலை ஒழிந்து யாதொன்றுவரினும் எடுத்தவுடற்கு அடைத்த [4]பொறியளவே வந்து முடியா நிற்குமென்று தமது

1 - கடவுள் தன்மை, 2 - முற்றுணர்தல், 3 - சிவ நிந்தை, 4 - ஊழ்

மனோவாக்குக் காயங்கள் அசையாமல் அடங்கி நிற்பர் மெய் உணர்வு உடையோர் என்றதெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், **திருமந்திரம்,**

செத்தில்என் சீவில்என் செஞ்சாந்து அணிகில்என்
மத்தகத்தே உளிநாட்டி மறிக்கில்என்
வித்தகண் நந்தி விதிவழி அல்லது
தத்துவ ஞானிகள் தன்மை குன்றாரே

*(செத்தாலும், வாழ்ந்தாலும், நெற்றியில் சந்தனம் பூசினாலும், உளியினால் அடித்தாலும் ஞானிகள் தம் தன்மை குன்றார்.)*

என்றும், **குகை நமசிவாயர்,**

பேராயிரம் உடைய பெம்மானைச் சோணகிரி
ஆரா அமுதை அறியாமல் - வாராது
தீதும் நலமும் தெரியுங்கால் நெஞ்சமே
ஏதும் அவன்என்றே இரு

*(இறைவன் அறியாமல் நன்மை தீமைகள் ஏதும் நடைபெறா என்று நெஞ்சமே அமைதிகொள்க.)*

என்றும், **சிவஞானதீபம்,**

சித்தமுறு நினைவுரைகள் தொழில்பொய் வாய்மை
 தீமைநலம் விருப்புவெறுப்பு இன்பதுன்பம்
வைத்த புசிப்பு இகழ்ச்சி புகழ்தருமம் தானம்
 அடிமுயற்சி பேறிழவு மற்றும் எல்லாம்
அத்தன் அறிந்த அளவில் அவர்அவர்க்கு நாளும்
 மருங்கனவு நனவினும்நின்று அளிப்பது ஓரார்
தத்தம் அறிவான்நுகரும் கருத்தர் ஆகித்
 தடுமாறி உளம்மெலிந்து தளர்வர் அந்தோ

*(சிந்தித்தல், எண்ணம், செயல்கள், பொய், மெய், நன்மை, தீமை ஆகிய எல்லாவற்றையும் இறைவனே அளிக்கிறான் என்று கருதாத மக்கள் இன்பங்களை விரும்பி உள்ளம் தடுமாறித் தளர்கின்றனர்)*

அன்றியும்,

உடலில் இரு வினை உதவும் இதம் அகிதப் பயனால்
 உளவாகும் இன்பதுன்பம் உணவு ஒழியாது உயிர்க்கு

நடலைமருள் அறிவின் உடனாம் அருந்தில் அதுவே
நமன்தூதர் அருத்துவதா நணுகிடுமேல் வினையுஞ்
சடம் உடலம் வினைநுகராது அறிந்து உயிர்தான் அருந்தா
தலைவன் அவன் அவள்அதுவா நிலைமையினால் உயிர்கட்கு
இடம் உடனின்று அருத்துவன் என்று உணர்ந்துஅருளால் அருந்தில்
இறைபணியாம் எதிர்வினையும் எரிசேர் வித்தாமே

*(இறைவன், அந்தஅந்த உயிர்கள் நுகர வேண்டிய வினையை அறிந்து ஊட்டுவான் என்று உணர்ந்து, பதியின் திருவருள் வசமாகி ஒழுகி இன்ப துன்பங்களை நுகர்ந்தால் அது இறைபணியாகும்.)*

என்றும், **திருப்பனுவல்,**

ஈனனேன் உடற்கு இன்பதுன் பங்கள்நீ
ஞான பூரண நல்கவும் நானு னித்
தான் நினைப்பது என்னே சென்னித் தண்கிரி
வானுளோர் தொழும் மார்க்கண்ட லிங்கமே

*(எளியனேன் உடலுக்கு இன்ப துன்பங்கள் நீ, முழுஞானத்தை நல்குபவன் நீ, இனி நான் வேறு என்ன நினைப்பது?)*

அன்றியும்,

இன்ப துன்பம் எனக்குநீ நல்கவும்
அன்பு அகன்று இனி அல்லும் பகலும்நான்
உன்பிரதாபம் உணருதல் ஒவினேன்
மன்பராபர மார்க் கண்ட லிங்கமே

*(என்வினைக்கேற்ற இன்ப துன்பங்களை நீ தந்தாலும் அன்பு நீங்கி இரவு பகலும் இறைவனாகிய உனது பெருமையை உணராது இருந்தேன்.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

யான் பிறன் என்னும் பாவனை நீங்கும் அவதி கூறுகின்றார்.

உறும்பொழு தவ்வீ டொருதன் னுழப்பா
னுறும்பிறர் யானென்பொ யுந்தீபற
அலதொன் றினுமாறா துந்தீபற 78

*உறும் பொழுது அவ்வீடு ஒருதன் உழப்பால்*
*உறும்பிறர் யான்என் பொய் உந்தீபற*
*அலது ஒன்றினும் மாறாது உந்தீபற*

என்பது, ஒருவனுக்கு முத்தியடையும் காலையில் தவ்விருத்து உண்டாகிய யான் பிறன் என்னும் பொய்ப்பாவனை முயற்சியால் நீங்கா நிற்கும். அஃதன்றி மற்றொன்று ஆனாலும் அப்பாவனை நீங்கிச் சிவபாவனை தோன்றாது என்றவாறு.

அஃது எங்ஙனம் என்னில், ஈசுவரன் முழுது ஒருங்குணர்ந்தோன் ஆதலின் யாவர் ஒருவர் முத்தி அடையும் காலம் அவனான் மதிக்கப்படும். அங்ஙனம் அவன் நியமித்த காலத்தன்றி ஒருவர்க்கும் இடையே யான் எனது என்னும் பாவனை நீங்கி முத்தி கூடுதல் கூடுமோ எனில் கூடாது. ஆயின் இவ்வுபாய நிட்டை கூறியது யார்க்கு எனின்? நிருமலனாகிய பகவான் எல்லா உயிர்களது பருவமும் ஒருங்கே நியமித்து அதற்கு ஏற்ப வேதாதி நூல்களும் அன்றே கூறியது. ஆதலின் முத்தி அடையும் பருவம் உடையோர்க்கு அவரது மனத்தின் கண்ணே பொய்மை நீங்கி மெய்மை கூடுவதாகிய விழைவு தோன்றுதலின் அன்னோர்க்கு இத்திற நூல்கள் சம்மதமாய் இவைகளில் கூறியபடியே முயற்சி உண்டாகா நிற்கும். இஃது இன்னும் பிறத்தற்கு உரியோர்க்கு யான் பிறரென்னும் பொய்ப்பாவனை நீங்குதற்குரிய முயற்சி உண்டாகாமையால் பிறப்பு நீங்குவது இல்லை. ஆதலின் முத்திக்கு யான் பிறரென்னும் பாவனையைக் கெடுப்பதாகிய முயற்சியே நிமித்தம் எனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், **பட்டணத்துப் பிள்ளையார் பாடல்,**

**உழப்பின் வாரா உறுதிகள் உளவோ**
**[1]கழப்பின் வாரா கையறவு உளவோ**

*(உழைப்பில் பெற முடியாத பயன் என்று ஒன்றும் இல்லை, சோம்பலினால் வராத துன்பங்களும் இல்லை.)*

அன்றியும்,

நினையார் மெலியார் நிறை அழியார் வாளா
புனைவார்க்கும் கொன்றை பொதுவோ அனைவீரும்
மெச்சியே காண வியந்தில்லையான் அருளென்
[2]பிச்சியே நாளைப் பெறும்

1 - சோம்பல், 2 - பித்துடைய மகள்

*(இறைவனை நினைப்பவர்களுக்கும், கசிந்து உருகுபவர்களுக்கும் தில்லை அம்பலவாணன் அருள் கிட்டும்)*

என்றும், **குகை நமசிவாயர் பாடல்**

சும்மா கிடைக்குமோ சோணா சலன்பாதம்
அம்மால் விரிஞ்சன் அறிகிலார் - நம்மால்
இருந்து கதை சொன்னக்கால் என்னாகும்நெஞ்சே
பொருந்த நினையாதே போது

*(திருமாலும் நான்முகனும் அறியாத திருவடிப் பெருமையினை உடையவன் சிவபெருமான்)*

என்றும், **தத்துவராயர் பாடல்,**

ஒளியார் வளைகலை நாண்இழவார் உருவுந் திரியார்
தெளியாத பித்தென்று செப்ப இரார் நின்று தேங்கக் கண்ணீர்
குளியார் இனிய கொடிய என்னார் குரவன் சொரூபன்
அளியார் அலங்கல் எளிதோ புனையா அரிவையர்க்கே

*(வளைகழலுதல், ஆடை களைதல், நாணத்தை இழத்தல், உருவம் மாறுபடுதல், பித்து நிலை அடைதல், கண்ணீரில் நனைதல் இவை இறைவழிபாட்டின் மெய்ப்பாடுகள். இவையன்றி இறையருளைப் பெறுதல் அரிது.)*

அன்றியும்,

தொழிலானது உன்பணியாத் தோத்திரம் செய்து ஓவாது
அழலாகி நீ அஞ்சல் என்பாய் - எழிலார்
நிருபா திகனே நினையவும்நான் மாட்டேன்
சொரூபா என் செய்கேன் சொல்

*(அன்பரை அஞ்சல் என்பாய். நானோ உனை நினையாதவனாய் உள்ளேன். எங்ஙனம் உன் அருள் பெறுவேன்?)*

என்றும், **பிரமகீதை,**

திரமாம் அருத்தத்தினான் மைந்தரானும்
  தீராது அவற்றின்றி தியாகத்தினாலே
உரமான வேதாந்த மாவாக்கி யத்தால்
  உற்பன்னமாம் விச்சையால் நிச்சயத்தால்

பரமான அஞ்ஞான அந்தத்திலே அப்
படிஞான உபதேசம் ஒன்றாலுமே இப்
புரமாம் உடம்புக்குளே அந்த முத்திப்
பொருள்கண்டு வீடு எய்துவார் இப்புவிக்கே

*(ஆசை நீக்கம், நூல் உணர்வு, ஆன்றோர் வாக்கு ஆகியவற்றால் மெய்ஞானத்தை அடைந்தால் வீடு பேறு அடைவர்.)*

அன்றியும்,

உலத்தல் இன்றி ஒழிவற்றபொருள் உண்மை அதுவாம்
சலித்தல் இன்றியே தவத்தினர் தங்கண் எதிரே
திலத்தில் எள்நெய் அரணிக்கனல் ததிக்கண் நிகழ் நெய்
நிலத்தில் நீர்என நிகழ்ந்து வெளியாகி நிலையாம்

*(எள்ளில் எண்ணெயும், தீக்கோலில் கனலும் தயிரில் நெய்யும் நிலத்தில் நீரும் போல தம் உள்ளே விளங்கும் அழிவற்ற உண்மைப் பொருளை ஞானிகள் உணர்வர்)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

இனிப்பிறவா முடிவான பிறப்பிலே மெய்ஞ்ஞானம்
எளிதில் உண்டாம்
பனிச்சுடர் வெண்நித்திலங்கள் உத்தமமா மூங்கிலால்
படுவது உண்டோ
செனித்தவரின் மேலோராய் நல்லோராய் மித்திரராய்
தெளிந்தோர் ஆகி
அனித்தமறும் உத்தராய் ஞானிகளாம் குணம் எல்லாம்
அவரைச் சாரும்

*(உயிர்கள் பக்குவம் பெற்றால் மெய்ஞானம் எளிதில் உண்டாகும். அப்போது முத்தராய் ஞானிகளாகும் குணங்கள் எல்லாம் உயிரைச் சாரும்.)*

அன்றியும்,

சனனம் அஞ்சினர்க்கு அவருடை முயற்சியே சரணாம்
தினமும் இங்கு இவன்நான் எனும் சிறுமைதான் சிதையில்
அனகமாய் உலகு எங்குமாம் விசாலம் உண்டாகும்
மனன் உறத்தனது உயர்ச்சி தான் காண் புறவருமால்

*(இவ்வுலகில் அகப்புறப்பற்றுக்களாகிய சிறுமை நீங்கினால் பரந்த*

*அறிவுண்டாகும். உள்ளத்து அளவே உயிர் உயர்வு பெறும்)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

இப்பாவனா நிட்டையினது சிறப்பும் இதனால் வரும் பயனும் மேற்கூறுகின்றார்.

இப்பாவ னாநிட்டை மாயோக மீசற்கீ
தொப்பின்மா பூசையு முந்தீபற
உண்மையைக் கூட்டுமென் றுந்தீபற 79

*இப்பாவனா நிட்டை மாயோகம் ஈசற்கு ஈது*
*ஒப்பின் மாபூசையும் உந்தீபற*
*உண்மையைக் கூட்டும் என்று உந்தீபற*

என்பது, இங்ஙனம் கூறிய பாவனா நிட்டை மகாயோகம் என்று கூறப்படுவது. இஃது [1]அகண்ட ஆகார சுத்த சைதன்னிய சிவத்தை அர்சித்தது. இந்நிலை கைவரவே உண்மை நிட்டையும் எளிதில் கிடைக்கும் என்றவாறு.

இந்நிட்டையே மகாயோகம் என்பதற்குப் பிரமாணம், **திருப்புகழ்,**

ஐந்து பூதமும் ஆறுசமயமும் மந்திர வேத
புராண கலைகளும் ஐம்பதோர் விதமான லிபிகளும்
வெகுரூப அண்டர் ஆதி சராசரமும் உயர் புண்டரீகனும்
மேகநிறவனும் அந்திபோல் உருவானும் நிலவொடு
வெயில்காலும்
சந்திர சூரியர் தாமும் அசபையும் விந்து நாதமும்
ஏகவடிவம் தன் சொரூபம்அது ஆகி நிகழ்வது
சிவயோகம் தங்கள் ஆணவம் மாயை கருமமலங்கள் போய் உப
தேசபரகுரு சம்பிரதாயமொடு ஏயும் நெறியது பெறுவேனோ

*(மும்மலங்கள் நீங்கப்பெற்று அருள் வழங்கும் குருவினை அடைய தொன்று தொட்டு வருகின்ற நியமத்தை உயிர்பெற வேண்டும்.)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

பாசம் அன்றி உள்உணர்வைப் பதின்ஐங்கடிகை பூசிக்கில்
இராச சூயம் இலக்க நிகர் இவ்வாறு ஒருநாள் அருச்சிக்கில்

1 - எங்கும் பரவி நிற்கும் தூய கடவுள் தன்மை

ஆசுஇலாத பரஒளியில் அமரல் ஆகும் இதுதானே
ஏசுஇல் பரமயோகம் இதுதானே பரமகிரியையுமே

*(பாசமின்றி ஆத்ம ஞானத்தைப் பதினைந்து நாழிகை வழிபடுவது இலட்சுமி ராசசூய வேள்விக்கு ஒப்பாகும். இவ்வகையில் ஒரு நாள் வழிபடின் குற்றமற்ற ஞானத்தைப் பொருந்தலாம். இதுவே மேலான யோகமும் கிரியையும் ஆகும்.)*

என்றும், **அமுதசாரம்,**

யோகத்து அபாவம் எனும் யோகம் அது கைகூடின்
ஏகப்பொருள் அதனால் எய்தியிடும் - ஏகம்
அதுவாம் இதுஅன்று என் அவகண்டமான
அதுவாகை மாயோகமாம்

*(யோக நிலையில் 'நானே அது' என்பது கைகூடினால் ஒரே பொருளாகிய 'அது இது அன்று' என்று பிரிதல் இல்லாது, அதுவாக இருத்தல் மாயோகமாகும்.)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

இந் நிட்டையே சிவபூசையும் என்பதற்குப் பிரமாணம், **பிரமகீதை**

எப்பொருள் களும் தானாகி இலங்கிடும் அறிவாம் ஈசன்
அப்படி விளங்குகின்றது அறிதலே அவன் தனக்கு
மெய்ப்படு பூசை வேறோர் செயலினால் அன்று மெய்யே
இப்படி ஞானம் தன்னால் இறைஞ்சிடப் படுவான் ஈசன்

*(அறிவாகிய ஈசன் எல்லாப் பொருள்களுமாய் நிற்கிறான் என்று அறிதலே உண்மையான ஞானப்பூசையாகும்.)*

என்றும்,

ஆனது ஆகாத் தெய்வம் அதே அடையும் விடயம் இந்தியமாய்
தானும் ஆகித் தனைத்தன்னால் தானே நுகருந் தன்மைஅது
ஊனமாகும் ஞாதாதி ஒழிந்தே உள்ளே அறிவு அதனால்
தானேயாகக் கண்டிடுதல் சத்தாய் உள்ள பூசையதே

*(அறிபவன், அறிவு, அறிவது, என்ற முப்பிரிவுகளை ஒழித்து அறிவதனால் 'தானே பிரமம்' ஆகக் கண்டிருப்பது மெய்ஞ்ஞான பூசையாகும்)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

தேகமுதற் பிரிவுகளாய்ச் சிறியனவாம் பொருள்
களில்அத் தெய்வம் உண்டோ
பாகமறப் பணதியற அடிமுடிவற்று உள உணர்வே
பரம போதம்
ஆகலினால் அது தெய்வம் அருச்சித்தற்கு உரியதாகும்
அறிவு இலாத
மூகருக்கு வடிவுமுதல் அருச்சனையே இயல்பு என்று
மொழியும் அன்றே

*(பகுதியும் ஆதியும் அந்தமும் அற்று உள்ள பரந்த உணர்வே மேலான ஞானமாகும். அவ்வுணர்வே தெய்வத்தை வழிபடுதற்குரியதாகும்.)*

அன்றியும்,

அறிவு சமபாவனை சந்தோடம் எனு
மலர்களால் அந்தத் தேவாம்
பிறிவுஅறிய ஆத்துமதத்துவத்தை அருச்
சிப்பதே பெரிய பூசை
குறிவடிவில் பூசனை பூசனைஅல்ல அகண்டம்
எனக் கூறுந் தெய்வம்
நெறிகொள்புறத் தொழில்களால் நேராது இங்குஇதனாலே
நிறையும் இன்பம்

*(உள்ளத்தில் நினைத்து பூசை செய்வது பெரும் பூசை. வெறும் அடையாளங்களை மட்டும் வழிபடுவது, ஆயிரம் திருப்பெயர்களால் போற்றுவது நிறைவான இன்பத்தைத் தராது. )*

அன்றியும், **போதாமிர்தம்,**

ஓது பேதம் பேய்த்தேர் என்று உணர்தல்
அதுஒண் புனலாகும்
காதல் இன்பம் இடர்கனவு என்றிடலே
கருதுபுகை ஒளிதான்
வாதம் கழியமறித்து உணர்தன் மலர் பூண்
ஆடை மகிழ்சாந்தம்
ஏதம் இன்றி இருந்திடுதல் இறைவற்கு
எலையில் பூசையதே

*(இறைவனுக்கும் ஆன்மாவுக்கும் இடையே வேறுபாடு காண்பது பேய்த்தேரை ஒத்திருக்கும் என்று உணர்தல் இறைவனுக்கு நீராட்டு இன்ப துன்பங்கள் எல்லாம் கனவு என்று கருதுவது தூபதீபங்கள், ஒருமையுணர்வுடன் ஒன்றுதல் மலரணி முதலியவற்றைச் சாத்துதல் பூசனை ஆகும். எனவே இவ்வொழுக்கத்தில் நிலையாக நிற்றல் இறைவனுக்கு செய்யும் பூசனை ஆகும்)*

என்றும், **சிவானந்த மாலை,**

எங்குஞ் சிவஆலயமாம் எங்குஞ் சிவமாகும்
எங்குஞ் சிவன்அடிமை எங்குமாய்ப் - பங்கறவே
நிற்றல் சிவபூசை நின்றநிலையாய் நிறைவில்
பற்றுஒழிதல் பூசா பலம்

*(எங்கும் சிவன் கோயில்; எங்கும் சிவம்; எங்கும் சிவனடியார் என்ற ஒழுக்கத்தில் நிற்பது சிவபூசையாகும். இப்பூசையில் நிலையாக நிற்பின் அகப்புறப் பற்றுக்கள் நீங்கும்)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

பாராதி என்னுஞ் செய்யுள் தொட்டு இச்செய்யுள் காறும் பூரண பாவனா நிட்டை கூறியதெனக் கொள்க.

இப்பூரண பாவனை கூடாதார்க்கு மேலும் ஓர் குறிப்புப் பாவனை கூறுகின்றார்.

கொள்ளரி தேலக் குறியெம திவ்வுரு
வுள்ளத்தி னுள்ளேவைத் துந்தீபற
ஓங்கார முச்சரி யுந்தீபற 80

*கொள்ளரி தேலக் குறிஎமது இவ்வுரு*
*உள்ளத்தினுள்ளே வைத்து உந்தீபற*
*ஓங்காரம் உச்சரி உந்தீபற*

என்பது, முற்கூறிய பூரண பாவனைக்கண் மனம் நில்லாவிடத்து உன்னை ஆளும் பொருட்டாக நாம் கொண்டு அருளிய இக்குரு வடிவத்தை இதயத்தின் உள்ளே தியானம் செய்து அவ்விதயத்தினுள்ளே [1]பிரணவ அட்சரத்தை உச்சரி என்றவாறு.

---

*1 - ஓம் எனும் பேரெழுத்து*

பூரணனாகிய சிவன் ஒருவனுக்கு அனுகிரகம் செய்யும் இடத்துக் கொள்ளுந் திருமேனி குருவடிவே ஆதலாலும் மற்றொரு குறிப்பு வடிவங்களும் அவன் அருளால் பெறப்படுவது ஆதலானும், இங்ஙனம் குருவடிவே குறிப்பு உருவமாகக் கூறினார் எனக் கொள்க.

குருத்தியானத்திற்குப் பிரமாணம், **திருமந்திரம்,**

குருவே சிவம்எனக் கூறினன் நந்தி
குருவே சிவம் என்பது குறித்து ஓரார்
குருவே சிவமாகிக் கோனுமாய் நிற்குங்
குருவே உரை உணர்வு அற்றது ஓர் கோவே

*(குருவே சிவன். உரைஉணர்வு அற்ற நிலையில் நிற்பவரும் குருவே.)*

அன்றியும்,

கருடன் உருவம் கருதும் அளவில்
பருவிடம் தீர்ந்து பயம்கெடுமா போல்
குருவின் உருவம் குறிக்கொண்டு நோக்கத்
திரிமலம் தீர்ந்து சிவன் அவனாமே

*(குருவின் திருவடியினைச் சிந்தனை செய்தால் மும்மலப் பிணிப்பு நீங்கும்.)*

என்றும், **சிவானுபூதி விளக்கம்,**

சீர்உருவம் கொண்டு அருளும் தேசிகன் செம்மேனி போல்
ஓர்உருவம் கொண்டு அங்கு உணராது உணர்த்தினனோ

*(அருள் செய்யும் குருவின் ஒப்பற்ற திருமேனி, செம்மேனி கொண்டு ஆன்மாக்கள் உணராதவற்றை உணரச் செய்வான்.)*

என்றும்,

வந்த குருவடிவை வந்தித்துப் பூசித்துத்
தந்த சிவானுபவந் தான் அருந்தப் பெற்றனமே

*(குருவடிவில் வந்தவரை வணங்கிப் பூசனை செய்தால் அவர்தந்த சிவ அனுபவத்தை அருந்தும் பேறு பெற்றவராவோம்.)*

என்றும், **அமுதசாரம்,**

உள்ளத்தில் நின்றும் ஒளித்தான் பரன்குரவன்
கள்ளந்தனைத் தவிர்த்துக் காட்டினான் - வள்ளல்
அருவான கோலமோ அக்கோலம் காட்டும்
குருவான கோலமோ கூறு

*(இறைவன் உயிர்கள் உணராதவாறு உள்ளத்தில் மறைந்துளன், பின் மறைப்பை நீக்கி உருவைக் காட்டியவன். அருவும் உருவும் உடையவன்.)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

பிரணவம், உச்சரித்தற்குப் பிரமாணம், **திருமந்திரம்**

ஓம் என்னும் ஓங்காரத்து உள்ளே ஒருமொழி
ஓம் என்னும் ஓங்காரத்து உள்ளே உளபேதம்
ஓம் என்னும் ஓங்காரத்து உள்ளே உருஅரு
ஓம் என்னும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே

*(ஓம் என்று ஓதும் ஓங்காரத்துள் ஒப்பில் ஒருமொழி தோன்றும். அதில் உருவும் அருவும் தோன்றும். வேறுபாடுகள் பலவும் தோன்றும்)*

என்றும், **திருவாசகம்,**

உய்யஎன் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா

*(இறைவன், உள்ளத்துள் ஓங்காரமாய் நின்றவன்.)*

என்றும், **பிரமகீதை,**

தீ மரந்தொறும் அடைந்து அழிவுறாது தெரிவு
ஆகாமை நின்ற அரணியால் வடிவு காணும் அதுபோல்
ஆமுடம்பில் அழிவின்றி மறைகின்ற அமலன்
ஓமெனும் பொருள் உணர்ந்திட உடம்பில் வெளியாம்

*(மரங்களில் மறைந்த தீ, தீக்கடைக்கோலால் வெளிப்படுவது போன்று உடல் தோறும் மறைந்து நிற்கும் இறைவன், ஓம் எனும் பொருள் உணரும் காலத்து வெளிப்படுவான்.)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

**ஓங்கும் சின்மாத்திரப் பொருளாம் ஓங்கா**
**ரத்தை உள் நினைந்து**
**தூங்கும் தியான பரனாகித் தொடர்சங்கற்பம்**
**எல்லாம் போய்**
**வாங்கும் தொழில் ஏடணைஐயம் மனனம்**
**ஞான ஞேயம் இவை**
**தாங்கு ஞாதாஅனைத்தும் மறந்து இனிச்சித்**
**திரம்போல் நெடிது இருந்தான்**

*(உயர்ந்த அறிவுப்பொருளாம் ஓங்காரத்தை உள்ளே நினைத்து மனமாறுபாடுகளை ஒழித்து அறிபவன், அறிவு, அறிவது எனும் பாகுபாடுகளை நீக்கி நிட்டையிலிருக்க வேண்டும்.)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

**அஞ்சுமூன் றஞ்சக்க ராதியே தேனுநின்**
**வஞ்ச மருத்தோதென் றுந்தீபற**
**மனமிட்ட மானவொன் றுந்தீபற** 81

*அஞ்சு மூன்றுஅஞ்சு அக்கராதியே தேனும்நின்*
*வஞ்சம் அருத்து ஓது என்று உந்தீபற*
*மனம்இட்ட மான ஒன்று உந்தீபற*

என்பது [1]பஞ்சாட்சரி [2]அட்டாட்சரி முதலிய மந்திரங்கள் ஆயினும் உன் மனத்திற்கு இட்டமான ஒன்றை ஏகாக்கிர சித்தம் பொருந்தி உள்ளத்தினுள்ளே உச்சரிக்கக் கடவாய் என்றவாறு.

இதற்குப் பிரமாணம், **திருக்கடைக்காப்பு,**

**தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தினும்**
**வெம்மை நிரயம் விளைந்த போழ்தினும்**
**இம்மை வினையடர்த்து எய்து போழ்தினும்**
**அம்மையினும் துணைஅஞ்செழுத்துமே**

*(நோய்கள் வரும் போதும், உயிர் நீங்கும் போதும் கொடிய நரக துன்பத்தை அனுபவிக்கும் பொழுதும் செய்த வினை இம்மையில் துன்புறுத்தும் பொழுதும் துணையாவது திருவைந்தெழுத்தேயாகும்.)*

1 - திருவைந்தெழுத்து, 2 - திரு எட்டெழுத்து

என்றும், பெரியாழ்வார்,

ஏடு நிலத்தில் இடுவதன் முன்னம் வந்து
எங்கள் குழாம் புகுந்து
கூடு மனமுடையீர்கள் வரம்பொழில்வந்து
ஒல்லை கூடுமினோ
நாடும் நகரமும் நன்குஅறிய நமோநா
ராயணாய என்று
பாடும் மனம் உடைப் பத்தருள்ளீர் வந்து
பல்லாண்டு கூறுமினே

*(நமோ நாராயணாய எனும் எட்டெழுத்து மந்திரம் சொல்லிப் பாடி அருள் பெற வேண்டும்.)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

நிருமலாந்தக்கரணத்தின் பொருட்டு மேலும் கூறுகின்றனர்.

மந்திர நிட்டையின் றேல்வாயு வாதியாற்
சிந்தைதூய் தாவதற் குந்தீபற
செய்யோக மாதிய வுந்தீபற 82

*மந்திர நிட்டையின்றேல் வாய் ஆதியால்*
*சிந்தை தூய்து ஆவதற்கு உந்தீபற*
*செய்யோகம் ஆதிய உந்தீபற*

என்பது, இங்ஙனங் கூறிய மந்திர நிட்டைகளில் மனசு நில்லாவிடத்து அம்மனசு நிருமலமாய் நிலை கொள்வதன் பொருட்டு வாயுதாரணை முதலியவற்றால் யோகம் ஆதிய தவங்களை ஆயினும் செய்யக் கடவாய் என்றவாறு.

இதற்குப் பிரமாணம், **திருமந்திரம்,**

வாயு இருந்திட வாயு இருந்திடும்
மாயு இருந்திட காயம் இகுந்திடும்
காயம் இருந்தால் கருத்தும் இருந்திடும்
மேய அறிவுஉணர்வு உற்றால் வினை இன்றே

*(உடலில் காற்று இருந்திட உயிர் இருக்கும். அது அழிந்திட உடம்பும் அழியும்.)*

என்றும், **சிவதருமோத்தரம்,**

இந்திய விருத்தி எல்லாம் பிராணனே இயக்கவேயும்
இந்தியம் செயிக்க எண்ணில் பிராணனைச் செயிக்க பஞ்ச
இந்தியம் செயித்தார் தாமே எய்துவர் சமாதி தன்னை
இந்தியம் செயிக்க மாட்டார் எய்துவது ஏதும் இன்றே

*(உடல் கருவிகள் எல்லாம், உயிர்க்காற்று இயக்கவே இயங்கும். உடல் கருவிகளை வெல்ல எண்ணுபவர் மூச்சுக்காற்றைத் தம் கட்டுப்பாட்டுக்குள் கொணர்க. கருவிகளை வென்றோர் சமாதியை அடைவர்)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

ஆதலால் உயிரசைவால் வாதனைப்பால் அழுத்தத்தால்
அறிவை விரிவாக்காய் என்னில்
ஓதுபிறப்பறும் அறிவின் விரிவே உள்ளம் உள்ளத்தால்
இவ்வனந்த உயிர்கள் வாழ்வாம்
சேதனயோகிகள் எல்லாம் பிராணாயாமம்
தியானம் அருந்தூகத்தின் திறங்களாலே
பேதமனம் ஒடுங்குவது பொருட்டா அன்றோ
பிராணவாயுவை நிறுத்திப் பிடிக்கின்றாரே

*(யோகிகள் அனைவரும் தியானத்தினால் மருந்தினால் ஊகத்தினால் மன மடங்கும் காரணத்தினால் பிராணயாமம் செய்கிறார்கள்.)*

என்றும், **பிரபுலிங்க லீலை,**

ஓடும் ஆவை நிறுத்துறில் உள்ளுறக்
கோடு வாய்க்கலின் அத்தினைக்கொள்ளுவார்
நீடும் மாமனன் நிற்க நிறுத்துறில்
ஓடும் வாயுவை உள்ளுற ஈர்ப்பரால்

*(ஓடும் குதிரையை நிறுத்துவதற்குக் கடிவாளத்தினைப் பிடிப்பது போன்று மனதினை அடக்க வெளிச்செல்லும் மூச்சுக்காற்றை உடலினுள் அடக்குவர்.)*

அன்றியும்,

வாயு நிற்ப மனன்நின்று மனந்தான்
நிற்பப் பொறிநின்று

பாய பொறிகள் நிற்ப இடப்படுபுன்
புலன்கள் நின்றனவால்
ஆய புலன்கள் நின்ற மையால்
அகிலம் தோன்றாது உள்ளத்தே
தூய பரமானந்த பரஞ் சோதி
தோன்றக் கண்டிருந்தார்

*(காற்று, மனம், பொறிகள், புலன்கள் அடங்க உலக இன்பங்கள் தோன்றாது உள்ளத்தின் கண் பேரானந்த பரஞ்சோதி தோன்றக் கண்டு இன்புற்று இருக்கலாம்.)*

என்றும், **திருவுந்தியார்,**

காற்றினை மாற்றிக் கருத்தைக் கருத்தினுள்
ஆற்றுவது ஆற்றல் என்று உந்தீபற
அல்லாதது அல்லல் என்று உந்தீபற

*(யோக நிலையில் மூச்சினைஅடக்கி மனதினை ஒருமுகப்படுத்தி இறைவனிடம் மனதினைச் செலுத்தி வழிபட்டு நிற்க வேண்டும்.)*

என்றும், மற்றும் வருவனவற்றால் காண்க.

அத்தன்மையும் கூடாதார்க்குப் பின்னும் கூறுகின்றார்.

அயனாதி மூவரு மாங்கவர் தம்ம
தியைதரு வேடமு முந்தீபற
எல்லாமு மியாமெம துந்தீபற 83

*அயன்ஆதி மூவரும் ஆங்குஅவர் தம்அது*
*இயைதரு வேடமும் உந்தீபற*
*எல்லாமும் யாம்எமது உந்தீபற*

என்பது, அயன், அரி, அரன் என்னும் திரிமூர்த்திகளும் அம்மூர்த்திகளது வேடங்களும் யாமும் எனது வேடமும் பிறிதன்று எனக் கொள்வாய் என்றவாறு.

எல்லாமும் யாம் எமது என்றமையால் [1]சிருட்டியாதி கிருத்தியங்களைப் பண்ணு மூர்த்திகளாயும் அம்மூர்த்திகட்கு எல்லாம் காரணமாயும் நிற்பது ஒரு சிவமே என்றது எனக்கொள்க.

1 - படைத்தல் முதலான முத்தொழில்கள்

இதற்குப் பிரமாணம், **திருக்கடைக்காப்பு,**

படைத்து அளித்து அழிப்பமும் மூர்த்திகள் ஆயினை

*(இறைவன் படைத்தல், காத்தல், அழித்தல், எனும் முத்தொழில்களை இயற்றி மும்மூர்த்தி ஆயினான்.)*

என்றும், **தேவாரம்**

ஆதியும் அரனாய் அயன்மாலும் ஆய்ப்
பாதி பெண்ணுருவாய் பரமன் என்று
ஓதி உள்குழைந்து ஏத்தவல்லார் அவர்
வாதை தீர்த்திடும் வான்மியூர் ஈசனே

*(இறைவன், தம்மை ஓதி உணர்ந்து ஏத்த வல்லமை உடையவர்களின் துன்பங்களை தீர்த்திடுவான்.)*

என்றும், **திருப்பாட்டு,**

வாழ்வர் கண்டீர்நம் முளைவர் வஞ்சமனத் தீரே
யாவராலும் இகழப்பட்டஅங்கு அல்லலில் வீழாதே
மூவராயும் இருவராயும் முதல்வன் அவனேயாம்
தேவர் கோயில் எதிர்கொள் பாடிஎன்பது அடைவோமே

*(ஐம்புலன்களால் தீமையை எய்தி அல்லலில் விழாது இருக்க வேண்டும். எனவே இறைவனைச் சென்று வணங்கு)*

என்றும், **திருவாசகம்,**

சுந்தரத்து இன்பக்குயிலே சூழ்சுடர் ஞாயிறுபோல
அந்தரத்தே நின்று இழிந்து இங்குஅடியவர் ஆசை அறுப்பான்
முந்தும்நடுவும் முடிவும் ஆகிய மூவர் அறியாச்
சிந்துரச் சேவடி யானைச் சேவகனை வரக்கூவாய்

*(குயிலே! மண்ணுலகில் உள்ள அடியார்களது பற்றுக்களை ஒழிப்பவனும் மூவராலும் அறிய முடியாத இறைவனை வரும்படியாகக் கூவி அழைப்பாயாக.)*

என்றும், **திருவாய்மொழி**

திருமால் நான்முகன் செஞ்சடையான் என்றுஇவர்கள்எம்
பெருமான் தன்மையார் அறிகிற்பார் பேசிஎன்

ஒருமா முதல்வா ஊழிப் பிரான் என்னை ஆளுடைக்
கருமா மேனியன் என்பன் என் காதல் கலக்கவே

*(திருமால், பிரமன், சிவன் பெருமையினை எவரும் அறியமாட்டார்.)*

என்றும், **பிரமகீதை,**

புருடன் என்று உரை செயப்படுவது பரி
பூரணம் ஆகின்ற
சொரூப நின்றவா நிற்க இங்கு அருளொடு
தோன்றவல்லவன் தானே
அரனும் அன்றுமால் அயனும்அன்று எவர்க்கும்உள்
ஆகியே யாவர்க்கும்
தெரிவரும் சிவன் அவனை இங்கு ஒருங்கிய
சிந்தையார் தெளிவாரே

*(பரிபூரணமாய் நிற்கும் இறைவனை மனம் ஒருமைப்பட்ட சிந்தையுடையவர்கள் தெரிந்துகொள்வர்.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

இங்ஙனம் கூறிய திரிமூர்த்திகளினும் அவர் அவர் வேடமாகிய கணங்களினும் வழிபடு முறைமை மேற்கூறுகின்றனர்.

எத்தேவை நாமென் றிசைந்தா யதைத்தொழு
சத்திய பத்தியா லுந்தீபற
தனுவாதி யைக்கொடுத் துந்தீபற 84

*எத்தேவை நாம்என்று இசைந்தாய் அதைத்தொழு*
*சத்திய பத்தியால் உந்தீபற*
*தனுஆதியைக் கொடுத்து உந்தீபற*

என்பது இங்ஙனம் கூறிய முத்தேவர்கள் உள்ளும் அவரவர் வேடங்களுள்ளும் யாதொரு வடிவத்தை நீ சிவமென்று துணிந்தாய் அந்த வடிவத்தையே நாள்தொறும் வழிபடக் கடவாய். சத்திய பத்தியால் மனவாக்குக் காயத்தை அர்ப்பணம் செய்து என்றவாறு.

சத்தியபத்தி என்றது உலகர் சான்று ஒழிந்து தேவதை சான்றாக வழிபடும் இடத்துத் தனுவாதிகளை அர்ப்பித்துத் தலை

நிற்றல் எனக் கொள்க. தனுவாதி என்றது உடல், பொருள், ஆவி என்பாரும்உளர். இது துறவிக்குக் கூறியது ஆகலின் அது சிறப்பன்று எனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், **தேவாரம்,**

உள்ளம் உள்கலந்து ஏத்தவல்லார்க்கு அலால்
கள்ளம் உள்ளவருக்கு அருள்வான் அலன்
வெள்ளமும் அரவும் விரவும் சடை
வள்ளலாகிய வான்மியூர் ஈசனே

*(வான்மியூர் ஈசன், உள்ளம் கலந்து ஏத்த வல்லவர்க்கு அன்றி கள்ளம் உள்ள வழி இரங்குவான் அல்லான்.)*

என்றும், **திருவாய்மொழி,**

உணர்ந்து உணர்ந்து இழிந்துஅகன்று
உயர்ந்து உருவிஅந்த இந்நிலைமை
உணர்ந்து உணர்ந்து உணரினும்
இறைநிலை உணர்வு அரிது உயிர்காள்
உணர்ந்து உணர்ந்து உரைத்து உரைத்து
அரிஅயன் அரன் என்னும் இவரை
உணர்ந்து உணர்ந்து உரைத்து உரைத்து
இறைஞ்சுமின் மனப்பட்டது ஒன்றே

*(உணர்வுடை மக்களே! அரி, அரன், அயன் எனும் இவரை நெஞ்சால் நினைத்து வாயால் புகழ்ந்து வாழ்த்தி வணங்குங்கள்.)*

அன்றியும்,

மகிழ்கொள் தெய்வம் உலோகம் அலோகம்
மகிழ்கொள் சோதி மலர்ந்த அம்மானே
மகிழ்கொள் சிந்தைசொல் செய்கை கொண்டுஎன்றும்
மகிழ்வுற்று உன்னை வணங்க வாராயே

*(தெய்வமே! காணும் பொருள்களிலும் காணா உயிர்களிலும் பரந்துள்ள உன்னை, மனமகிழ்வுடன் வணங்க வேண்டும்.)*

என்றும், **சிவஞானசித்தியார்,**

மனமது நினைய வாக்கு அழுத்த மந்திரங்கள் சொல்ல
இனமலர்கையில்கொண்டு இங்கு இச்சித்த தெய்வம் போற்றிச்

சினமுதல் அகற்றி வாழும் செயல் அறம்ஆனால் யார்க்கும்
உனம் ஒரு தெய்வம் எங்கும் செயற்கும் முன்னிலையாம் அன்றே

*(தன் மனதிற்கு ஏற்ற இறைவனை நினைந்து வழிபடும் செயலாகிய அறம் இருந்தால், தொல்லோன் ஆகிய இறைவன் அத்தெய்வத்தினிடம் நின்று பயனளிப்பான்.)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க.

யாதொரு போக மோட்சம் அன்பினால் அன்றி மற்று ஒன்றால் யாவர்க்கும் அடைதல் கூடாது என்று மேற்கூறுகின்றார்.

நெய்யின்றி யாக முடியுமே னீடுபே
ரைவகை யாகமு முந்தீபற
அன்பின்றி யாகுமென் றுந்தீபற 85

*நெய்இன்றியாக முடியுமேல் நீடுபேர்*
*ஐவகை ஆகமும் உந்தீபற*
*அன்புஇன்றி ஆகும் என்று உந்தீபற*

என்பது, யாதும் ஓரிடத்து ஆயினும் நெய்இன்றியாகம் முடியுமாயின் கருமயாகம்,தவயாகம், மந்திரயாகம், பாவனாயாகம், ஞானயாகம் என்று இங்ஙனம் கூறிய ஐவகை யாகமும் அன்பின்றி ஒருவனுக்கு முடியும் என்றவாறு

இதனால் போக மோட்சத்திற்கு எல்லாம் ஆதரமே காரணம் என்றது ஆயிற்று,

இதற்குப் பிரமாணம், **திருவள்ளுவர்,**

அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்ஆர்வலர்
புன்கண் நீர் பூசல்தரும்

*(அன்பு கொண்டாரது துன்பம் கண்டு கண் பொழிகின்ற கண்ணீரே மனத்துள் நின்ற அன்பினை வெளிப்படுத்தும்.)*

என்றும், **திருமந்திரம்,**

அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலர்

அன்பேசிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே

*(அன்பே சிவம் என்று அறிந்தபின் இடையறாது திருவடிக்கண் வைக்கும் அன்பாகிய வித்தே சிவமாய் விளையும் இன்பக்கனியாகும்)*

என்றும்,

என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போல் எரியில் பொரிய வறுப்பினும்
அன்போடு உருகி அகம் குழைந்தார்க்கு அன்றி
என்பொன் மணியினை எய்த ஒண்ணாதே

*(உயிர்களிடம் அன்புடையவரே இன்பமாகிய சிவனைப்பெறுவர். அன்பிலார் எலும்பினை விறகாக கொண்டு இறைச்சியைத் தானே அறுத்து கனலில் வறுக்கும் இயல்பினர் ஆவார்.)*

என்றும், **தேவாரம்,**

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவும் நீரும் கண்டு
நக்கு நிற்பன் அவர்தமை நாணியே

*(நெகிழ்ந்து நினைப்பவர் நெஞ்சுளே புகுந்துநிற்கும் இறைவன், பொய்மையாளர் பூசையில் பூவையும் நீரையும் கண்டு அவர் தம்மை நாணச் சிரிப்பான்.)*

என்றும், ***திருப்பாட்டு,***

இன்பம் உண்டேல் துன்பம் உண்டு ஏழைமனை வாழ்க்கை
முன்பு சொன்னேன் மோழைமையான் மொட்ட மனத்தீரே
அன்பர் அல்லார் அணிகொள் கொன்றை அடிகள் அடிசேரார்
என்பகோயில் எதிர்கொள் பாடி என்பது அடைவோமே

*(நெஞ்சமே! இறைவன் திருவடியினை இறையடியார் இன்றிப் பிறரால் அறியமுடியாது. போலி வாழ்வை நீக்கி இறைவனை வணங்குவோம்.)*

என்றும், **திருவாசகம்,**

பத்தி வலையில் படுவோன் காண்க

*(பத்தியாகிய வலையில் இறைவன் அகப்படுவான்)*

அன்றியும்,

தேவதேவன் மெய்ச் சேவகன் தென் பெருந்துறை நாயகன்
மூவராலும் அறிஒணா முதலாய ஆனந்த மூர்த்தியான்
யாவராயினும் அன்பர் அன்றி அறியொணாமலர்ச் சோதியான்
தூய மாமலர்ச் சேவடிக்கண்நம் சென்னி மன்னிச் சுடருமே

*(திருப்பெருந்துறைத் தலைவனின் தாமரைத் திருவடியின் கீழ் நமது தலை நிலைப்பெற்று நின்று விளங்கும்.)*

என்றும், **திருவாய்மொழி,**

நீர்மையின் நூற்றுவர் வீயவை ஐவர்க்கு
அருள்செய்து நின்று
பார்மல்கு சேனைஅவித்த பரஞ்சுடரை
நினைந்து ஆடி
நீர்மல்கு கண்ணினர் ஆகி நெஞ்சம்
குழைந்து நையாதே
ஊர்மல்கிமோடு பெருப்பார் உத்தமர்கட்கு
என் செய்வாரே

*(இறைவனை நினைந்து கண்ணீர் சிந்த மனம் உருகிப்பாடிப் பரவ வேண்டும்.)*

அன்றியும்,

அமரர் தொழப் படுவானை
அனைத்து உலகுக்கும் பிரானை
அமர மனத்தினுள் யோகு புணர்ந்தவன்
தன்னோடு ஒன்றாக
அமரத் துணிய வல்லார்கள் ஒழிய
அல்லாதவர் எல்லாம்
அமர நினைந்து எழுந்து ஆடி
அலற்றுவதே கருமம்மே

*(குருக்கூர்ச் சடகோபனின் சுவை மிகு ஆயிரம் பாசுரங்களில் இந்த பத்தினையும் கற்க வல்லவர்கள் வானவர் போன்று உயர்விலே தமது பிறவிச் சிறை நீங்குவர்.)*

என்றும், **சிவதருமோத்தரம்,**

ஆதரவே பரமான அறம் அதாகும் ஆதிநடு
அந்தம் இவற்று அனைத்தும் ஆகும்
ஆதரவற்ற வர்ஈகை அறம்அது ஆகாது ஆதலினால்
ஆதரவே மூலமாகும்
ஆதரவே பிரகிருதி ஆன்மா ஈசன் எனும்
பொருளும் அறிவிக்கும் அமலன் தாளும்
ஆதரவே அடைவிக்கும் ஆதலாலே அனைத்தினுக்கும்
ஆதரவே மூலமாமே

*(அன்பே அறம், அதுவே தொடக்கமும் நடுவும் முடிவுமாகும், அன்பே இறைவனைக் காட்டுகிறது. அன்பே இறைவனடி சேர்க்கும் ஆற்றலுடையது.)*

என்றும், **அனுபவசாரம்,**

அன்புஇலாத நல்அறங்களும் ஐவகை
வேள்வியும் பிணமேயாம்
அன்பில் வாய்மையும் தானமும் ஒழுக்கமும்
விரதமும் பிணமேயாம்
துன்பின் ஞானமும் துகளில் எச்சமயமும்
சொல்லிடின் பிணமேயாம்
அன்பில் ஆதிய அறம்பொருள் இன்பம்
வீடு அவற்றினுக்கு உயிருண்டோ

*(அன்பு இல்லாத அறம், ஐவகை வேள்வி, வாய்மை, ஞானம், ஒழுக்கம், விரதம், முதலியன பயனற்றவை என்றவாறு.)*

என்றும், **சொருபானந்த நிலையம்,**

அன்புஅது ஒன்றும் மற்று அருஞ்சிவம் ஒன்றும் என்று
அறிபவர் அறிவில்லார்
அன்பதே சிவமாய் இருந்தமை அறிந்தவர்
இறை அருள் பெற்றார்
துன்ப அவன் பவந்துவங்களில் வீடுஎனச்
சொல்லிடும் அவை எல்லாம்

அன்பதாம் அமுதினை முழுந்துஇடவுணா
   அயலவர் உரை தானே

*(அன்பே சிவமாய் இருப்பதை அறிந்தவர் இறை அருள் பெற்றவராவார். உடலை வருத்தும் தவங்களால் வீடுபெறலாம் என்பது அன்பாகிய அமுதத்தினைப் பருகாத அயலவர் உரையாகும்.)*

என்றும், **மெய்ஞான விளக்கம்,**

தூமம்அது எங்கு உளது அங்கனல் அதாமாறு
ஏமம்உறவே இறைவன் ஆளும் அவர் பாலும்
தாம் அமைவிலாது உருகு தன்மையர் உளத்தே
யாம் இறைவனார் அரியதாளும் எனவோரே

*(புகையுள்ள இடத்தில் நெருப்பு இருப்பது போன்று இறைவனை நினைந்து உருகுபவர் உள்ளத்தில் அவனது திருவடியிருக்கும் என்பதனை அறிவாயாக)*

என்றும், **மெஞ்ஞானநிலையம்,**

முழுதும் தன்னையே தழுவிட நழுவிடு
   மூலமாம் இறைவந்து
பழுதுஒன்று இன்றிய பத்தி நல்வலையினில்
   படும்எனும் அது கண்டால்
எழுது கல்வியும் இலங்கு நல்தவங்களும்
   யோக ஞானமும் எங்கே
அழிவு ஒன்று இன்றிய அன்பினன் பெருமையை
   அறையவும் முடியாதே

*(ஆதிமூலமாகிய இறைவனைத் தழுவி குற்றமில்லாத அன்பெனும் பக்தி வலையில் அகப்படுதல் வேண்டும்.)*

என்றும், **திருகளிற்றுப்படியார்,**

**அன்பே என்அன்பே என்றுதன்பால் அழுதுஅரற்றி**
**அன்பே அன்பாக அறிவு அழியும் - அன்புஅன்றித்**
**தீர்த்தந் தியானம் சிவார்ச்சனைகள் செய்யும் அவை**
**சாத்தும் பழம் அன்றே தான்**

*(அன்பினால் அழுது அரற்றி அறிவும் உணர்வும் இழந்து இறைவன் மீது அன்பு கொள்ளுவது இறைவனை அடைவதற்குரிய நெறியாகும்.)*

என்றும், **சிவானந்தமாலை**

> சீரார் பதினெண் புராணம் செழுமறைநூல்
> ஆராத ஆகமம் கற்று ஆய்ந்து அறிந்து நேராகச்
> சங்கரன் தாள்இணைக் கீழ் அன்பிலனேன் சண்டாளன்
> அங்கையினில் பாகீரதி

*(எத்தனைக் கற்றவனாக இருந்தாலும் இறைவனின் திருவடிக் கிழ் அன்பில்லாதவன் சண்டாளன் ஆவான்.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

அன்போடு கூடாத நெஞ்சிற்கு உணர்த்துதல் மேல் கூறுகின்றார்.

> அஞ்சிவக் கன்புறா தைம்புலக் கோடுமே
> னெஞ்சிற் கறிவுறுத் துந்தீபற
> நீதுணை யல்லையென் றுந்தீபற 86

> *அச்சிவக்கு அன்புறாது ஐம்புலக் கோடுமேல்*
> *நெஞ்சிற்கு அறிவுறுத்து உந்தீபற*
> *நீதுணை அல்லை என்று உந்தீபற*

என்பது, எல்லாச் சிறப்பினையும் உடைய சிவத்திற்கு அன்பு செய்யாது குற்றத்தினை விளைப்பதாகிய ஐம்புல விடங்களை இச்சித்து உன்னுடைய நெஞ்சம் செல்லும் ஆயின் அதனை நோக்கி நித்தியானந்தத்தினை நீத்துச் சிறிதாய் அழிதரும் சத்தாதி விடயத்தைக் கருதா நிற்கும் நெஞ்சமே, நீ எனக்குத் துணையாகக் கடவாயோ அல்லை என்று வலியுறுத்தி அறிவுறுத்து என்றவாறு.

இதற்குப் பிரமாணம், **திருவாசகம்,**

> ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கு அன்பிலை என்புஉருகிப்
> பாடுகின்றிலை பதைப்பதும் செய்கிலை பணி இலை பாதமலர்
> சூடுகின்றுஇலை சூட்டுகின்றதும்இலை துணையிலி பிணநெஞ்சே
> தேடுகின்றிலை தெருவுதோறு அலறிலை செய்வது ஒன்று அறியேனே

*(நெஞ்சமே! இறைவன் திருவடிக்கு அன்புஇன்றி, பாடுதலும் கூத்தாடலும் வணங்கலும் மலர்சூட்டுதலும் அலருதலும் செய்யவில்லை.)*

என்றும், பட்டணத்துப் பிள்ளையார்,

பேசு வாழி பேசு வாழி
ஆசையொடு மயங்கி மாசுஅறு மணமே
பேசு வாழி பேசு வாழி
கண்டன மறையும் உண்டன மலமாம்
பூசின மாசாம் புணர்ந்தன பிரியும்
நிறைந்தன குறையும் உயர்ந்தன பணியும்
பிறந்தன இறக்கும் பெரியன சிறுக்கும்
ஒன்று ஒன்று ஒருவழி நில்லா அன்றியும்
செல்வமொடு பிறந்தோர் தேசொடு திகழ்ந்தோர்
கல்வியில் சிறந்தோர் கடுந்திறன் மிகுந்தோர்
கொடையில் பொலிந்தோர் படையில் பயின்றோர்
குலத்தின் உயர்ந்தோர் நலத்தினின் வந்தோர்
எனையர் எங்குலத்தினர் இறந்தோர் அனையவர்
பேரு நின்றில போலும் தேரின்
நீயும் அஃது அறிதி யன்றேமாய்ப்
பேய்த்தேர் போன்று நீப்பரும் உறக்கத்துக்
கனவே போன்று நனவு பெயர் பெற்ற
மாய வாழ்க்கையை மதித்துக் காயத்தைக்
கல்லினும் வலிதாக் கருதிப் பொல்லாத்
தன்மையர் இழிவு சார்ந்தனை நீயும்
நன்மையில் திரிந்த புன்மையை ஆதலின்
அழுக்குடைப் புலன்வழி இழுக்கத்தின் ஒழுகி
வளைவாய்த் தூண்டிலின் உள்ளிரை விழுங்கும்
பன்மீன் போலவும்
மின்னுபு விளக்கத்து விட்டில்போலவும்
ஆசையாம் பரிசத் தியானைபோலவும்
ஓசையின் விளிந்த புள்ளுப் போலவும்
வீசிய மணத்தின் வண்டு போலவும்
உறுவது உணராச்செறிவுழிச் சேர்ந்தனை
நுண்ணூல் நூற்றுத் தன்னகப் படுக்கும்
அறிவில் கீடத்து [1]நுந்துழி போல
ஆசைச் சங்கிலிப் பாசத்தொடர்பட்டு
இடர்கெழு மனத்தினோடு இயற்றுவது அறியாது
குடர்கெழு சிறையறைக்கு உறங்குபு கிடத்தி
கறவை நினைந்த கன்றெனா இரங்கி
மறவா மனத்து மாசுஅறும் அடியார்க்கு

1 - கூடு

அருள்சுரந்து அளிக்கும் அற்புதக் கூத்தனை
மறையவர் தில்லை மன்றுள் ஆடும்
இறையவன் என்கிலை என் நினைந்தனையே

*(மாசு கொள்ளும் மனமே! பேசுவாயாக! ஐம்புலனை அடக்கி நம் வழியில் அவற்றைச் செலுத்த வேண்டும். ஆசையெனும் சங்கிலிப் பாசத்தால் இடர்ப்பட்டு சீரழித்து சிறையின் அறை போன்று உடம்பினுள் வளைந்து கிடக்கின்றாய். ஈசனை வணங்கவில்லையே! மனமே என்ன நினைத்தாய்?)*

என்றும், **தத்துவராயர்,**

மற்றிலை பற்று என்று வாழ்வித்த நாதன் மலர்அடியைப்
பற்றிலை மற்று ஒன்றைப் பற்றாது ஒழிந்திலை பற்றிஒன்றும்
பெற்றிலை ஆயினும் பேய்த்தேரை நீர்எனும் பின்தொடர்ச்சி
அற்றிலை என்செய்கின்றாய் நெஞ்சமே அழிந்து அற்றனையே

*(நெஞ்சமே! வாழ்வித்த இறைவன் திருவடியைப் பற்றாகப் பற்றாது. ஏனைய பற்றுக்களைப்பற்றி என்ன பயன்? வீணே துன்புற்று அழிந்தாய்)*

அன்றியும்,

நின்பெற்றி தன்னை நினைக்க உண்டோ
நெஞ்சமே நிறையப்
பொன்பெற்று வைத்தும் பொதிந்து கொள்ளாய்
புன் குரம்பையிலே
தன்பெற்றி தன்னைத் தருந்தம் பிரான்
வந்து சார்ந்திருப்ப
என்பெற்று நீயிந்தியஞ் சொன்ன
வாசெய் திளைக்கின்றதே

*(நெஞ்சமே! தன்னையே தரும் இறைவன் துணையிருந்தும் நீ பொறிபுலன்களுக்கு அடிமைப்பட்டு இளைக்கின்றாய்.)*

என்றும், **மூலசித்தி,**

அன்பிலா நெஞ்சம் அரும்பிணி எனவும்
அளவிலாப் பகை நமக்கு எனவும்
துன்பமார் சோக மோகமே முதலாம்
துயர்எலாம் விளைநிலம் எனவும்

இன்பவீடுஎய்தாது இடற்கு இடையூறாம்
இருளும் என்று இயம்புவர் பெரியோர்
துன்பிலா இறைவர்க்கு அன்பிலா நெஞ்சே
துணையலை துணையலை எனக்கே

*(இறைவனிடம் அன்பில்லாத நெஞ்சம், அரும்பிணி, மிகுபகை ஆகும். சோக மோகங்களாகிய துயர்களை விளைவிக்கும் நிலமுமாம் வீடுபேற்றிற்குத் தடையான இருளாகும். எனவே நீ எனக்கு துணை.)*

என்றும், **அனுபவசாரம்,**

புலையுறு செயலால் புலனுறு போகப்
புகலரும் விடத்தையே நுகர்தற்கு
அலமரு கவலைக் கடலுளே தலைகீழ்
ஆகவே விழுந்தழி நெஞ்சே
கலைகளின் உணர்வுக்கு அரிய நற்சொரூபன்
கழல்களை நினைந்து நைந்து உருகி
எலையறும் அன்பாம் அமுதினை விரும்பாது
ஏதுகொண்டு என்செய்தாய் கெடுவாய்

*(நெஞ்சமே! இறைவனது திருவடிகளை நினைந்து நைந்து உருகி அன்பாம் இறைவனை விரும்பாது பயனின்றி அழிகின்றாய்.)*

என்றும், **போதரத்நாகரம்,**

காயநீர்க் குமிழியதில் உறும்இன்பம்
கானலில் புனல்அது தனக்குஅங்கு
ஆயஅத் துயரம் அளவிலை அதுநீ
ஆய்உறாமையின் அழிந்தற்றாய்
நீஇனிக் கவலை மயல்களைத் தவிர்ந்து
நெஞ்சமே வந்தெனக்கு உடன்பட்டு
ஆயநற் சொரூபற்கு அன்புஅதே புரியில்
அரியதுஏது? ஆர் நமக்கு எதிரே

*(நெஞ்சமே! உடல் நீர்க்குமிழி, துன்பமோ கானல் நீர், உடல் துயர் அழிவில்லாதன. என்பதனை அறியாது அழிந்தாய். இனி மயக்கங்களைத் தவிர்த்து இறைவனுக்கு அன்பு செய்ய உடன்பட்டால் அரியப்பொருள் எது?)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

பின்னும் சத்தாதி விடயத்தால் குற்றமே என்று வலியுறுத்திக் கூறுகின்றார்.

அசுணாதிக் கோரொன்றா லைம்புல னானு
மிசையுமேற் கேடெமக் குந்தீபற
எங்ஙன முய்துமென் றுந்தீபற 87

*அசுண்ஆதிக்கு ஓர்ஒன்றால் ஐம்புலனானும்*
*இசையு மேல்கேடு எமக்கு உந்தீபற*
*எங்ஙனம் உய்தும் என்று உந்தீபற*

என்பது, அசுணப்புள் யானை, விட்டில், மீன், வண்டு என்பன ஐந்தும் சத்தாதி விடயங்களில் வளைவாய்த் தூண்டிலினுள் இரை விழுங்கும் பன்மீன் போலவும், மின்னுபு விளக்கத்து விட்டில் போலவும் ஆசையாம் பரிசத்தியானை போலவும், ஓசையின் விளிந்த புள்ளுப் போலவும், வீசிய மணத்தின் வண்டுபோலவும், ஓரொன்றாலே கேடு அடையா நிற்கும். எமக்கு ஐம்புலனாலும் கேடு வருமாயின் அவற்றினை நீங்காவிடத்து எங்ஙனம் உய்குவம் நெஞ்சமே என்றவாறு.

இதற்குப் பிரமாணம், **ஞானவாசிட்டம்,**

உரைத்த அசுணங்களிறு விட்டில் மீன்தேன்
ஓசைஊறுஒளியிரத நாற்றம் என்ன
நிரைத்த இவற்று ஒன்று ஒன்றான் மாய்ந்து போகும் நிலை அழிக்கும்
இவை ஐந்தும் நேரே கூடிக்
கரைத்தல் உறுபவர்க்கு இன்பம் எங்கே உன்தன்
கட்டுக்கு வாதனையே கயிற்றுச் சாலம்
புரைத்து எழுநெஞ்சே அதுவே போகும்ஆகினால்
பொருவில் சயம் அஃது உனக்குப் புகலுங்காலே

*(அசுணப்புள், யானை, விட்டில், மீன், வண்டு எனும் இவை ஒலியும் ஊறும் உருவும் சுவையும் நாற்றமும் எனும் இவற்றுள் ஒன்றில் ஒன்று அழிவையே அடையும். ஐம்புலன்கள் மலிவு செய்யப்பட்டவர்களுக்கு அகமகிழ்ச்சி எங்கே கிட்டும்?)*

என்றும், **அமுதசாரம்,**

சிந்தா குலமனிதர் சீசீசெவிமுதலாம்
ஐந்தாலும் ஈடுஅழிய வல்லரோ - ஐந்தில் ஒரு

**வேட்கை அசுணம் இபம் விட்டில் மீன்வண்டு**
**கேட்கை முதல் ஓர் ஒன்றில் கேடு**

*(மனிதன் ஐம்புலனாலும் அழிய வேண்டிய அவசியம் இல்லை. ஒரு புலனே போதும். ஏனெனில் அசுணம், யானை, விட்டில் பூச்சி, மீன், வண்டு ஆகியன ஒருபுலனாலேயே அழிகின்றன.)*

என்றும், **ஒழிவிலொடுக்கம்,**

**நாய் அலகை நெய் விரும்பி நக்குவது நஞ்சிட்ட**
**பாயசமும் மெய்ப்பரிசம் பாவை மிகச் - சாயனீர்**
**வேட்கை அசுணம் இபம்விட்டின் மீன்வண்டு இவையின்**
**சாட்சியைக் கண்டார் துறவாதார்**

*(அசுணப்புள் ஓசையாலும் யானை பரிசத்தாலும், விட்டில் உருவத்தாலும் மீன் சுவையாலும், வண்டு மணத்தாலும் அழியும். இவ்ஐந்து விடயங்களும் உளவாகிய பாவையைத் துறவாதார் யார்?)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

வனிதையர் விடயத்தால் வருங்கேடு மேல் கூறுகின்றார்

**ஆயிழை யார்பாலுண் டைம்புல வேட்கையு**
**நீவிரும் பிற்கேடென் றுந்தீபற**
**நெஞ்சமே சொல்வதென் னுந்தீபற** 88

***ஆயிழை ஆர்பால் உண்டு ஐம்புல வேட்கையும்***
***நீவிரும் பிற்கேடு என்று உந்தீபற***
***நெஞ்சமே சொல்வது என்னும் உந்தீபற***

என்பது, வனிதையர் இடத்து ஐம்புல நுகர்ச்சியும் உளதாம் ஆதலின் அவரது போகத்தை நீ விரும்பில் கேடு என்பதற்கு ஓர் ஐயம் என்னை நெஞ்சமே என்றவாறு.

இதற்குப் பிரமாணம், **திருவள்ளுவர்,**

**கண்டு கேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும் ஐம்புலனும்**
**ஒண்தொடி கண்ணே உள**

*(ஐம்புலனும் தொடியை உடையாள் கண்ணேஉள்ளன.)*

அன்றியும்,

உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற்கு உண்டு

*(நினைந்த பொழுது களிப்பெய்தலும் கண்ட பொழுது மகிழ்வு அடைதலும் கள்ளுண்டார்க்கு இல்லை காமம் உடையர்க்கு உண்டு.)*

என்றும், **திருவாசகம்,**

காருறு கண்ணியர் ஐம்புலன் ஆற்றங்கரை மரமாய்
வேருறு வேனை விடுதிகண்டாய் விளங்கும் திருவாரூர்
உறைவாய் மன்னும் உத்தர கோச மங்கைக்கு அரசே
வாருறு பூண்முலையாள் பங்க என்னை வளர்ப்பவனே

*(இறைவனே! மாதரது ஐம்புல இன்பத்தில் ஆற்றங்கரையில் நிற்கின்ற மரம் போல வேர் உறுகின்ற என்னை விட்டுவிடுவாயோ!)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

காமத்தால் வரும் இன்பமும் இதனால் வரும் துன்பமும் மேல் கூறுகின்றார்.

சிலந்தி வருடத் திகழுஞ் சுகம்போ
லிலங்கிழை யார்சுக முந்தீபற
இடராய் விளையுமென் றுந்தீபற 89

*சிலந்தி வருடத்து இகழும் சுகம் போல்*
*இலங்கிழை யார் சுகமும் உந்தீபற*
*இடராய் விளையும் என்று உந்தீபற*

என்பது, ஒருவனது உடலின்கண் தோன்றிய சிலந்தியைச் சூழ்ந்து உகிரால் வருட உண்டாகிய சுகம் பின்பு கீறி அறுத்துத் தீர்த்தற்கு இடமாய் விதனம் செய்குதல் போலும். ஆபரணாதிகளினது சிறப்பால் மயக்கம் செய்யா நிற்கும் மகளிரிடத்து உண்டாகிய சிற்றின்பமும் பின்பு நரகாதி துன்பத்திற்கு [1]வாதனைக்கு இடஞ்செய்யும் என்றவாறு.

1 - துன்பம்

இதற்குப் பிரமாணம், **தேவாரம்**

குழலை யாழ்மொழியார் இசை வேட்கையாய்
உழலை யாக்கையைப் பூணும் உணர்விலிர்
தழலை நீர்மடிக் கொள்ளன்மின் சாற்றினோ
மிழலையான் அடிச் சார விண்ஆள்வரே

*(மகளிர் வேட்கையினால் நல்லுணர்வற்றவர்களே! நெருப்பை நீர் அலையில் கண்டு கெடாதீர்.)*

என்றும், **திருப்பாட்டு,**

மாணா உருவாகியோர் மண் அளந்தான்
மலர்மேல் அயன் ஏடியும் காண்பரியாய்
நீள்நீண்முடி வானவர் வந்து இறைஞ்சு
நெல்வாயில் அரத்துறை நின்மலனே
பாணார் நுதலார் வலைப்பட்டு அடியேன்
பலவின் கனிஈயது போல்வதன் முன்
ஆணோடு பெண்ணாம் உருவாகி நின்றாய்
அடியேன் உயப் போவதோர் சூழல்சொல்லே

*(மாதர்களின் வலையில்பட்டு பழாப்பழத்தின் ஈயை போல அழிவதற்கு முன் அவர் மையலில் இருந்து பிழைத்தற்குறிய ஒருவழியைக் கூறாயோ?)*

என்றும், **திருவாசகம்,**

செழிகின்ற தீப்புகு விட்டிலில்
சின்மொழியாரில் பன்னாள்
விழுகின்ற என்னை விடுதி
கண்டாய் வெறிவாய் அறுகால்
உழுகின்ற பூமுடி உத்தர
கோச மங்கைக்கு அரசே
வழிநின்று நின்அருள் ஆரமுது
ஊட்ட மறுத்தனனே

*(இறையே உன் அருளாகிய அமுதத்தை உண்ண மறுத்தேன். தீயில் விழும் விட்டில் போல மகளிரிடம் விருப்பம் கொள்ளும் என்னை விட்டுவிடுவாயோ!)*

என்றும், **பட்டணத்துப்பிள்ளையார் பாடல்,**

இலவிதழார் வீழ்வார் இகழ்வார் இவர்தம்
கலவி கடைக்கணித்தும் பாரேன் - இலகும் ஒளி
ஆடகஞ்சேர் அம்பலத்து எம்ஆள் உடையான் நின்றாடு
நாடகங்கண்டு இன்பான நான்

*(மகளிரை விரும்பி யான் செல்லேன், இறைவன் ஆடும் கூத்தை கண்டு இன்புறுவேன்.)*

என்றும், ***சிவதருமோத்தரம்,***

குட்டஉடல் கொடுக்கும் இதங்கூடின் அழற்கொடி இடையார்
இட்டமும் இம்முறை எணுக விளையவர் தம்பருவம்போல்
குட்டம் அழற்கூடுதலும் கொழுநனுக்கு ஒப்பெனக் கொள்க
தொட்ட துவக்கு இந்திரியம் சொற்பொருளும் துணிவாரே

*(குட்ட நோயாளன் தீயினைச் சேர்ந்த இடத்து எப்படி சுகத்தில் பொருந்துவானோ? அது போன்றதே காமநோயுடையவர்கள் பெண்களைக் கூடிய போதுள்ள சுகமும் இவ்வளவு என்றறிக.)*

*அன்றியும்,*

புரிந்தவர்கள் தீவினையைப் பொருவரியான் அடிக்குஅன்பு
பிரிந்தவர்கள் வனிதையரைப் பெறற்குஅரிய பேறு என்றே
இருந்தவர்கள் நடந்தவர்கள் இழுக்காய குழிவழிக்கே
எரிந்தவர்கள் கிடந்து எரிவாய் நிரயத்தும் இளைப்புறவே

*(இறைவன் திருவடிக்கு அன்பு செய்யாது பாவத்தைச் செய்தவர்கள், பாவ மேலிட்டால் மாதர் இன்பங்களைக் அனுபவித்திருந்தவர்களே! அவர்களே நரககுழி வழியில் விழுந்தவர்கள்.)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

பைந்தொடியார் ஆசைநோய் கம்பீர
மனிதரையும் பதுமம் தன்னை
முந்து இரவிக்கதிர்போல மிளிர்விக்கும்
கனஇடியின் முனைக்கூர் வாளும்
வெந்த விருப்புப் பொறியும் எனக் கொடிய
மனவேட்கை மேரு ஒத்தோர்
சுந்தர ஞானியர் தீரர் சூரரை எல்லாம்
இமைப்பில் துரும்பு செய்யும்

*(பெண்ணாசை, மனிதரை மிளிரச்செய்யும், ஞானியரையும் தீரர்களையும் துரும்பென மதிக்கச்செய்யும்.)*

அன்றியும்,

மேவுதற்கு அரிதாய்க் கேசம் புகையதாய் விழிக்கு நன்காய்த்
தீவினைச் சிகைசேர் மாதர் எனும்கனல் இரணம்போல
யாவரைச்சுடாது தூரத் தெரிகின்ற நரகத்தீக்குப்
பாவையர் குளிர்ந்த மேனி பசையிலா விறகு அதாமே

*(அழகியபெண் எனும் கனலுக்குத் தப்பியவர் யார்? குளிர்ந்த உடல் நரகத்திற்கு விறகாக விளங்கும்.)*

அன்றியும்,

மாமடம் செறிந்த நெஞ்சின் மனிதராம் புள்பிடிக்கக்
காமனாம் வேடன் வீசும் வலைஒப்பார் கருங்கண்மாதர்
தீமனச் சேறார் சன்மச் சிறுகுழி மீனா மாந்தர்க்கு
ஏமவாதனைக் கயிற்றுத் தூண்டிலுக்கு இரையும் ஒப்பார்

*(பெண்கள், வேடன் வீசும் வலையினையும் மீன் பிடிக்கும் தூண்டில் இரையினையும் போன்றவர்கள்.)*

என்றும், **நாலடியார்,**

அம்பும் அழலும் அவிர்கதிர் ஞாயிறும்
வெம்பிச் சுடினும் புறஞ்சுடும் - வெம்பிக்
கவற்றி மனத்தைச் சுடுதலால் காமம்
அவற்றினும் அஞ்சப் படும்

*(பிறன் மனைவியை விரும்பும் பாதக செயலாகிய காமம், அழுது வருந்தும்படி மனத்தைச் சுட்டுத் துன்புறுத்தும்.)*

அன்றியும்,

ஊருள் எழுந்த உருகெழு செந்தீக்கு
நீருள் குளித்து முயலாகு - நீருள்
குளிப்பினும் காமம் சுடுமே குன்றேறி
ஒளிப்பினும் காமம் சுடும்

(பிறன் மனைவியை விரும்புகின்ற காமத்தீயானது, தண்ணீருக்குள் அமிழ்ந்தாலும் மலைமேல் ஏறிக் குகைக்குள் ஒழிந்தாலும் அடங்காது சுடும்.)

என்றும், **நீதிவெண்பா,**

ஊரூர் எனும் வனத்தின் ஒள்வேற்கண் மாதர்எனும்
கூரூர் விடமுள் குழாம் உண்டே - சீரூர்
விரத்தி வைராக்ய விவேகத் தொடுதோல்
உரத்து அணியத்து ஐயாஎன்று ஓது

(பெண்கள் எனும் நச்சு முள் தைக்காமல் இருக்க, வைராக்கியம், விவேகம், எனும் செருப்புக்களை அணிந்து செல்லல் வேண்டும்.)

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

நல்லுணவாகிய சுவைகள் விழைதல் தீது என்று மேற்கூறுகின்றார்.

ஆன்பாலுங் கூழு மகற்றும் பசியெலாந்
தான்பின் மலமாமென் றுந்தீபற
சடுரசந் தேடெலென் றுந்தீபற 90

*ஆன்பாலும் கூழும் அகற்றும் பசிஎலாம்*
*தான்பின் மலமாம் என்று உந்தீபற*
*சடுரசம் தேடல் என்று உந்தீபற*

என்பது, ஒருவனது மிகுந்த பசிக்குப் பாலும், சருக்கரையும் முக்கனிகளும் கூட்டி அருந்தினாலும் அஃதன்றி உப்பற்ற நீர்க்கூழும், காடியும் மற்றுள்ள சாகமூல பலாதிகளும் அருந்தினாலும் உதராக்கினி அவியா நிற்கும் யாதொரு புசிப்பேனும் உதரத்தைப் பொருந்தித் தனது தன்மை கெட்டு மலத்தன்மை ஒன்றே அடையா நிற்கும். ஆதலால், பசிக்கு உதவினது அன்றிக் கைத்தல், கார்த்தல், புளித்தல், துவர்த்தல், உவர்த்தல், தித்தித்தல் என்கிற அறுசுவைகளைத் தேடி ஓடேல் நெஞ்சமே என்றவாறு.

இதற்குப் பிரமாணம், **தத்துவராயர்,**

பண்டைப்படியே நமக்கு அளிக்கின்ற பரஞ்சுடரைக்
கண்டைக் கனியை அமுதைக்கை விட்டுக் கவலை நெஞ்சே

தொண்டைக்கு மேல் உறும் சோற்றுச் சுவடும் துடி இடையார்
கெண்டைத் துணைவிழியும் உன்னி என்னைக் கெடுத்தனையே

*(நெஞ்சமே! இறைவனைக் கைவிட்டு, தொண்டைக்குக் கீழே போனால் சுவையற்றுப் போகும் சோற்றையும், பெண்களின் நிலையற்ற அழகையும் எண்ணி எண்ணி என்னைக் கெடுக்காதே!)*

என்றும், **சிவானந்தமாலை**

உப்பு அகன்ற நீர்க்கூழும் உண்டால் பசி கெடுமால்
அப்பது உண்டு கூவல் குளமாறு அதனில் - இப்படியைப்
பார்த்தமையாய் நெஞ்சே பரந்து எழுந்து சென்றாலும்
போர்த்து உளதின் மேல் வருமோ பேசு

*(உப்பில்லாதக் கூழினையும் உண்டால் பசி நீங்கும். கூகல், குளங்களில் நீர் உண்டு. இதைக் கண்டும் மனம் அமைதி அடையாது பரந்து திரிந்தாலும் உள்ளத்துக்கு மேல் உயருமோ?)*

அன்றியும்,

நீயாய் அமையாய் நினைந்து ஓடிக்கிட்டாமை
ஏயாய் அமைந்தாய் இடர்நெஞ்சே - காயோ
கடையானார் காய்பசிக்கே கால் குலைவர் கற்றோர்
அடையாரோ ஆங்கு அமைவின்பால்

*(துன்ப நெஞ்சே! கடையானோரும் தங்கள் மிக்கப் பசிக்குச் சுவையற்ற காய் கிடைத்தாலும் போதும் என அலைவர். கற்ற அறிஞர் போதும் என்று அமையாரோ? நீயோ! கிடைக்காதப்பொருளைத்தேடி ஓடி அலைகின்றாய்.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

மேலமைவு கூறுகின்றார்.

வேண்டாத துன்பமு மேவல்போ லின்பமும்
வேண்டா விடினுமுண் டுந்தீபற
விதிவழி நெஞ்சேயென் றுந்தீபற 91

*வேண்டாத துன்பமும் மேவல்போல் இன்பமும்*
*வேண்டா விடினும் உண்டு உந்தீபற*
*விதிவழி நெஞ்சே என்று உந்தீபற*

என்பது, யாவன் ஒருவனுக்கும் இன்பத் துன்பங்கள் எல்லாம் ஊழின் வழியே அடைதலால் வெறுக்கப்பட்டதுன்பமும் உனக்கு இயல்பாய் வருதல் போல யாதொரு விடய சுகமும் நீ விரும்பாவிடினும் அமைத்த படியே வந்து கூடும். அவற்றினை அவாவுதல் ஒழிவாய் நெஞ்சமே என்றவாறு.

இதற்குப் பிரமாணம், **திருவள்ளுவர்,**

வகுத்தான் வகுத்த வகை அல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது

*(ஐம்பொறிகளான் நுகரப்படும் பொருள்கள் கோடியை முயன்று தொகுத்தார்க்கும், தெய்வம் வகுத்த வகையான் அல்லது நுகர்தல் உண்டாகாது.)*

அன்றியும்

பரியினுமா காவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம

*( தமக்கு ஊழல்லாத பொருள்கள் வருந்திக் காப்பினும் தம்மிடத்து நில்லா. ஊழால் தமவாய பொருள்கள் புறத்தே கொண்டு போய்ச்சொரிந்தாலும் தம்மை விட்டுப்போகா.)*

என்றும், **ஔவையார்,**

ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடலின்
நாழி முகவாது நானாழி- தோழி
நிதியும் கணவனும் நேர்படினும் தந்தம்
விதியின் பயனே பயன்

*(ஆழமான கடலில் ஆழ அமுக்கி முகந்தாலும் ஒரு நாழி நான்கு நாழி நீர் கொள்ளாது. அது போல செல்வமும், கணவனும் அமைந்தாலும் விதியின் படியே நடைபெறும்)*

அன்றியும்,

எழுதிய வாறேகாண் இரங்கு மடநெஞ்சே
கருதிய வாறாமோ கருமம் - கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்காய் ஈந்ததேன்
முற்பவத்தின் செய்தவினை

*(நெஞ்சமே! ஊழ்வினையின் படி எதுவும் நடக்குமேயல்லாமல் நாம் எண்ணியபடி எதுவும் நடைபெறாது. எட்டிக்காய்தான் கிடைக்கும் என ஊழ்வினை இருந்தால் கற்பக மரத்தின் அடியில் நின்று வேண்டினாலும் எட்டிக்காய்தான் கிடைக்கும்.)*

என்றும், **குகை நமசிவாயர்,**

வையம்முழுதும் படைத்து வாழும் அருணகிரி
ஐயன் அமைத்தபடி அல்லாமல் நொய்யமனம்
நூறாயிரம் விதமாய் நொந்தாலும் எள்அளவும்
ஏறாது அதில் குறையாதே

*(மனமானது ஆயிரம், ஆயிரம் வகைகளில் சிந்தித்தாலும் நமக்கு என அருணகிரி அய்யன் அமைத்தபடியே அல்லாமல், எள்ளளவும் ஆகாது, குறையவும் குறையாது.)*

என்றும், **சிவானந்தமாலை**

இல்லாதது இல்லை உளது உதவிராது என்று
நல்லோர் துணிபொருளை நாடுங்கால் - எல்லாம்
அமைந்தபடியே வருமால் ஆங்கு அசைவென் நெஞ்சே
சமைந்த பொருள்தாம் அறிவார்தாம்

*(என் நெஞ்சே!நமக்கு அமைவில்லாதது அமையாது. நமக்கு அமைந்துள்ளது உதவாமல் போகாது, என்பது ஆன்றோர் துணிந்த பொருள்.)*

அன்றியும்,

பல்காய நற்கறியும் பால்நெய் பழத்தோடு அடிசில்
செல்வாய தேயம் செறிந்தாலும் - மெல்அவுனை
ஊட்டாவூழ் உண்டேல் உறுபிணி மற்றேது ஒன்றால்
வீட்டாதோ நெஞ்சே விரைந்து.

*(நெஞ்சமே! சுவை மிக்க கறியும், பால், நெய், பழத்தோடு உணவு இருந்தாலும் உண்ணக்கூடாத ஊழ் இருந்தால் உறுபிணி உண்ணாமல் தடுத்து விடும்.)*

அன்றியும்,

இன்பத்துக் கோடி இளைக்கும் அதுபோல் மனமே
துன்பத்துக் கோடிச் சுழலாயே இன்பமும் நீ

அப்படி என்று எண்ணியிளைப் பாறி ஆட்பேறு பெறாது
இப்படி வந்து உற்பவிப்பது என்

*(நெஞ்சே! இன்பத்தை நாடி ஓடி இளைக்குமாப்போல், துன்பத்தை நாடி ஓடி இளைக்கும் பேறு பெறாமல் துன்பத்தால் அலைய வேண்டும் என்பதே நமது விதி)*

அன்றியும்,

நீடும் தலைகீழ்கான் மேலாகி நின்றாலும்
கூடும் படி அன்றிக் கூடாததால் ஓடி
வருந்தாமல் உள்ளபடி வந்திடக் கண்டு ஆறி
இருந்தாலோ நெஞ்சே இனிது

*(நெஞ்சமே! தலை கீழாகக் கால் மேலாக நின்று வருந்தினாலும், நமக்குக் கை கூடுவது தான் கூடுமேயல்லாமல். கூடாதன கூடாதே.)*

அன்றியும்,

இருந்த இடத்து ஏதும் வரக்கண்டு இருப்பது அன்றோ
பெருந்தகைமைக்கு ஆபரணம் பேதாய் மருந்து எனவே
ஆங்குஇனியார் தங்கடையில் சென்றிடினும் ஆதரியார்
பாங்குஇது காண் பாழ் நெஞ்சே பார்

*(நெஞ்சமே! தன்னை நாடி வந்ததை முழு மனதோடு எற்றுக்கொண்டு இருப்பதே பெருந்தகைக்கு அணியாகும்.)*

அன்றியும்,

ஆற்றங் கரைப்பசுத்தான் அக்கரையோடு இக்கரையாய்த்
தோற்றும் பசும்புல் தொடர்புறுமே ஆற்ற
அதுபோல நெஞ்சே அலைந்து அலைப்பட்டு ஓடும்
இதுவே உனக்கு இதனால் பேறு

*(நெஞ்சமே! பசுவானது அங்கும் இங்கும் அலைந்து புல் உண்ணாது வீணாக்குவது போன்று ஆசையால் அங்கும் இங்கும் அலையும் உனக்கும் அதே நிலைதான்.)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க

இங்ஙனம் கூறிய உபாயங்கள் அனைத்தையும் நெறியாகப்

பற்றிச் சென்று உண்மை நிட்டையினையே கூடல் வேண்டும் என்று மேற்கூறுகின்றார்.

சொன்னாவிந் நானா வுபாயங் கொடுதொடர்ந்
தன்னமெய்ந் நிட்டைசேர்ந் துந்தீபற
ஆனந்தம் பெற்றிடென் றுந்தீபற 92

*சொன்ன இந்நானா உபாயம் கொடுதொடர்ந்து*
*அன்ன மெய்ந் நிட்டை சேர்ந்து உந்தீபற*
*ஆனந்தம் பெற்றிடு என்று உந்தீபற*

என்பது இங்ஙனம் பாவனை ஆதியாகச் சொல்லிப் போந்த நானா உபாயங்களாலும் மனசை ஒருவழிப்படுத்தி சென்று முற்கூறிய பாவனா அதீத நிட்டையைப் பொருந்தி நின்று பேரானந்தம் பெறக் கடவாய் என்றவாறு.

பாவனையாதியான நிட்டைகள் ஒவ்வொன்றில் அநேக விதங்கள் அடங்கி நிற்றலாலும், பின்னும் உபாயங்கள் பலவாக நூல்களில் சொல்லப்படும் அதனாலும், நானா உபாயங்கள் என்று கூறினாரெனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், **தத்துவராயர்,**

இம்மற்கு இறையான உடம்பை எடுத்து இது காரணமாக
இரவும் பகலும் எளிவந்தன செய்து இதனால் அமையாதே
மம்மர்க்கு இடனாய் நடனாடிய பொய் வாழ்வைக் கருதாதே
மறையில் துறையில் பொறையில் துறவி நிறைவில் குறைவற்றே
எம்மைக்கு நமக்கு உறவாம் அமர்வேறலர் நாம் அலது என்றே
யாதொன்றினும் யாவரொடும் பணியற்று எல்லா வழியானும்
தம்மைப் பெறுவான் நினைவார் உறவே தாலோ தாலேலோ
தனி நாயகமே எனை ஆளுடையாய் தாலோ தாலேலோ

*(பொய் வாழ்க்கையை எண்ணாது பொறுமையிலும் துறவிலும் நிலைத்து நின்று எங்கும் எவ்விடத்தும் நமக்கு உறவு ஆவார் இறைவனே)*

என்றும் மற்றும் வருவனவற்றால் காண்க

அவ்வுண்மை நிட்டை சார்ந்து சாதிப்போர்க்கு வாக்கும் தொழிலும் எதுகாறும் அடங்காதோ அதுகாறும் நிலை கொளாது என்று மேற்கூறுகின்றார்.

நினைவெழின் மெய்ந்நிட்டை நீங்குமேன் மாணா
பினையெழி னென்னாமென் றுந்தீபற
பேச்சுந் தொழிலுமென் றுந்தீபற 93

*நினைவு எழில் மெய்ந்நிட்டை நீங்குமேன் மாணா*
*பினை எழில் என்னாம் என்று உந்தீபற*
*பேச்சும் தொழிலும் என்று உந்தீபற*

என்பது, யாவன் ஒருவன் உண்மை நிட்டை சாதிக்கும் இடத்து அவனுக்கு எல்லா உபாதிகளும் அடங்கி நித்தரங்க சமுத்திரம் போல இவ்விடத்து இருக்கின்றது என்று உன் நினைவு சற்றே உண்டாமாயினும் அது சகச நிட்டை அன்று என்று சுருதியாதிகள் கூறா நிற்குமாயின் அந்நினைவு எழாமல் அடக்குவதன்றி அது தடித்துப் புறநிலையாய் மனாதிகளோடு கூடி அவத்தை அடைந்து ஐம்புலன்களையும் கவர்ந்து வாக்கும் தொழிலுமாகிய கன்மேந்திரியங்களும் பிரேரகப்படுமாயின் அந்நிட்டை யாதாய் முடியுமோ மாணாக்கனே என்றவாறு.

நினைவுஎழின் மெய்ந்நிட்டை நீங்கும் என்று அதனால் மனோலயஞ் செய்வோர்க்கு வாக்கும் தொழிலும் அசைவற அடங்குதலே நியமம் என்றார் எனக்கொள்க

இதற்குப் பிரமாணம், **திருவாய்மொழி,**

உள்ளம் உரைசெயல்
உள்ள இம் மூன்றையும்
உள்ளிக் கெடுத்து இறை
உள்ளில் ஒடுங்கே

*(மனம், பேச்சு, செயல் என்ற மூன்றையும் ஆராய்ந்து பற்றைக் கெடுத்து, இறைவன் பக்கத்திலே ஒடுங்குக.)*

என்றும், **ஔவையார்,**

மோனம் என்பது ஞான வரம்பு

*(மௌனம் என்பது ஞானத்தின் எல்லையாகும்.)*

என்றும், **சிவானந்த மாலை,**

ஓடி உழன்று இந்த உடம்பை ஒறாதே நீ
பாடிமிடற்றைப் புண்படுத்தாதே கேடுபிறர்க்கு

உம்மால் விளையாதே ஒன்றுடனும் தாக்காதே
சும்மாவே காணும் சுகம்

*(நீ ஓடியும் உழன்றும் இவ்வுடம்பைத் துன்புறுத்தாதே; பாடிப்பாடித் தொண்டையைப் புண்படுத்தாதே; பிறருக்குக் கேடு விளைவிக்காது ஒன்றுடனும் கூடி மாறுபடாதே. இயல்பாக உனக்கு சுகம் கை கூடும்.)*

அன்றியும்,

ஓடாதே தேடாதே உன்னாதே ஓசைஎழப்
பாடாதே சாத்திரங்கள் பன்னாதே கேடுபிறர்க்கு
உம்மாலே செய்யாதே ஒன்றாதே ஒன்றும் அறச்
சும்மா இருக்கை சுகம்

*(துன்பம் பிறருக்கு செய்யாது எதிலும் பற்று வைக்காது ஒன்றுமின்றிச் சும்மாயிருப்பதே சுகம்.)*

மற்றும் வருவனவற்றால் காண்க

இச்செய்யுள் தொடங்கி ஞானிகளது ஆசாரம் கூறுகின்றார்

ஆனந்த மெய்தினோ ராடினும் பாடினு
மானந்த லீலையென் றுந்தீபற
அவர்செயல் கூறொணா துந்தீபற 94

*ஆனந்தம் எய்தினோர் ஆடினும் பாடினும்*
*ஆனந்த லீலை என்று உந்தீபற*
*அவர் செயல் கூற ஒணாது உந்தீபற*

என்பது இங்ஙனம் கூறிய உண்மை நிட்டைகள் வந்து பரமானந்தம் பெற்றுள்ள ஞானிகளாயினோர் பின்பு ஓராடல் பாடல்களைச் செய்தார்களாயினும் அத்தொழில்கள் எல்லாம் ஆனந்த லீலையாய் முடியும். அவரது செயற்பாடு ஒருவரால் நிச்சயித்துக் கூறுதல் கூடாது என்றவாறு.

ஆடினும் பாடினும் என்ற உண்மையால் அவை நியதம் அல்ல என்றது எனக் கொள்க.

இதற்குப்பிரமாணம், **அஞ்ஞவதைப்பரணி,**

தெளியும் உளத்தார் சிலவர் தெளிப்பார்
சிலவர் களிப்பார் சிலவர் திகைப்பார்

அளியும் உளத்தோடு அழுது சிரிப்பார்
*அவர்கள் செயற்பாடு அறிய ஒணாதே.*

(இறையடியார்களுள் சிலர் அறிந்ததைப் பிறருக்கு எடுத்துரைத்தும், பேரானந்த அனுபவத்திலிருந்தும் திகைத்தும் , அழுதும், சிரித்தும் செய்யும் திருவிளையாடல்கள் இத்தகையது என்று கூற முடியாது.)

என்றும், **மோகவதைப்பரணி,**

அல்லது அங்கவர் பெருமையை அருமறைமொழிய
வல்லது அன்று அரன் முகுந்தனும் பிரமனும் மாட்டார்

(ஆனந்த நிட்டையை அடைந்தோர் பெருமையை மறைகளும் சொல்லும் ஆற்றல் உடையவை அல்ல. உருத்திரனாலும் திருமாலாலும் பிரம்மனாலும் பேச இயலாது.)

மற்றும் வருவனவற்றால் காண்க

சோறிடநாடுந் துணிதரக் குப்பையு
மாறினோர்க் குள்ளவா லுந்தீபற
ஆங்கவை கெண்ணாரென் றுந்தீபற 95

*சோறிடநாடுந் துணிதரக் குப்பையும்*
*ஆறினோர்க்கு உள்ளவால் உந்தீபற*
*ஆங்குஅவைக்கு எண்ணார் என்று உந்தீபற*

என்பது சோறிடுதற்கு நாடும் கோவணத்துணி கொடுத்தற்குக் குப்பைமேடும் இயல்பாக இருத்தலின் அவற்றினைக்குறித்து ஒருவரை அனுசரித்தற்கு ஞானிகள் ஆயினோர் மறந்தாயினு நினைப்பதில்லை என்றவாறு.

அஃது எங்ஙனமெனின்? மெய் உணர்ந்தோர் ஒன்றையும் இப்பிரபஞ்சத்தின் கண் வேண்டார்களாயினும் பிராரப்ததேகம் உள்ளளவும் அதனுக்கு ஆகாரம் வேண்டுதலின் அது குறித்து ஆயினும் ஒருவரை அனுசரிக்க வேண்டும். எனில்? அது வேண்டுவது இல்லை. அறிஞர்க்கு நாடுதொறும் இறந்துண்டல் இயல்பாய் இருத்தலின் அங்ஙனம் ஆயினும் அபிமான மறைப்பது நிமித்தம் ஒரு கோவணத்தை ஆயினும் குறித்து அனுசரிக்கப்படுமே எனின் அவர்க்கு அபிமானம் கிஞ்சித்தாயினும் இன்மையால் கோவணமே வேண்டுவது இல்லை.

அங்ஙனமாயின் ஞாதாக்கள் தரிப்பது ஏன் எனில் ஊர்கள் தொறும் இரந்து உண்பான் செல்லும் அமைதியில் தம்மை நோக்கிச் சிலர் இகழ்ந்து கெடாவண்ணமும் மகளிர் நாணா வண்ணமுமாகப் பிறரைக் குறித்துக் கோவணம் தரித்தார் எனக் கொள்க. அங்ஙனம் ஆயினும் கோவணம் குறித்து ஒருவரை அனுசரிக்கப்படுமே எனில்,அது தேவை இல்லை. குப்பை மேடுகள் தோறும் சதாகாலமும் பழந்துணிகள் இயல்பாய்க் கிடத்தலின் எனக் கொள்க.

இதற்குப் பிரமாணம், **திருமந்திரம்,**

பரந்து உலகு ஏழும் படைத்த பிரானை
இரந்துஉணி என்பர்கள் எற்றுக்கு இரக்கு
நிரந்தரமாக நினையும் அடியார்
இரந்துஉண்டு தன் அடி எட்ட வைத்தானே

*(சிவபெருமானை இரந்துண்பவன் என்று கூறுபவர் உண்மையறிவார். எதன் பொருட்டு இரக்கின்றான் என்பதனை உணர வேண்டும்.)*

என்றும், **பட்டணத்துப்பிள்ளையார் பாடல்,**

சோறிடு நாடு துணிதரு குப்பை தொண்டு அன்பரைக்கண்டு
ஏறிடும்கைகள் இழிந்திடும்தீவினை எப்பொழுது
நீறிடு மேனியர்சிற்றம்பலவர் நிருத்தம் கண்டால்
ஊறிடும் கண்கள் உருகும் என்ஆவியும் உள்ளமுமே

*(சிவனடியாரைக் கண்டு என் கைகள் என் தலைமீது குவியும்; எனது தீவினைகள் அகலும்; இறைவனின் கூத்தினைக் கண்டால் என் உள்ளம் உருகிக் கண்கள் கண்ணீர் சொரியும்.)*

அன்றியும்,

சின்னற் சீரை துன்னற் கோவண
மறுதற் கீளுடன் பெறுவது புனைந்து

*(ஞானியர் நுகர்வினையாய் வரும் உடலைப் பேணும் கருத்திலராதலின் குப்பைக் கீரையே உணவாகவும் கோவணத்தையே உடையாகவும் புனைந்து வாழ்வர்.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

செல்லுழிக் கண்ட சிதைவலோ டுங்கையு
நல்ல கலமவர்க் குந்தீபற
நாட்டிலேற் றுண்பதற் குந்தீபற 96

*செல்லுழிக் கண்ட சிதைவலோடு அங்கையும்*
*நல்அகலம் அவர்க்கு உந்தீபற*
*நாட்டில் ஏற்று உண்பதற்கு உந்தீபற*

என்பது ஆகாரத்தைக் குறித்து ஏகும் இடத்து எதிரே கண்ட உடைசலோடு ஆயினும், கைகளாயினும், நாடுதோறும் பலியேற்று உண்பதற்குப் பாத்திரமாக உளவாகலின், ஞானிகளாயினோர் ஏற்று உண்ணும் ஓட்டினைக் குறித்து ஆயினும் ஒருவரை அனுசரியார் என்றவாறு.

இதற்குப் பிரமாணம், **தேவாரம்,**

கட்டு வாங்கம் கபாலங்கைக் கொண்டுஇலர்
அட்ட மாங்கம் கிடந்துஅடி வீழ்ந்திலர்
சிட்டன் சேவடி சென்று எய்திக் காணிய
பட்ட கட்டமுற்றார் அங்கு இருவரே

*(திருமாலும் நான்முகனும் இறைவனது அடி முடி காணுதற்குச் சென்று துயரங்கள் உற்றனர்.)*

என்றும், **திருவாசகம்,**

ஓடுங் கவந்தியுமே உறவு என்றிட்டு உள்கசிந்து

*(திருவோடும் கோவணமும் பற்றெனத்துணிந்து மனம் கசிந்தேன். என்றவாறு)*

என்றும், **பட்டணத்துப் பிள்ளையார்,**

விடுங்கோள் துகில் எங்கும் கோவணம்
 உண்டு வெண்ணீறு எங்குமாம்
இடுங்கோள் கரோடுங் கைக்கொளும்
 கோளிடை மாமருதைத்
தொடும்கோள் சிவசங்கரா என
 நாளும் துதி செயும்கோள்

தடுங்கோள் புலன் உறங்குங்கோள்
நல்அம்பலந் தன்னில் உற்றே

*(ஆடையை விடுங்கள்; கோவணமும் திருநீறும் அணியுங்கள்; இறைவனை நாளும் போற்றி வழிபடுங்கள்; ஐம்புல ஆசையை விட்டு நன்மை பலவற்றைப் பெறுங்கள்.)*

அன்றியும்,

கையார ஏற்று நின்று அங்ஙனம் தின்று கரித்துணியைத்
தையாது உடுத்து நின் சன்னிதிக்கே வந்து சந்ததமும்
மெய்யார நின்பணிந்து உள்ளே உரோமம் விதிர் விதிர்ப்பு
ஐயாஎன்று ஓலம் இடுவது என்றோ கயிலாயத்தனே

*(இறைவா! இரந்துண்டு, கிழிந்த ஆடையை உடுத்து , உனது கோயிலுக்கு வந்து வணங்கி, என் மனம் விதிர் விதிர்ப்பு எய்தி, ஐயனே! என்று ஓலமிட்டு முறையிடுவது எப்போது?)*

அன்றியும்,

வீடு நமக்குத் திருவாலங்காடு விமலர்தந்த
ஓடுநமக்கு உண்டு வற்றாத பாத்திரம் ஓங்குசெல்வ
நாடுநமக்கு உண்டுகேட்ட எல்லாம்தரநன் நெஞ்சமே
ஈடு நமக்குச் சொலவோ ஒருவரும் இங்கில்லையே

*(நல் நெஞ்சமே! இருப்பதற்கு திருவலங்காடு நல்ல வீடு ஆகும். திருவோடும் உளது. கேட்கும் பொழுது பொருள்தர செல்வம் மிக்க நாடுகள் உள. நமக்கு எவ்வகையாலும் குறைவில்லை.)*

அன்றியும்,

சிதவலோடு ஒன்று உதவுழி எடுத்தாங்கு
இடுவோர் உளர்எனின் நிலையின் நின்றுஅயின்று
படுதரைப் பாயலில் பள்ளிமேவி

*(ஞானிகள், ஓட்டினை உண்கலமாகக் கொண்டு பிச்சையினை ஏற்று நின்ற படியே உண்டு, தரைப்படுக்கையில் படுப்பர்.)*

என்றும், **நெஞ்சோடு மகிழ்தல்,**

கைத்துணைப் பாத்திரம் ஆனாய்
காழுடைக் கோவணம் ஆனாய்

பித்தன் எனப்பெயர் பெற்றாய்
உன் பேருணர்வு என்னை கொள் நெஞ்சே

*(நெஞ்சமே! கையே உண்கலமாகவும் கோவணமே உடையாகவும் கொண்டாய்; பித்தன் எனும் பெயரும் பெற்றாய்; இறையடியார்கள் அடக்கமாயிருந்து கருணையால் கண்ணீர் சிந்தி, கோவணஆடை உடையவராயிருப்பர்.)*

என்றும், **அஞ்ஞவதைப்பரணி,**

அலைபொறாமல் ஒருகால் தலைஎடாது அமைவரே
அருள்பெறாமல் உருகா அருவிபாய் நயனரே
கலைபொறாமல் ஒரு கோவணவராய் விடுவரே
கவலை தீர்பலி கொள் நீள்கரக பாலியர்களே

*(சொல்லற்று மனம் நினைவறச் செய்து கையில் உணவு ஏற்று மனோவாக்கிற்கு எட்டாது இடமான பொருளை அறிவர். இறையுடன் கலந்த திருவடியுணர்வுடையார், மலங்களின் வீழ்க்கும் உலகோருடன் இணங்க வேண்டா என்று ஓதினார்.)*

அன்றியும்,

உரைஇறந்து உணர்வு இறந்துஇடன் உணர்ந்திடுவரே
உணவும் அங்கையில் வரும்பலி உகந்திடுவரே
திரை இறந்தளவு இருந்துள பரங் கடலுளே
செறிதரும் படிவரும் திருவகம் படியரே

*(ஞானிகள் நான்மறையுணர்ந்து ஐம்புலன்களை அடக்கி, மோனிகளாய்த் தனித்திருந்து தவம்புரியும் இடம் முதுகுன்றமாகும்.)*

மற்றும் வருவனவற்றால் காண்க.

ஏகாந்த மான தலமிலம் பூவணை
யாகுந் தரையவர்க் குந்தீபற
ஆனந்த நித்திரைக் குந்தீபற 97

*ஏகாந்தம் ஆன தலம்இலம் பூவணை*
*ஆகும் தரை அவர்க்கு உந்தீபற*
*ஆனந்த நித்திரைக்கு உந்தீபற*

என்பது ஞானிகள் ஆயினோர்க்குப் பாழ்ங்கோயில், மலை முழை முதலிய ஏகாந்தத் தலங்களே இல்லம் ஆதலினாலும் அன்னோர் ஆனந்த நித்திரை செய்தற்குத்தரையே பூவணையாதலினாலும் அவற்றினைக் குறித்தும் ஒருவரை அனுசரியார் என்றவாறு.

இதற்குப் பிரமாணம், **திருமந்திரம்,**

இணங்க வேண்டா இனி உலகுகோர்உடன்
நுணங்கு கல்வியும் நூல்களும் என்செயும்
வணங்க வேண்டா வடிவை அறிந்தபின்
பிணங்க வேண்டா பிதற்றை ஒழியுமே

*(இறையுடன் கலந்த திருவடியுணர்வுடையார், மலங்களின் வீழ்க்கும் உலகோருடன் இணங்க வேண்டா என்று ஓதினார்)*

என்றும், **திருக்கடைக்காப்பு,**

மேனியிற் சீவரத் தாரும் விரிதரு
  தட்டுடை யாரும் விரவல்ஆகா
ஊனிகளாய் உள்ளார் சொல் கொள்ளாதும்
  உள்உணர்ந்து அங்கு உயம்மின் தொண்டீர்
ஞானிகளாய் உள்ளார்கள் நான்மறையே
  முழுதுணர்ந்து ஐம்புலன்கள் செற்று
மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து
  தவம்புரியும் அது குன்றம்மே

*(ஞானிகள் நான்மறையுணர்ந்து ஐம்புலன்களை அடக்கி, மோனிகளாய்த் தனித்திருந்து தவம்புரியும் இடம் முதுகுன்றமாகும்)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

இல்லவள் இல்லம்ஆதி பற்றறல் இட்டா நிட்டம்
புல்லிடில் சமசிற்பாவம் பொருந்துதல் தனக்குப்பேதம்
அல்லவாய் அவற்று அவற்றின் தோற்றங்கள் ஆதல் என்றும்
அல்லலே காந்தம் சேர்தல் மானுடத்திரளை நீத்தல்

*(மனையாள், மனை முதலியவற்றில் பற்றுநீங்குதலும் சுகதுக்கங்கள் சாரின் சமமான ஞானபாவனை அடைதலும் மானிடக் கூட்டங்களை நீக்குதலுமாம்.)*

அன்றியும்,

சங்கம் அடியாப் பொருள் உண்டாம்
சங்கம் அடியா ஆபத்தாம்
சங்கம் அடியா ஆசைவரும்
சங்கம் அடியாப் பிறப்பு உண்டாம்
சங்கம் அறுத்தல் வீடு என்பர்
சங்கம் அறுத்தல் பிறப்பு அறுத்தல்
சங்கம் அறுத்துஅப் பொருள்களில் நீ
தனி சீவனின் முத்தியைப் பெறுவாய்

*(உறவோர் கூட்டுறவால் பொருட்பற்றும் துன்பங்களும் ஆசைகளும் பிறப்பும் உண்டாம். அவர் தொடர்பு அறுத்தலே பிறப்பு அறுத்தலாகும். பொருட்பற்று நீங்கி சிவன் முக்தியைப் பெறுவார்)*

என்றும், **சிவபோகசாரம்,**

என்றும் சனனஇடர்க் கடலுளே மூழ்கிப்
பொன்றும்மனமே உனக்கோர் புத்திகேள் நன்று
தனிச்சங்கம் சாராமல் தற்பரம்நீ சேரின்
இனிச்சங்கம் சேராது இரு

*(மனமே! நீ பிறவியில் நீங்கி முதல்வனை அடைய வேண்டுவையாயின் இனித்தத்துவக் கூட்டங்களில் சேராது இரு.)*

அன்றியும்,

அனித்தியத்தை நித்தியம் என்று ஆதரிக்கும் பொல்லா
மனித்தருடன் கூடி மருவாதே - தனித்து இருந்து
மோனந்தமாம் சிவத்துள் மூழ்கி மலத்தை அறுத்து
ஆனந்தமாய் அழுந்துவாய்

*(தனித்திருந்து நிட்டைக்கூடிச் சிவத்தில் அழுத்திச் சிவானந்த வடிவாய் நிற்கும் அணைந்தோர், உலகில் பிறவியில் அழுத்துவாரோடு ஒரு ஞான்றும் கூடார்.)*

என்றும், **அருட்பிரகாசம்,**

மைக்குழம் பன்னஇருள் வெயிற்காற்று மழை இவைகண்
மிக்குறு காலையினும் பலர்வந்து விரவுதலம்
புக்கிதம் சொல்லி நிற்பாரோ தனித்து ஓர்இடம் பொருந்தித்
துக்கம் இலாப்பரம ஆனந்தத் தோகையைத் தோய்பவரே

*(தனித்த ஏகாந்தமான இடத்தைப் பொருந்தித் துன்பம் இல்லாத பரமானந்தம் என்னும் பெண்ணைக் கூடி இருப்பவர், இருள், வெயில், காற்று, மழை மிகுதியான காலத்திலும் பலர் கூடும் இடத்திலும் அபயம் கேளார்.)*

அன்றியும்,

கிடையாத ஞானப் பெண் கிட்டில்
தனியோர் இடமருவுதல் இயல்பே

*(பெறுதற்குரிய ஞானம் எனும் பெண் கிடைக்கப்பெறின் தனியிடத்து இருந்து மருவுதல் இயற்கையே.)*

மற்றும் வருவனவற்றால் காண்க.

தரைபூவணையாம் என்பதற்குப் பிரமாணம், **தேவாரம்,**

அகலிடம்மேல் இடமதாம் ஊர்கள்தோறும் அட்டுஉண்பார்
இட்டுஉண்பார் விலக்கார் ஐயம்
புகலிடமாம் அம்பலங்கள் பூமிதேவி உடன்கிடந்தால்
புரட்டாள் பொய் அன்று மெய்யே
இகலுடைய விடையுடையான் ஏன்று கொண்டான் யாமார்க்கும்
குடியல்லோம் யாதும் அஞ்சோம்
துகில் உடுத்துப் பொன்பூண்டு திரிவார் சொல்லும்
சொல்கேட்கக் கடவோமோ துரிசு அற்றோமே

*(ஊர்கள் தோறும் இல்லத்தார் இடும் ஐயமே உணவாகும். பொது இடங்கள் புகலிடமாகும். பூமிதேவியாம் தன்னுடன் கிடந்தால் எம்மை புரட்டாள். இது பொய்யன்று மெய்யே. என்றவாறு.)*

என்றும், **பட்டணத்துப் பிள்ளையார்,**

படுதரைப் பாயிலிற் பள்ளி மேவி
ஓவாத் தகவெனும் அரிவையைத் தழீஇ

*(தரையாகிய படுக்கையில் படுத்துக் குறையாத தகவு என்னும் பெண்ணைத் தழுவுதல் ஞானிகள் செயலாம்.)*

என்றும், **சிவானந்தமாலை,**

கால்கட்டில் பூமி தலையணைதோள் கையிணையா
மேற்கட்டி விண்கவரி வீசுகால் - ஏற்றா

விளக்கு இரவி இந்து மனைத்துறைவா மெய்யே
உளக்கண் விழித்து உறங்கு வோர்க்கு

*(வீட்டைத் துறந்து மெய்ப்பொருளை உள்ளத்தில் கண் கொண்டு உறங்குவோருக்குப் பூமியே கட்டில் கைகளே தலையணை, வானமே மேற்காட்டி, வீசும் காற்றே கவரி, கதிரவனும் திங்களுமே விளக்குகள்.)*

என்றும், **தத்துவராயர்,**

விழித்து இருந்து தூங்குவோர் மெய்உள்ளத்து உள்ளே
முழுத்து இருந்த ஞானமுனியே ஒழிப்பறநீ
ஆட்டிஅருள் கூத்தை ஆற்றாய் அருளாலே
காட்டி அருள் மெய்ஞ் ஞானக் கண்

*(மிக்க அருளால் ஓயாமல் ஆன்மாக்களை ஆட்டும் அருட்கூத்தினை யானும் காணமெய்ஞ்ஞானக்கண்ணை அருளுக.)*

என்றும், **பாடுதுறை,**

படுக்கை தரைதனில் ஆகவும் பெற்றோம்
பாணியிலே பலி கொள்ளவும் பெற்றோம்
உடுக்கையும் கோவணம் ஆகவும் பெற்றோம்
ஒன்றும் குறை நமக்கு இல்லைகாண் பெண்ணே

*(தரையையே படுக்கையாகவும் கைகளையே கலங்களாகவும் கோவணமே உடையாகவும் பெற்றோம். எனவே எங்களுக்கு எக்குறையும் இல்லை என்பர் ஞானிகள்.)*

மற்றும் வருவனவற்றால் காண்க.

ஒருபர மல்ல தொருவரைக் காணா
தொருதவர்க் குண்டுகொல் லுந்தீபற
உறவும் பகையுமென் றுந்தீபற 98

*ஒருபரம் அல்லது ஒருவரைக் காணாது*
*ஒருதவர்க்கு உண்டு கொல் உந்தீபற*
*உறவும் பகையும் என்று உந்தீபற*

என்பது, ஏகமாகிய பரம்பொருளையே அன்றி எக்காலமும் எவ்விடத்தும் அப்பொருள் பின்னமாக ஓர் பொருளையும் காணா

ஒப்பற்ற தவத்தோராகிய ஞானிகட்கு உண்டு கொல்லோ இவ்வுலகத்தின் கண் பெறுதற்கு உண்டாகிய போலும் உறவும் பகையும் என்றவாறு.

உண்டு கொல்லோ என்ற அதனாலில்லை என்பதே துணிவு. அஃது எங்ஙனமெனின்? ஞானிகளாயினோர் ஊர்கள் தோறும் புகுந்து ஐயம் ஏற்று உண்ணுதலான் அங்ஙனம் இதா அகிதம் செய்வோரைக் குறித்துக் கிஞ்சித்து ஆயினும் ஒருவரோடும் உறவும், பகையும் கொள்ளார் என்றதெனக் கொள்க.

இதற்குப்பிரமாணம், **திருவாசகம்,**

பார்பதம் அண்டம் அனைத்துமாய் முளைத்துப்
பரந்ததுஓர் படர்ஒளிப் பரப்பே
நீருறு தீயே நினைவதேல் அரிய
நின்மலா நின்னருள் வெள்ளச்
சீருறு சிந்தை எழுந்ததோர் தேனே
திருப்பெருந்துறை உறை சிவனே
ஆர்உறவு எனக்கு இங்குஆர் அயல் உள்ளார்
ஆனந்தம் ஆக்கும் என்சோதி

*(எனக்கு இன்பப் பொருளே! இறையே! இங்கு உறவாய் இருப்பவர் யார்?.)*

என்றும், **திருவாய்மொழி,**

நல்குரவும் செல்வம் நரகும் சுவர்க்கமுமாய்
வெல் பகையும் நட்பும்விடமும் அமுதமுமாய்ப்
பல்வகையும் பரந்த பெருமான் என்னை ஆள்வானைச்
செல்வமல்கு குடித்திரு விண்ணகர்க் கண்டேனே

*(பலவகைப் பொருட்களில் பரந்து நிலைக்கும் இறைவனை, என்னை ஆள்பவனை, திருவிண்ணகர்த்திருத்தலத்தில் கண்டேன்.)*

என்றும், **தேவிகாலோத்தரம்,**

வாதுரை பயனில் சொல்லும் பிறருடன் மகிழ்ந்திருத்தல்
பேதுறு பிணக்கு நீங்கிப் பெரியவர் அருளினாலே
ஓது நூல்ஓதல் ஓவி உலகியல் அன்று தீதென்று
ஆதியில் உரைத்த எல்லாம் அறவிட்டே அமர்ந்திருப்பான்

*(சிவோகம் பாவனை செய்து சிவனருளைப்பெற்றமையால் தர்க்கம் செய்தலும் பயனல்லாத சொற்களை சொல்லுதலும் பிறரிடம் நட்பும் பகையும் இன்றி கன்மம் அனைத்தையும் ஒரு சேர விட்டு அடங்கியிருப்பான் என்றவாறு.)*

என்றும், **சிவதருமோத்தரம்,**

விடுத்து வாழ்க்கையை மெய்உணர்ந்து ஐயமும்
கொடுக்கும் இல்தொறும் கொண்டு உண்டு கோவணம்
உடுத்துப் பாரில் உறவு பகை இவை
கெடுத்த கேள்வியர் அவ்விடம் கிட்டுவார்

*(ஞானிகள் இல்லந்தோறும் ஐயம் ஏற்று உண்டு கோவண ஆடை உடுத்து உலகில் உறவு பகை இவற்றை நீக்கியவர் ஆவர்.)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

இவன்சுற்றம் இவன்பகைஞன் இவன்நான் என்னும் இவ்
வெறும் பொய்இராமநீ இறையும் எண்ணேல்
அவம்பற்று நொய்ய மனத்தவர்க்கு இவ்வாறாம்
அறிந்தவர்க்குச் சகமுழுதும் அகலாச் சுற்றம்
நிவந்துஉற்ற பலகோடி பவமோ கத்தால்நீ
பகைநீ உறவு என்பர் நிமிடம்தோறும்
உவந்துற்ற மயக்கு இதுவாம் பரமார்த்தத்தால்
உலகுஎல்லாம் பகையாகும் உறவுஆகும்

*(உலகோர் அனைவரும் சுற்றத்தாரே, கோடிக்கணக்கான பிறவிகளில் பிறந்து இறந்து மோகத்தால் கணம்தோறும் நீ என்பகைவன், உறவோன் என்னும் மயக்க உணர்வு தோன்றும்.)*

என்றும், **சைவசமய நெறி,**

உறவுபகை ஆசை வெறுப்புஉள்ளச் சழக்கும்
அறினே பிறவி அறும்.

*(உறவும் பகையும் விருப்பும் வெறுப்பும் மனக்குற்றங்களும் நீங்கின் பிறவி நீங்கும்.)*

என்றும், **சிவபோக சாரம்,**

ஆர்பெரியர் ஆர்சிறியர் ஆர்பகையர் ஆர்உறவர்
சீர்பெரியர் ஆனந்த சிற்சொருபர் - பேர் பெரியர்

எங்கு எங்கும் தாமாய் இருந்து சடசித்து அனைத்தும் அங்கங்கு இயற்றுவதனால்

*(பெருமையுடைய இறைவனொருவனே எவ்விடத்தும் நீக்கமற நிறைந்து நின்று, சடமுஞ்சித்துமாய எல்லாப்பொருள்களையும் நடத்துகிறான்.)*

மற்றும் வருவனவற்றால் காண்க.

ஆண்டகை யீசனை யன்றியொன் றின்மையால்
வேண்டிய செய்வாரென் றுந்தீபற
விதிநிடே தங்களற் றுந்தீபற 99

*ஆண்டகை ஈசனை அன்றி ஒன்று இன்மையால்*
*வேண்டிய செய்வார் என்று உந்தீபற*
*விதிநிடே தங்கள் அற்று உந்தீபற*

என்பது, உள்ளன, இல்லன, செய்யப்படுவன, செய்யப்படாதன, உயர்ந்தன, தாழ்ந்தன, நான், பிறன் என்பன ஆதிய அனைத்தும் பரமே ஆதலால், அவ்வுண்மை அறிந்த ஞானிகளாயினோர் இச்சைப்படியே செய்யா நிற்பர். விதி நிடேதங்கள் ஒழிந்து என்றவாறு.

விதிநிடேதங்கள் ஒழிந்து என்றமையால் அவ்விரண்டனையும் பற்றுதல் விடுதலில்லை என்றதெனக் கொள்க. இதற்குப் பிரமாணம், **திருவாசகம்,**

புத்தன் முதலாய புல்லறிவில் பல்சமயம்
தத்த மதங்களில் தட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தம் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
அத்தன் கருணையினால் தோள்நோக்கம் ஆடாமோ

*(என் சித்தத்தைச் சிவமயமாகச் செய்து, யான் செய்த செயல்களையே தவமாகச் செய்த எம் இறைவனது கருணையைப் பாடுவோமாக!)*

என்றும், **பிரமகீதை,**

ஓதும் இப் பரம்பெரும் பொருள் உணர்ந்தவன் செய்வது
ஏதும்இல்லை ஞானமும் இலை இரண்டு இலாமையினான்
நீதி வன்னம் ஆச்சிரமும் நிடேதமும் விதியும்
சாதி நல்வினை தீவினை சகலமும் இலவே

*(ஈசனை அன்றி வேறு ஒன்றில்லை என்றும் உணர்ந்தவன் செய்ய வேண்டிய செயலும் அறிய ஞானமும் இல்லை.)*

என்றும், **மெய்ஞான விளக்கம்,**

மதிசெய் மாமறை வன்னாச் சிரமிகள்
விதிசெயா விடில் வெந்நரகு என்றது
துதிசெய்து உற்றஅதிவன்னாச் சிரமிகள்
எது செய்தால் அதுவே தவம் என்றதே

*(வருணாச்சிரம் கடந்தவர்கள் எது செய்தாலும் அதுவே தவம் என்பர்.)*

என்றும், **ஒழிவில் ஒடுக்கம்,**

நாயேறி வீழ்ந்தென்நடா துகில்என் ஞானியர்க்குப்
பேயாம் சகம் பழித்தென் பேணுகிலென் - தோயார்
பெருமை சிறுமையிலை பின்னும் முன்னும் இல்லை
வரைவுஅற்று வேண்டிய செய்வார்

*(ஞானிகட்குப் இகழ்ச்சியும் புகழ்ச்சியும் பெருமையும் சிறுமையும் இல்லை. ஆதலில் சுத்தமாகிய அருள் வடிவாயிருந்து அளவின்றித் தாம் வேண்டியவாரே திருவிளையாட்டு ஆடுவார்.)*

அன்றியும்,

சாவே பெருநோன்பாச் சந்தற்ற சத்தியர்க்குத்
தேவாரம் காலம் தியானம் அறம் - பாவம்
விதிவிருத்தம் பேசுகைக்கு வேதம்ஆகமங்கள்
அதிசயிக்கும் மேல் உரைப்பார்ஆர்

*(காற்றால் உதிர்ந்த மனமுள்ள மலர்களை எடுத்து இறைவனின் தாமரைமலர் போன்ற திருவடிகளைப் பூசிப்பான்.)*

மற்றும் வருவனவற்றால் காண்க.

ஓங்கரு ளீசனோ டொன்றியே நின்றோரு
மீங்கரு ணீங்காரென் றுந்தீபற
எல்லா வுயிர்க்குமென் றுந்தீபற 100

*ஓங்குஅருள் ஈசனோடு ஒன்றியே நின்றோரும்*
*ஈங்குஅருள் நீங்கார் என்று உந்தீபற*
*எல்லா உயிர்க்கும் என்று உந்தீபற*

என்பது, உயர்ந்த கருணையே வடிவாக உடைய பரம் பொருள் உடனேயே கூடி இரண்டறக் கலந்துள்ள முத்தரும் இத்தசைக்கண் உண்டாகிய சராசரங்கள் இடத்து எல்லாம் அருளை நீங்கார் என்றவாறு

அஃது எங்ஙனம் எனில், ஆரிட ஞானிகள் விதிநிடேதம் கடந்து வேண்டிய செய்வார் ஆதலின் உயிர்கட்கு இதம் செய்ய வேண்டும் என்னும் விதியினையும் பற்றுதல் விடுதல் இல்லை. என்னில் அது கூடாது. அன்னோர் உயிர்கட்கு இதம் செய்தலே இயல்பு. அஃது யாதால் எனில். இரும்புக்குச் சுடும் தன்மை இன்மையாயினும் கனலோடு கூடிய இடத்து அதனது கடும் தன்மையைத் தான்பற்றி நின்றது போல பொருளுக்கு பேரருளே சொருபம் ஆதலின் அப்பொருளினோடு இரண்டறக் கலந்து நின்றோரும் இத்தசைக்கண் எல்லா உயிர்களிடத்தும் செயும் இதா அகிதங்களெல்லாம் மாயா உருவத்திற்கே ஒழிய நித்தியவிபுவாய ஆன்மாக்கட்கு இல்லை எனும் உண்மை அறிந்துளோர் ஆயினும்,

அவ்வுணர்வு பெத்தத்தில் தமக்கு இல்லை போலும் மற்றைய உயிர்கட்கும் அஃது இன்மையால்அவற்றினது வருத்தத்தை நோக்கி அருளினை நீங்கார் என்பதே துணிவு. நின்றோரும் என்ற உம்மையான் முத்திபெற முயல்வோர்க்கு அருளே தலையாக வேண்டப்படும் என்பதூஉம் அருளில்லோர் சீவன் முத்தர் அன்று என்பதூஉம் காட்டிற்று எனக் கொள்க. இதற்கு பிரமாணம், **தேவிகாலோத்தரம்,**

நடுங்காமல் எவ்வுயிரும் நறுக்காமல் துரும்பு அனைத்தும்
பிடுங்காது முதல்எவையும் பிரசமலர் கொய்யாது
விடுங்காலால் ஊழ்த்து உதிர்ந்த விரைமலர்கள் அவை ஏந்தி
அடும்காலன் தனையட்ட அம்புயங்கள் அருச்சிப்பான்

*(உலகத்து உயிர்களையெல்லாம் தம் குழந்தைகளாகப் பாவித்தல் இயல்பாகும்.)*

என்றும், **பட்டணத்துப் பிள்ளையார்,**

மகவெனப் பல்லுயிர் அனைத்தையும் ஒக்கப் பார்க்கும்

*(உலக உயிர்களைத் தம்குழந்தைகளாகப் பாவித்தல் இறை இயல்பாகும்.)*

என்றும், **பகவத் கீதை,**

இருவகை உயிர்க்கும் இனியனாய் இன்ப
துன்பம் யான்என்னது என்று அறியாது
ஒரு பொருளாலுங் குறைவு பாடு இன்றி
உள்ளமும் ஒருவழிப் படரப்
பொருவரும் துணிவும் கருணையும் புரிந்து
புலன் தெரி உணர்வை என்பாலே
மருவி நின்று ஒழுகும் யோகி என்பவன் காண்
மன்ன மற்றுஎனக்கு வேறு இனியான்

*(மன்னனே! குறையில்லா உள்ளத்துடன் ஒருவழிப்பட ஒப்பற்றத் துணிவும் கருணையும் உடையவனாய் ஐம்புல உணர்வை என்பால் கலந்து நின்று ஒழுகும் யோகியே எனக்கு இனியவன்)*

என்றும், **ஞானவாசிட்டம்,**

உள்உணர்வில் இன்புறுவோன் பொறிகளால்
  கருமங்கள் உய்ப்போனாயும்
தள்ளுசுக துக்கவசம் சாராதோன்
  அனவரதம் சமாதி உற்றோன்
உள்ளுகின்ற தனைப்போல் எவ்வுயிரும் எனப்
  பிறர் பொருள்கள் ஓடே என்ன
எள்ளு பயத்தான் அன்றி இயல்பாலே கண்டானே
  எல்லாம் கண்டோன்

*(ஆன்ம அறிவால் இன்பத்தை அடைகின்றவனாயும் பொறிவழி செயல்களையும் சுகத்துக்க வசத்திதல் அடையாதவனாயும் இருக்கின்றவன் எக்காலமும் சமாதியே பொருந்தினவன் ஆவான்.)*

என்றும், **தத்துவசரிதை,**

ஊன்ஒன்று நசைத்திறம் ஒன்றும் உணர்த்திலானை
தீனம் செயிராக மயக்கொடு சேர்விலானை
மோனந் தனம்என்று மகிழ்ந்த மனத்தினானைத்
தானென்று அனைத்து உயிரும் பரி தன்மையானை

*(மௌனமே செல்வம் என்று மகிழும் மனம் உடையானை அனைத்து உயிரும் தானே என்று பரியும் தன்மையனே மெய்ஞ்ஞானி எனலாம்.)*

என்றும், **திருவள்ளுவர்,**

நல்லாற்றான் நாடி அருளாள்க பல்லாற்றால்
தேரினும் அஃதே துணை

*(நல்ல வழியால் ஆராய்ந்து, கருணை உடையவராக விளங்குக, பல வழிகளில் ஆராய்ந்தாலும் அருளே மனித வாழ்க்கைக்குத் துணை.)*

அன்றியும்,

பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்து ஒழுகுவார்

*(உயிர்கள் மாட்டுச் செய்யப்படும் அருளைத் தவிர்த்துக் கொடுமைகளைச் செய்து ஒழுகுவாரைப் பொருள் நீங்கிய பொச்சாந்தார் என்பர்.)*

அன்றியும்,

அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக்கடை

*(பிறருக்கு ஏற்பட்ட துன்பத்தைத் தனக்கு வந்துற்ற துன்பம் போன்று கருதாதவனுக்கு, அவனிடமுள்ள அறிவினால் ஏற்படக்கூடிய பயன் ஏதேனும் உண்டோ?)*

என்றும், **சித்தாந்தகரணம்,**

ஐயைந்து உருவும் அருளான் உயிர்க்கு ஆய
ஐயன் அருளிங்கு அடைந்தோரும் - வெய்யது
அடையும் அழலார் அயம்போன்று அருளை
உடையார் அனைத்துயிர் பாலும்

*(இறைவன் திருவருளால் உடலாகிய உருவைப் பெற்ற ஆன்மாக்களும் இறைவன் அருளைப் பெற்று வாழும் அருளுடையவர்களே ஆவர்.)*

என்றும், **அருட்பிரகாசம்,**

உயிர்நித்தம் என்று அறிந்தாலும் நல்லோர் பல்லுயிர்கள் உற்ற
துயருக்கு இரங்கல் புதுமை கொல்லோ அருட்தோன்றல் அந்நாள்

செயிருற்ற தேவர்முறை கேட்டு இரங்கித் திருஉளத்து ஊடு
அயர்வுற்று உகுத்த கண்ணீரக்க மாமணிஆய்த்து எனிலே

*(ஆன்மாக்கள் அழிவற்றவை என்று அறிந்தாலும் அருள்மிக்க நல்லோர் அவ்வுயிர்களுக்காக இரங்குதல் புதுமை அன்று.)*

என்றும், **ஞானசாகரம்,**

மருளுறும் எவையும் நூறி மயக்கறத் தெளிந்துளோர்க்கு
மருளறத் துறக்கலாகா அயலொரு பொருளும் இல்லாத்
தெருளுறு முறைமையானும் சிவம் எவர் உளமும் மன்னும்
அருளினை அறிதலாலும் அவர் தொழில்அருள்அறந்தான்

*(யாவர் உள்ளத்திலும் சிவபெருமான் நிலை பெற்று இருக்கும் அருள் குணத்தை அறிதலால் ஞானிகளின் தொழில் அருள் அறமாகவே உள்ளது.)*

என்றும் வரும். மற்றும் வருவனவற்றால் காண்க.

ஆனந்தம் எய்தினோர் என்னும் செய்யுள் தொடங்கி இச்செய்யுள் காறும் ஞானிகளது ஆசாரம் கூறினார் எனக் கொள்க.

| | | |
|---|---|---|
| அவிரோத உந்தியார் | (100) | ௧௦௦ |
| உதாரணப் பாடல் | (536) | ருங௬ |
| ஆகப் பாடல் | (636) | ௬ங௬ |

*முற்றுப் பெற்றது.*

*ஆனந்த மோனம் வரும் ஆசையறும் எப்பொருளும்*
*மோனந்த நிட்டைஎன முன்னம்வரும் தேனந்தும்*
*உந்தியார் நூறும் உதாரணத்தோடே படித்த*
*புந்தியார்க்கு ஈதே பொருள்.*

# அவிரோத உந்தியார் செய்யுள் முதற்குறிப்பு

## அகர வரிசை

## அவிரோத உந்தியார் உதாரணச்செய்யுள் முதற்குறிப்பு

### அகர வரிசை

